

அவதார ஸ்தலமான மணக்காலில் ஸேவைதரும்

மணக்கால் நம்பி

ஆளவந்தாரை ஐசுவரியத்தைத் துறக்கச்செய்து
வைணவத்திற்கு அளித்த உத்தமர்

# மணக்கால்நம்பி வைபவம்

மணக்கால்நம்பி மூன்பே பன்னிரண்டுஸம்வத்ஸரம் ஆசார்ய கைங்கர்யஞ் செய்துகொண்டிருக்க, உய்யக்கொண்டார் தேவிகள் திருநாட்டுக்கெழுந்தருளினார். பின்பு திருமாளிகைக் கைங்கர்யமும் செய்துகொண்டிருக்கும்போது ஒருநாள் ஊர் பெண்பிள்ளைகள் திருக்காவேரியில் குளித்துப் [1]பத்தாந்நம் புஜிக்கப்போக, உய்யக்கொண்டார் பெண்பிள்ளைகளிருவரையும் அழைத்துக்கொண்டுபோய்ப் புஜிப்பித்துவரும்போது பெண்பிள்ளைகள் முன்னே வழிதப்பி வந்து ஒருவாய்க்கால் சேறுயிருக்கக் கண்டு திகைத்து நிற்க, தாமும் அங்கு ஏறவந்து அவர்களைத் தம்முதுகிலே அடியிட்டுப்போகும்படி பண்ணித் தான்குளித்துவருவதற்கு முன்னே உய்யக்கொண்டாரும் இச்செய்தியைக்கேட்டு ப்ரீதராய் இவரும் வந்தடிபணிந்தவாறே தந்திருவடிகளிரண்டையும் அவர் திருமுடியிலமர்த்தியருளி, இது நம்மாசார்யர் நமக்கு ப்ரஸாதித்தருளின பாரிதோஷிகமென்றருளிச் செய்ய, நம்பியும் "உற்றேனுகந்து பணிசெய்து உன்பாதம், பெற்றேன் ஈதே யின்னம் வேண்டுவதெந்தாய்" என்று விண்ணப்பஞ் செய்ய, உய்யக்கொண்டாரும் உகந்தருளினார்.

———

1. கட்டுச்சாதம்

# ஆளவந்தார் வைபவம்

ஆஷாடே சோத்தராஷாடா ஸம்பூதம் தத்ர வை புரே |
ஸிம்ஹாநநாம்ஸம் விக்யாதம் ஸ்ரீயாமுநமுநிம் பஜே ||

பின்பு நாதமுநிகளும் தம் குமாரரான ஈஸ்வரமுநிகளுக்குக் கலியுகத்தில் ௩௦௪௮-வதான தாதுவர்ஷம் ஆடிமாஸம் உத்தராஷாடா நக்ஷத்ரத்தில் ஒரு குமாரரவதரித்தருள, அவருக்கு யமுனைத்துறைவனென்கிற திருநாமம் [1]சாத்துமென்று ஈஸ்வரமுநிகளுக்கும், திருமந்த்ராதி ஸமஸ்த விசேஷார்த்தங்களையும் [2]ப்ரஸாதியுமென்று உய்யக்கொண்டாருக்கும், யோக ரஹஸ்யத்தை ப்ரஸாதியுமென்று குருகைகாவலப்பனுக்கும் நியமித்தருளி யோகத்திலெழுந்தருளியிருந்தார்.

பின்பு ஈஸ்வரமுநிகளும் அந்தக் குமாரருக்கு ஜாதகர்மத்தையும்பண்ணி யமுனைத்துறைவரென்கிற திருநாமத்தையும் சாத்தினர். பின்பு உய்யக் கொண்டாரும் கோயிலிலே அரக்தராய் எழுந்தருளியிருக்கும்போது, தமக்கு நாதமுநிகள் நியமித்த கைங்கர்யத்தை மணக்கால் நம்பிக்கு நியமித்தருளி, 'நான் செய்யப் பெற்றிலேனே' என்று நொந்துநிற்க, நம்பியும் அப்படியே 'நாதமுநிகள் திருப்பேரனார்க்கு அடியேனைக் கொண்டு செய்கிற கைங்கர்யம் தேவரீர் செய்கிற கைங்கர்யமன்றோ?' என்று விண்ணப்பஞ் செய்ய உய்யக் கொண்டாரும் உகந்தருளினார்.

பின்பு ஈஸ்வரமுநிகள் அந்தக் குமாரருக்கு [3]அந்நப்பிராசந சௌளங்களைச் செய்து உபநயநஞ் செய்தருளும் போது மணக்கால் நம்பி எழுந்தருளி திருவிலச்சினை ப்ரஸாதித்து திருமந்த்ரத்தையுமுபதேசித்தருளினார்.

பின்பு நாதமுநிகளும் "*குருபுத்ர பௌத்ராதிகளும் வித்யாதாநத்திற்கு ப்ரஸஸ்த பாத்ரங்கள்" என்றும், "[4]ஜ்ஞாந ஸந்ததியாலே முற்பட்டவர்களும் குருக்களாக வரணீயர்" என்றுஞ் சொல்லுகிற விசேஷார்த்தங்களை ப்ரகாஸியாநின்று கொண்டு, யமுனைத்துறைவரையுங் குளிரக்கடாக்ஷித்து மகிழ்ந்தருளினார்.

---

1. அளியும், 2. போதியும் 3. வேதமுறைப்படி அன்னம் ஊட்டுதல் குடுமிவைத்தல் 4. ஜ்ஞாநபரம்பரையாலே.

---

* இவ்விடத்தில் ஸம்ப்ரதாயாந்தரஸ்த்தர்கள் சில க்ரந்தங்களில் ஸ்ரீமந்நாதமுநிகள் முந்நூற்றுமுப்பது திருநக்ஷத்ரம் எழுந்தருளி



அவதார ஸ்தலமான காட்டுமன்னார்கோயிலில் ஸேவைதரும்

ஸ்ரீ: ஆளவந்தார்

(ஸ்ரீபாஷ்யத்தின் செந்நிலம், கீதாபாஷ்யத்தின் வித்து. வைணவத்தின் செல்வம்)

யாமுனாசார்யர், யமுனைத்துறைவர் என்று போற்றப்படுபவர்.

பின்பு ஒருநாள் நாதமுநிகள் நீராடி எழுந்தருளும்போது, தம் பெண்பிள்ளைகள் வந்து 'ஐயரே! இரண்டு வில்லிகளும் ஒரு பெண்ணும் ஒரு குரங்கைக் கொண்டுவந்து 'நாதமுநிகள் எங்கே?' என்று கேட்க, நாங்களும் நீராடி வருவரென்று சொன்னோம். சடக்கென வரச் சொல்லீரென்று சொல்லிப் போனார்கள்" என்ன, நாதமுநிகளும் "எங்கேறப்போனார்கள்?" என்ன, "தென்றிசையேறப்போனார்கள்" என்றார்கள். அதைக்கேட்டு "இருவராய்வந்தாரென்முன்னே நின்றார், என்னும்படி நீங்கள் கண்டுமகிழ்ந்தீர்கள்; நான் காணப்பெற்றிலேனே" என்று நொந்து "காணுமாறருளாய்க் காகுத்தா" என்று புலம்பி, அத்திசையை நோக்கிச்சென்று கங்கைகொண்ட சோழபுரத்தருகே வந்து, "இப்படி வில்லிகளைக் கண்டீர்களோ?" என்று கேட்க, அவர்களும் "இத்திசையே போனார்கள்" என்றவாறே அவ்விடம் தேடிப்போக, அங்கு அழகியசிங்கராய் ஸேவை ஸாதித்தருள, அவ்வளவிலும் 'த்ருஷ்ட ஏவ ஹி நஶ்ஶோகமபநேஷ்யதி ராகவ:" என்கிற சக்ரவர்த்தித்திருமகன் நம்மிடம் தேடி வந்தும் காணப்பெற்றிலேன்! என்று முசித்துக் கிடக்க. அப்போது பிராட்டியோடும் இளையபெருமாளோடும் திருவடியோடும் கலந்து சக்ரவர்த்தித்திருமகன் ஸேவை ஸாதித்தருள, "என்னமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்னும்படி அவன் திருவடிதொழுது திருநாட்டுக்கெழுந்தருளினார். இச்செய்தியைக் குருகைகாவலப்பனுள்ளிட்டார் கேட்டு [1]வ்யாகுலப்பட்டு ஈஶ்வர

1. கலங்கி

யிருந்ததாயும், பின்பு ஈஶ்வரமுநிகளுக்கு ஒரு குமாரர் அவதரிக்கப் போகிறார். அவருக்கு யமுனைத்துறைவர் என்று திருநாமம் சாத்தித் திருமந்த்ர மந்த்ரார்த்தாதிகளையும் உபதேஶியும் என்று உய்யக்கொண்டாருக்கு நியமித்தருளித் திருநாட்டுக்கெழுந்தருளினதாயும் எழுதியிருக்கிறார்கள் ஸ்ரீமந்நாதமுநிகள் முந்நூற்றுநாற்பது திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்து ஆளவந்தாரின் எட்டாவது திருநக்ஷத்ரத்தில் திருநாட்டுக்கெழுந்தருளினார். ஆகையாலிறே ஸம்ப்ரதாய பரிஶுத்தி ரஹஸ்யத்தில், 'நாதமுநிகள் தம்முடைய திருப்பேரனாரான ஆளவந்தாருக்குத் தாம் உபதேஶியாதே தம்முடைய ஶிஷ்யர்களை இவருக்கு உபதேஶியுங்கள் என்று ஆஜ்ஞாபித்தது புத்ர பௌத்ராதிகளும் வித்யாஜநகத்திற் ப்ரஶஸ்தபாத்ரங்களென்றும், ஜ்ஞாநஸந்ததியாலே முற்பட்டவர்களும் குருக்களாக ஆதரணீயரென்றும் ஆகாங்க்ஷைபண்ணிக்கே...ப்ரவ்ருத்தமாகாதென்றும் தெளிவித்தபடி' என்று நம தேஶிகன் அருளிச்செய்தார்.

முநிகளைத் தேற்றி அவரைக்கொண்டு நாதமுநிகளுடைய திவ்ய விக்ரஹத்தை *ப்ரஹ்மமேத விதியாலே ஸம்ஸ்கரிப்பித்து, வீரநாராயணபுரத்தேற எழுந்தருளி மற்றும் [1]சரமகைங்கர்யங்களையெல்லாம் பரக்கச் செய்தருளினார்கள்.

நாதமுநிகள் திருநக்ஷத்திரம் ஆனி அநுராதை

பின்பு குருகைகாவலப்பனும் நாதமுநிகள் நியமநப்படிக்கு யோகக்ரமத்திலெழுந்தருளியிருந்தார்.

பின்பு உய்யக்கொண்டாரும் நாதமுநிகள் திருநாட்டுக்கெழுந்தருளினாரென்று கேட்டு [2]சோகார்த்தராய்த் தேறி ஸ்ரீசூர்ணபரிபாலநஞ்செய்தருளி முதலிகளுக்கு விசேஷார்த்தங்களை அருளிச்செய்து கொண்டிருக்கும்போது, திருக்கண்ணமங்கையாண்டான் ஒரு ஜபகால விசேஷத்தில் ப்ராக்ருதாபிமாநத்தாலே இரண்டு நாய்களுக்கும் இரண்டு மநுஷ்யர்களுக்கும் தேஹநாசத்தைக்கண்டு, "அப்ராக்ருத நித்ய ஸம்பந்தியான எம்பெருமான் நிற்க, நாமும் ந்யஸ்தபரனான பின்பு இனியொன்றும் செய்யவேண்டுவதில்லை" என்று ஆஹார நித்ராதிகளையும் ஸந்த்யாவந்தநாதிகைங்கர்யங்களையும் விட்டுக் கேவலம்பகவத்த்யாநத்தை அநுஷ்டித்துக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினாரென்று கேட்டருளி,போரஉகந்து,"ஆஹார நித்ராதிகளை அங்கீகரித்தவர்களுக்கு ஸந்த்யாதிகைங்கர்யங்கள் அவஸ்ய கர்தவ்யங்களென்று அநுஷ்டித்த நம் நாதமுநிகளையும் அதிசயித்தார் திருக்கண்ணமங்கையாண்டான்" என்று அருளிச்செய்து திருநாட்டுக்கெழுந்தருளினார். உய்யக்கொண்டார் திருநக்ஷத்ரம் சித்திரையில் க்ருத்திகை.

1. இறந்தபிறகு செய்யும் காரியங்கள். 2. துக்கத்தால் வருந்தியவராய்.

*ப்ரஹ்மமேதம், பித்ருமேதம் என்று இருவகை ஸம்ஸ்காரம் இறந்தவர்களுக்கு உண்டு அதில் ஆண்களில் வேத வேதாந்த மறிந்தவர்களுக்கு மட்டும் ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம். வேத வேதாந்தமறியாத ஆண்களுக்கும், பெண்கள் யாவருக்கும் பித்ருமேத ஸம்ஸ்காரம்தான் உண்டு.

பின்பு மணக்கால்நம்பி முதலானவர்கள் மிகவும் ஶோகார்த்தர் களாய்த் தாங்களை தேறியிருக்க, நம்பியும் உய்யக்கொண்டாருக்குச் சரமகைங்கர்யங்களை யெல்லாஞ் செய்தருளி, மற்றுமுள்ள முதலிக ளையும் கூட்டிக்கொண்டு, வேதாந்தப்ரவசநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

பின்பு யமுனைத்துறைவர் அத்யயநம் பண்ணுகிற க்ரமத்தைக் கண்டு இரண்டாந்தரம் சொல்லவேண்டாதபடி இருக்கிறது என்ன ஆஶ்சர்யம் என்று அனைவரும் ஆநந்திப்பர்கள். இவருக்குத் திருக் கல்யாணமுஞ் செய்தருளி ஈஶ்வரமுநிகளும் திருநாட்டுக்கெழுந் தருள, யமுனைத்துறைவரும் அவருக்கு ப்ரஹ்மமேதம் முதலான சரமகைங்கர்யங்களை எல்லாஞ் செய்தருளினர்.

அநந்தரம் யமுனைத்துறைவரும் மஹாபாஷ்ய பட்டருடனே ஶாஸ்த்ராப்யாஸம் பண்ணுகிறகாலத்தில், ராஜாவின் பக்கல் ஆஸ் தான பண்டிதனான ஆக்கியாழ்வானுக்கு வித்வான்களெல்லாரும் கப்பங்கொடுத்துப் போருகையாலே மஹாபாஷ்யபட்டர் பக்கல் கப்பத்திற் நத்தரவு வந்தவாறே அவரும் முசித்துக் கிடக்க, யமுனைத் துறைவர் இதென்னவென்று கேட்க, அவரும் இச்செய்தியைச் சொல்ல, அத்தைக்கேட்டருளி அந்தப் பத்ரத்தைக் கிழித்துவிட்டு,

"ந வயம் கவயஸ்து கேவலம் ந வயம் கேவலதந்த்ரபாரகா: |
அபி து ப்ரதிவாதிவாரண ப்ரகடாடோப விபாடநக்ஷமா: ||"

என்கிற ஶ்லோகத்தை அருளிச்செய்து எழுதி அனுப்பினர்.

ஆக்கியாழ்வானும் ராஜாவுக்கு அறிவிப்பிக்க, ராஜாவும் யமு னைத்துறைவரை வரும்படி [1]ஶாஸநம் வரவிட்டான். அந்த ராஜ ஶாஸநத்தையும் யமுனைத்துறைவர் கிழித்துவிட்டார். அத்தை ராஜா கேட்டுக் கோபித்துக்கொள்ள, ராஜபத்நியான திருவரங்கத்தம்மை யும் "யோக்கியர்கள் பக்கல் செய்ய வேண்டியதைச் செய்தால் அவர்களும் வருவர்கள், இல்லாவிடில் வரமாட்டார்கள்" என்ன, ராஜனும் தண்டிகை முதலான வரிசைகளை அனுப்பி அழைத்து வர விட, யமுனைத் துறைவரும் அந்தத் தண்டிகையிலேறி ராஜ ஸ்தலத்தில்,

1. கட்டளை அனுப்பினன்.

“ஆஸைலா தத்ரிகந்யா சரணகிஸலய ந்யாஸ தந்யோபகண்டா-
தாரக்ஷோந்த ஸீதாரிகமல ஸமுல்லாஸஹேதோஸ்ச ஸேதோ: |
ஆச ப்ராச்ய ப்ரதீச்ய க்ஷிதிதர யுகளாதர்க சந்த்ராவதம்ஸாத்
மீமாம்ஸா ஸாஸ்த்ரயுக்ம ஸ்ரம ம்ருதிதமநா ம்ருக்யதாம் மாத்ரு
ஸோந்ய: ||”

என்கிற ஶ்லோகத்தைச் சொல்லிப் பிருது கூறி வைக்க, ஆக்கியாழ்வானும் அதைக்கேட்டு அதிகுபிதனாய் “இவருடன் [1]தர்க்கிக்க வேண்டும்” என்ன, அரசனும் அதை யமுனைத்துறைவருக்குச் சொல்ல, யமுனைத் துறைவரும் “மத்யஸ்தர் முன்பாகவே வாதம் பண்ண வேண்டும்” என்றருளிச் செய்ய, மஹிபதியும் அவ்வாறே வித்வான்களை அழைப்பித்து ஒரு வாதஸ்தானத்தில் கூட்ட, ராஜபத்நியும் ராஜாவைப் பார்த்து “முன்பு நமக்கு ஸைவ வைஷ்ணவத்தில் [2]விவாதம் வந்தவாறே நான் பண்ணின ப்ரதிஜ்ஞைக்குப் பகவதாநுகூல்யமிருந்து இப்போது யமுனைத்துறைவர் எழுந்தருளினார். ஆகையால் இருவருக்கும் ஜயாபஜயங்களில் என் செய்யக் கடவது?” என்ன, ராஜனும் “ஜயித்தவருக்கு நாம் அர்த்த ராஜ்யம் கொடுத்து, தோற்றவரும் ஆள் செய்யும்படி பண்ணக்கடவது” என்ன,

அவ்வளவில் ஆக்கியாழ்வானும் யமுனைத்துறைவரைப் பார்த்து “உம்முடைய ஸத்வாதத்தை அஸத்வாதமாக்கக் கடவேன். உம்முடைய அஸத்வாதத்தை ஸத்வாதமாக்கக் கடவேன்” என்ன, யமுனைத்துறைவரும் அவனைப் பார்த்து,

“ராஜாயம் ஸார்வபௌம:,
ராஜபத்நீயம் [3]பதிவ்ரதா,
த்வந்மாதா [4]ந வந்த்யா”

என்கிற மூன்று வார்த்தை அருளிச் செய்ய, ஆக்கியாழ்வானும் [5]உத்தரஞ் சொல்ல மாட்டாதே இருந்தான். பின்பு வேதாந்தத்தில் அர்த்த விசாரத்திலும் உத்தரஞ் சொல்ல ஸமர்த்தனல்லாமையாலே கீழ்ப்பட்டு [6]அதோமுகனாயிருக்க, ராஜபத்நியான திருவரங்கத் தம்மையும் ‘என்னை ஆள வந்தீரோ!?’ என்று விண்ணப்பஞ் செய்து

1. வாதிக்க 2. சர்ச்சை 3. கற்புடையவள் 4. மலடியல்ல 5. பதில் 6. தலைகுனிந்து.

திருவடி தொழுது ராஜாவுடனே யமுனைத்துறைவரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு தம் மணிமாடமாளிகையிலே புகுந்தான்.

ராஜாவும் அவருக்கு ஆளவந்தாரென்று திருநாமம் ஸமர்ப்பித்து அர்த்த ராஜ்யத்தையும் கொடுத்து ஆக்கியாழ்வானையும் ஆள் செய்யச் சொல்ல, ஆளவந்தாரும் அவன் ப்ரஸித்த வ்ருத்த வித்வானுகையாலே ஆள் செய்யவேண்டுவதில்லை யென்றருளிச் செய்து [1]பத்நீஸஹிதராய் ராஜபோகத்தில் ஸுகமாக எழுந்தருளியிருந்தார். இப்படியிருக்க நெடுங்காலம் கழிந்தவாறே சொட்டைநம்பி, தெய்வத்துக்கரசுநம்பி, பிள்ளையரசு நம்பி, திருவரங்கப் பெருமாள் என்று நான்கு குமாரர்கள் அவதரித்தார்கள்.

அநந்தரம் இந்த வ்ருத்தாந்தத்தை மணக்கால் நம்பியும் கேட்டருளி ஆளவந்தாரைக் காணவேணுமென்ற பேராசையோடே எழுந்தருள, அவ்விடம் ராஜபதமாய் கட்டும் காவலுமாயிருக்கையாலே ஆளவந்தாரைக் காணமாட்டாதே திருமடைப்பள்ளியில் கைங்கர்யபரரை நோக்கி "ஆளவந்தார் விரும்பி யமுது செய்யும் கறியமுதென்னே?" என்று கேட்க,அவரும் தூதுளையென்று சொல்ல, நம்பியும் அன்று முதல் ஆறுமாஸம் தூதுளை [2]இட்டு நடத்திப்போக, அவ்வளவிலும் மாஹாநஸிகருக்கு நம்பிஸ்வரூபம் தெரியாமையாலே ஆளவந்தாருக்கு அறிவியாதிருக்க, நம்பியும் ஒருநாள் [3]தவிர்ந்தார். ஆளவந்தாரும் "தூதுளையில்லையோ?" என்ன, மாஹாநஸிகரும் 'ஒரு வ்ருத்தர் நாள் தோறும் தூதுளையிட்டு நிற்பர், இன்று தவிர்ந்தது என்னவோ?' என்று விண்ணப்பஞ் செய்ய, ஆளவந்தாரும் [4]விஸ்மயப்பட்டு "இனி அவர் வந்தவாறே நம்மிடத்தில் வரும்படி சொல்லுங்கள்" என்ன, அவர்களும் மறுநாள் நம்பியைக் கண்டு இச் செய்தியை விண்ணப்பஞ் செய்து, ஆளவந்தார் பக்கல் எழுந்தருளப் பண்ணி வைக்க, ஆளவந்தாரும் நம்பியைக் கண்டு [5]ப்ரத்யுத்தாநாபிவாதந பூர்வகமாகத் திருவடி தொழுது [6]ஓராசார்யாஸநமிட்டு "பண்டிவரைக் கண்டறிவ தெவ்வூரில் யாமென்றே பயில்கின்றுளால்" என்கிறபடியே [7]ஸந்தித்தராய் "நம் பக்கல் விரும்பிவந்த

1. மனைவியுடன் 2. கொடுத்து வர 3. வராமலிருந்தார் 4. ஆச்சரியப்பட்டு 5. எதிர்கொண்டு வணக்கத்துடன் 6. ஆசாரியனுக்குத் தக்க ஆஸனம் 7. சந்தேகம் கொண்டவராய்.

உமக்கு என்ன வேண்டுவது?" என்று கேட்க, நம்பியும் "நமக்கு வேண்டுவ தொன்றுமில்லை" என்றும், "உம்முடைய பிதாமஹ தநத்தை என் பக்கனின்றும் கைக்கொள்ளக்கடவீர்" என்றும், "அது கைக்கொள்ளுகைக்கு ஏகாந்தமாகச் சில தூரம் போக வேண்டும்" என்றும், "அது கொள்ளுமளவும் நித்யமாக உம்முடைய பக்கல் நான் வந்து போரும்படி [1]அப்பணையிட வேண்டும்" என்றும் அருளிச் செய்ய, ஆளவந்தாரும் அப்படியே கட்டளையிட, நம்பியும் அன்று முதல் [2]கீதார்த்தத்தைப் பதினெட்டு நாளில் அருளிச் செய்ய, ஆளவந்தாருக்கும் ஒருநாளைக்கொருநாள் ஆர்த்தி பிறந்து "அவ் வஸ்துவை ஸாக்ஷாத்கரிக்க உபாயமில்லையோ?" என்ன, நம்பியும் "சரமஶ்லோகத்தை மெய்ம்மைப் பெருவார்த்தையாகையாலே ஏகாந்தத்தில் உபதேஶித்து அர்த்தத்தையும் தெளிவித்துப் பரம புருஷார்த்தமான கைங்கர்யத்தை யிப்ப்ரபத்தியாகிற உபாயத்தை அநுஷ்டித்து ப்ரார்த்தித்தாலல்லது ஆஶ்ரித கல்பகனை எம்பெருமான் தரமாட்டான்காணும்" என்றருளிச்செய்ய, ஆளவந்தாரும் நெல்லுக்குப் பால்கட்டப் பால்கட்ட தலை வணங்குமாபோலே ஶரணாகதி நெஞ்சில் படப்பட ஶரண்ய விஷய [3]ப்ராவண்யாதிஶயம் பெற்றவராய் நம்பியை முன்னமே கைக்கொண்ட ஆசார்யரென்று அறிந்தவராய் இஸ்ஸம்ஸாரத்தில் ருசியில்லாதவராய் இருக்கக்கண்டு அவரைக் கூட்டிக்கொண்டு

"தஸ்மாத் ரங்கம் மஹாபுண்யம் கோ ந ஸேவேத புத்திமாந்"

என்கிறபடியே ஜ்ஞாநப்ரதமாயும் நமன்தமரா லாராயப்பட்டறியாததுமான திருவரங்கத் திருப்பதியில் நம்பியு மெழுந்தருளி, பெரிய பெருமாளைத் திருவடி தொழப் பண்ணி "உம்முடைய பூர்விகர்கள் தேடிவைத்த மஹாநிதி இது!" என்று காட்டியருள, ஆளவந்தாரும் பெரிய பெருமாள் முடிவில்லதோரெழில் நீலமேனியையும் அமலனாதிபிரான் படியே ஸேவித்து,

"பழுதே பல பகலும் போயினவென்றஞ்சி,
யழுதே னரவணை மேற்கண்டு தொழுதேன்"

1. ஆணை 2. கீதையின் அர்த்தத்தை 3. புலமை பெருக.

என்கிறபடியே கண்ணும் கண்ணீருமாய் அநுபவித்து நம்பி திருவடிகளிலே தம் குமாரர்கள் நால்வர்களையும் ஆஶ்ரயிப்பித்து, உபதேஶித்த பாசுரத்தைக் கொண்டு திருவாரமார்பனை திருவரங்கத்தம்மான் திருக்கமலப் பாதங்களிலே "புகலொன்றில்லாவடியே னுன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே" என்கிறபடியே ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணியருளி, இவ்வர்த்தத்தைக் கண்டு எல்லாரும் உஜ்ஜீவிக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றி, ஶ்ரீப்ரபதநமான சதுஶ்ஶ்லோகியையும், பகவத் ப்ரபதநமான ஸ்தோத்ரரத்நத்தையும், ஆகம ப்ராமாண்யத்தையும், ஆத்மஸித்தி ஸம்வித்ஸித்தி ஈஶ்வரஸித்தி என்கிற ஸித்தித்ரயத்தையும், கீதார்த்தஸங்க்ரஹத்தையும் அருளிச் செய்து [1]துர்யாஶ்ரமத்தையும் ஸ்வீகரித்தருளினார்.

அப்போது ஆளவந்தார் திருவடிகளிலே பெரியநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, ஆளவந்தாராழ்வான், பெரிய திருமலைநம்பி, திருமாலையாண்டான், தெய்வவாரியாண்டான், வானமாமலையாண்டான், ஈஶாண்டான், திருமோகூரப்பன், திருமோகூர் நின்றான், தெய்வப்பெருமாள், மாறனேரி நம்பி, திருக்குருகூர்தாஸர், ஈங்கச்சோளாண்டான், ராஜபத்நியான திருவரங்கத்தம்மை, திருக்கச்சிநம்பி ஆகிய இப்பதினறுவர்களும் ஆஶ்ரயித்தார்கள்.

அப்போது மணக்கால் நம்பியும் ஆளவந்தாருடைய ஜ்ஞாந பக்தி வைராக்கியாநுஷ்டானங்களைப் பார்த்து உகந்தருளி "குருகை காவலப்பனிடத்தில் ஒரு ரஹஸ்ய விஶேஷத்தை வைத்து உமக்கு ப்ரஸாதிக்கும்படி நாதமுநிகள் நியமநமாகையால், அங்கேறப்போய் அத்தையும் கைக்கொள்ளீர்" என்றருளிச் செய்ய, ஆளவந்தாரும் 'அறியாக் காலத்துள்ளே' என்கிறபடியே அடியேனை ஆட்கொண்டு திருமந்த்ரத்தை உபதேஶித்து 'சந்மசந்மாந்தரங்காத்தடியார்களைக் கொண்டு போய்' என்கிறபடியே "நிலைபொருந்துங்காலந் தேடி விஶேஷார்த்தங்களையெல்லாம் ப்ரஸாதித்தருளின தேவரீர் நியமநமே அடியேனுக்குக் கைங்கர்யம்" என்று அவர் திருவடி தொழுது தர்ஶந ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்க,

அப்போது மணக்கால் நம்பி திருவடிகளிலே ஆஶ்ரயித்த ஆளவந்தார், சொட்டை நம்பி, தெய்வத்துக்கரசு நம்பி, பிள்ளையரசு நம்பி,

1. நான்காவது ஆச்ரமம் (ஸந்நியாஸம்).

திருவரங்கப் பெருமான், சிறுப்பிள்ளையுடையார்பிள்ளை, திருமாலிருஞ் சோலைதாஸர், வங்கிப்புரத்தாச்சி, அரசு நம்பி என்கிற ஒன்பது திருநாமங்களில் திருவரங்கப் பெருமான் ஆளவந்தார் திருவடிகளிலே அதி [1]ப்ரவணராய் ஆளவந்தாரருளிச் செய்கிற விஶேஷார்த்தங்களையெல்லாம் நெஞ்சிற்கொண்டு எப்போதும் ப்ரபந்தத்தையும் அதனுடைய அர்த்தத்தையும் கேட்பதும் சொல்வதுமாயிருக்கக் கண்டு "இவர் ஆளவந்தாராழ்வார்" என்று எல்லாருமருளிச் செய்ய, ஆளவந்தாரும் இவருடைய திவ்யப்ரபந்தத்தில் இயலோடுமிசையோடும் பாடுகிற ஸாமர்த்யத்தைக் கண்டு, நாதமுநிகள் நியமநப்படிக்குக் கீழையகத்தாழ்வான் மேலையகத்தாழ்வானுபாதி அழகியமணவாளனுக்கு ப்ரபந்தங்களைப் பாடும்படி நியமித்தருள, ஆளவந்தாராழ்வாரும் அப்படியே பாவ ராக தாளங்கள் பொருந்தின திவ்ய ப்ரபந்தத்தை அழகியமணவாளனுக்குப் பாடிவரக்கண்டு இவர் திருவரங்கப்பெருமாளரையர் என்று அருளிச்செய்தார்.

பின்பு மணக்கால் நம்பியும் ஆளவந்தாரைப்பார்த்து, 'இனி மேலும் உம்மைப்போலே ஒருதர்ஶநப்ரவர்த்தகரை உண்டாக்கக் கடவீர்' என்று அருளிச்செய்து, ஆசார்யன் திருவடிகளை த்யாநித்துக்கொண்டு திருநாட்டுக் கெழுந்தருளினர்.

மணக்கால்நம்பி திருநக்ஷத்ரம் மாசிமாஸத்தில் மகம்.

மணக்கால்நம்பிக்கு ப்ரஹ்மமேதாதி சரமகைங்கர்யங்களையெல்லாம் அரசு நம்பியைக்கொண்டு நடப்பிவைத்தருளினர்கள். வங்கிப்புரத்தாச்சியும்

"நிர்திஷ்டா மதுரிபுணா தயாகரேண
ஸ்ரீரங்காதிஷு பஹுதாமஸு க்ஷமாயாம் |
நித்யாஸ் தே ஶுபகுணஸாரயோவதீர்ணாஸ்
ஸம்ஸாரே ந குருவசோ ஹி லங்கநீயம் ||"

என்கிற ஶ்லோகத்தாலே நம்பி திருவுள்ளக்கருத்தை ப்ரகாஶிப்பித்தருளினர்.

பின்பு ஆளவந்தாரும் முதலிகளுடனே வீரநாராயணபுரத்தில் குருகைகாவலப்பன் யோகம் செய்துகொண்டிருக்கிற இடத்தில் [2]யோகபங்கபயத்தாலே பின்புறத்தில்நிற்க, அப்பனும் "சொட்டைக்

---

1. பக்தியுடையவராய் 2. யோகம் கலையுமென்ற அச்சத்தால்.

குலத்தாருண்டோ?" என்று கேட்டருள, "அடியேன் யமுனைத் துறைவன்" என்று விண்ணப்பஞ்செய்து திருவடிதொழுது "அடியேன் சுவர்ப்புறத்தே இருக்கச்செய்தேயும் இப்படி அறியும்படி எங்ஙனே?" என்றுகேட்க, குருகைகாவலப்பனும் "நம்கண்ணன் சொட்டைக்குலத்துத் தெய்வம் ஆகையாலே குலமகனைக்கண்டு திரும்பிப்பார்த்தருளினர். அதுகண்டு நானுமறிந்தேன்காணும்" என்றருளிச்செய்ய, ஆளவந்தாரும் போரஉகத்து "ஸ்தோஷ்யாமி ந: குலதநம் குலதைவதந் தத்" என்கிறபடியே பேராசைப்பட்டு "அடியேனுக்கு அந்தயோகரஹஸ்யத்தை ப்ரஸாதித்தருளவேணும்" என்று ப்ரார்த்தித்துக்கிடக்க, குருகைகாவலப்பனும் [1]முடிபிடித்தெடுத்து "நம்முடைய [2]தேஹாவஸாநத்தில் சொல்லுகிறோம்" என்றும், "அந்தஸமயமும் வருகிற [3]புஷ்யமாஸத்தில் [4]புஷ்யயோகத்தில் [5]அபிஜிந் முஹூர்த்தத்தில் வரப்போகிறது" என்றும் அருளிச்செய்து ஸ்ரீமுகமும் கொடுத்தருளினர். ஆளவந்தாரும் அந்த ஸ்ரீமுகத்தைக்கொண்டு கோயிலேற எழுந்தருளினர்.

பின்பு திருவத்யயநோத்ஸவத்தில் திருவரங்கப்பெருமாளரையர் "கெடுமிடராயவெல்லாம்" என்கிற திருவாய்மொழியை அபிநயத்துடனே பாடுகிறபோது, "கடல் ஞாலம் செய்தேன்" என்கிற திருவாய்மொழியின்படியே தன்னுடம்பு மறந்து பாடுகிற இவர், ஆளவந்தார் திருமுகத்தைப்பார்த்து "நடமினோ நமர்களுள்ளீர்" என்று பல்கால் பாடியருள, ஆளவந்தாரும் இதைக்கேட்டருளி, இதுவும் நம்மாழ்வார் நியமநமென்றறிந்து, திருவநந்தபுறத்தேற வெழுந்தருளி, அந்த எம்பெருமானிடத்திலீடுபட்டுச் சிலநாள் கழிந்தவாறே குருகைகாவலப்பன் ஸ்ரீமுகத்தைப்பார்க்க, அதுவும் [6]அதிக்ரமித்தபடியால் ஶோகார்த்தராய் மீண்டு கோயிலேற எழுந்தருளி.ஆசார்ய [7]விஶ்லேஷத்தாலே நோவுபட்ட தெய்வவாரியாண்டானைத் தேற்றியருளி, 'ஸதாசார்யகடாக்ஷத்தாலே ந்யஸ்தபரனை ப்ரபந்நனுக்கு ஆசார்யநியமநமே கைங்கர்யமென்று துணிவுவேண்டாவோ?' என்றருளிச்செய்ய, முதலிகளும் கேட்டு, "இந்த ஆண்டானாலே பரமார்த்தத்தைத் தெளிந்தோம்" என்று உகந்தருளினர்கள்.

---

1. சுருக்கமாக 2. தேஹத்தின் முடிவு (இறக்கும் தருணம்) 3. புஷ்ய மாஸம் (தை மாதம்) 4. பூச நக்ஷத்திரச் சேர்க்கை 5. பகல் 12 முதல் 1 மணி வரையில் 6. கடந்ததால் 7. பிரிவு.

பின்பு தர்ஶநப்ரவசநம் பண்ணிக்கொண்டு 'இத்தர்ஶநத்திற்குப் ப்ரவர்த்தகராய் ஒருவர் உண்டாகவேணும்' என்று பெரியபெருமாளை ஆளவந்தார் ப்ரார்த்தித்துக்கொண்டிருக்க, முன்பு ஒருகால் திருவாய்மொழிக்கு அர்த்தம் ஸாதிக்கிற காலத்தில் "ஒழிவில்காலமெல்லாம்" என்கிற திருவாய்மொழி யர்த்தத்தைக்கேட்டுப் பெரிய திருமலைநம்பி திருமலையேறப்போக ஆசைப்பட, அதை ஆளவந்தாரும்கண்டு, "இவ்வர்த்தங்களையெல்லாம் இவர்நெஞ்சிற்கொண்டாலல்லது இவ்வளவு ஆசையுண்டாகாது" என்று போரவுகந்து, "இத்தர்ஶநம் இவர்முகமாகத்தழைக்கும்படி பெரியபெருமாள் திருவுள்ளம்" என்றருளிச்செய்து ஸ்ரீபாததீர்த்தம் ப்ரஸாதித்தருள, பெரிய திருமலைநம்பியும் தன் பிதாவான தெய்வத்துக்கரசுநம்பியோடே இரண்டு உடன்பிறந்தார்களையும் அழைத்துக்கொண்டுபோய்த் திருமலையிலே திருவேங்கடமுடையானுக்கு ஸர்வவித கைங்கர்யமும் செய்து கொண்டிருக்க,

அப்போது ஸ்ரீபெரும்பூதூர் ஆஸூரி கேஶவப்பெருமாளும், மதுரமங்கலம் கமலநயநபட்டரும் இவர் உடன்பிறந்தவர்களை [1]விவாஹார்த்தமாகக்கேட்க, "உங்களுக்குத் திருவிலச்சினை மந்த்ரோபதேஶாதிகள் இல்லையே" என்றுச்சொல்ல, "அவைகளையும் ப்ரஸாதித்தருளவேணும்" என்றுகேட்க, நம்பியும் அவர்களுக்குத் திருவிலச்சினை மந்த்ரோபதேஶாதிகளையும்ப்ரஸாதித்தருளி, கேஶவப்பெருமாளுக்குப் பூமிப்பிராட்டியாரென்கிற உடன்பிறந்தாளையும், கமலநயநபட்டருக்குப் பெரியபிராட்டியாரென்கிற உடன்பிறந்தாளையும் வாழ்க்கைப்படுத்தி ருஶ்யஶ்ருங்கர் சக்ரவர்த்திக்கு அநுக்ரஹித்தாப்போலே இவர்களுக்கும் ஸத்புத்ரருண்டாகும்படி அநுக்ரஹித்தருளினார்.

---

1. விவாகம் செய்து கொள்ள

# எம்பெருமானர் வைபவம்

*சைத்ரார்த்ராஸம்பவம் விஷ்ணோர் தர்ஶந ஸ்தாபநோத்ஸுகம் |*
*துண்டீரமண்டலே ஶேஷ மூர்த்திம் ராமாநுஜம் பஜே ||*

பின்பு அவர்களும் தங்கள் தங்கள் ஊரிலே வாழ்கிறகாலத்தில், எம்பெருமான் வேதாந்தஸூத்ரத்திற்கு ஸ்ரீபாஷ்ய முகத்தாலே ஸமீசீநார்த்தங்களைத் தெளிவிக்கைக்காகத் திருவநந்தாழ்வானை ஸ்ரீ பெரும்பூதூரில் ஆஸூரிகுலதிலகரான கேஶவஸோமயாஜிகளுக்குக் கலி சகககூ-ஆவதான பிங்களவர்ஷம் சித்திரைமாஸம் திருவாதிரை நக்ஷத்ரத்தில் குமாரராய் அவதரிப்பித்தான்.

இச்செய்தியைப் பெரிய திருமலை நம்பியும் கேட்டருளி, ஸ்ரீபெரும்பூதூரேறவெழுந்தருளிக் கேஶவஸோமயாஜியாரையுங் கண்டு மகிழ்ந்து, அந்தஶிஶுவையும் குளிரக்கடாக்ஷித்தருளி, அந்தஶிஶுவின் முகவொளியைப் பார்த்து, "'லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:' என்கிறபடியாயிறேஇருப்பது, ஆகையால் 'இளையபெருமான் திருநாமமே தகும்" என்று இராமாநுசனென்று திருநாமம்சாத்தி, [1]ரக்ஷார்த்தமாகத் திருவிலச்சினையும் ப்ரஸாதித்து, இளையாழ்வாரென்றும் கொண்டாடித் திருமலையேற எழுந்தருளினார்.

கேஶவஸோமயாஜியாரும் அவருக்கு [2]ஜாதகர்மாதிகளை [3]யதாகாலத்தில் அநுஷ்டித்து உபநயநாநந்தரம் [4]ஸாங்கோபாங்கமாக அத்யயநத்தைப்பண்ணிவைக்க, இளையாழ்வாரும்ஷோடஶவார்ஷிகரானவாறே [5]க்ருஹஸ்தாஶ்ரமத்தையும் அங்கீகரித்தருளி, "பெருமாள் கோயிலிலே யாதவப்ரகாஶனென்பானொருவன் ஏகதண்டிஸந்ந்யாஸியாய் பூர்வபக்ஷம் வாசிப்பிக்கிறான்" என்று கேட்டருளி, அங்கேறஎழுந்தருளி, அவன்பக்கல் பூர்வபக்ஷம்வாசிக்கத்தொடங்கினார்.

---

1. காப்பாக 2. குழந்தை பிறந்த உடனே செய்யக் கூடியவை: (1) ஜாதகர்ம (2) நாமகரணம் (3) 11வது நாள் செய்யக் கூடியது இவைகளை 3. உரிய காலத்தில் 4. நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், நான்கு உபாங்கங்கள் முதலியவை. 5. இரண்டாவது ஆச்ரமம்-படித்து முடித்ததும் விவாஹம் செய்துகொள்வது.



அவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் ஸேவைதரும்

ஸ்ரீ பகவத் ராமாநுஜர்

(கருணையின் உருவம், ஸமதர்ஶநத்தின் ஆதர்ஶம், விஶிஷ்டாத்வைத தர்ஶநத்தின் த்வஜம்)

உடையவர், யதிராஜர், எம்பெருமானார், பாஷ்யகாரர், இளையாழ்வார், லக்ஷ்மண முநி என்றெல்லாம் போற்றப்படுபவர்.

மதுரமங்கலத்தில் கமலநயநபட்டருக்கு க்ரோதநஸம்வத்ஸரத்தில் மகரபூர்ணிமை ஸோமவாரம் கூடின புநர்வஸூநக்ஷத்ரத்தில் ஒரு குமாரரவதரிக்கப் பெரியதிருமலைநம்பியும் அங்கேறவெழுந்தருளி அந்த பிம்பவைக் குளிரக்கடாக்ஷித்தருளிக் கோவிந்தபட்டரென்று திருநாமம் ப்ரஸாதித்து, ரக்ஷார்த்தமாகத் திருவிலச்சினையும் ப்ரஸாதித்தருளித் திருமலைக்கேறவெழுந்தருளினார்.

கமலநயநபட்டரும் யதாகாலத்தில் அவருக்கு ஜாதகர்மாதிகளையும் வேதாத்யயநத்தையும் ஶாஸ்த்ராப்யாஸத்தையும் க்ருஹஸ்தாஶ்ரமப்ராப்தியையும் பண்ணிவைத்தருள, கோவிந்தபட்டரும் இளையாழ்வார் வாசிக்கிற க்ரமத்தைக்கேட்டுத் தாமும் அங்கேறப்போய் வாசிக்கத்தொடங்கினார்.

யாதவப்ரகாஶனும் "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்கிற ஶ்ருதிக்கு [1]அஸங்கதார்த்தத்தைக் கல்பித்துச் சொல்ல, இளையாழ்வாரும் அத்தைப் பரிஹரித்துக் குணநிரூபணம் பண்ணியருளினார்.

பின்பு ஒருநாள் [2]அப்யஞ்சநஸமயத்தில் "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்கிற உபநிஷத்திற்கு அபார்த்தத்தைச் சொல்ல, அத்தைக்கேட்டு இளையாழ்வாரும் கண்ணீர்விட, அது நெருப்புப்போல் அவன் தொடையைச்சுட, அவனும் பதறி இவரைப்பார்த்து "துக்கமானானென்?" என்ன, இவரும் யதார்த்தத்தைச் சொல்லி, "இப்படியிருக்க அபார்த்தத்தைச் சொல்லத்தகுமோ?" என்ன, யாதவப்ரகாஶனும் "நான் சொன்னபடி கேட்கில் வாசித்திரும், இல்லாவிடில் போம்" என்ன, இவரும் கலங்கிநிற்க, அவனும் சில அந்தரங்கரை ஏகாந்தத்தில் அழைத்து "இந்த இளையாழ்வாராலே நம்முடைய மதம் நஶிக்கும்படி இருக்கிறது; ஆகையால், இன்றுமுதல் அவருக்கு இஷ்டமானபடி நடந்துகொண்டு கங்கா யாத்ரை செய்து அவரை வஞ்சித்துக்கங்கையிலே தள்ளக்கடவோம்" என்று நிஶ்சயித்து, இளையாழ்வாரை "நீர் சொன்ன அர்த்தம் ஸமீ

1. பொருந்தாத அர்த்தத்தை 2. எண்ணெய் தேய்த்துக் கொள்ளும் ஸமயம்.

சீநமாயிருந்தது'' என்று [1]ப்ரலோபித்துக்கொண்டு சிலநாள்கழிந்த வாறே கங்காயாத்ரை பண்ணிப்போக, பஹுதூரம் போனபின்பு ஒருநாள் ஒரு [2]மஹாடவியிலே ஶௌசார்த்தமாக இளையாழ்வார் நின்றவாறே, கோவிந்த பட்டரும் இவர்களுடைய [3]துராலோசனையை அறிவித்து அகன்றுபோகச் சொல்லித் தாமொருவருமே போந்தார்.

இளையாழ்வாரும் வழியை விட்டு ஒரு மரத்தடியில் நின்றுபார்க்க, அவ்விடமும் மஹாடவியாயிருக்க, 'ஆவாரார் துணை' என்று பக்கம் நோக்கி நிற்க, பேரருளாளனும் பெருந்தேவியாரும் வில்லியும் வில்லிச்சியுமாய் வந்து நிற்க, அவர்களை "நீங்கள் எங்கேறப் போகிறீர்கள்'' என்று இளையாழ்வார் கேட்க, அவர்களும் "காஞ்சீபுரத்தேறப் போகிறோம்'' என்றவாறே, "குருஷ்வ மாமநுசரம்'' என்கிறபடியே 'என்னையும் அங்கு சேர்க்கக் கடவீர்கள்' என்ன, அவர்களும் முன்னே போக, இளையாழ்வாரும் பின் சென்றவாறே, அந்த வில்லியை 'இங்குத் தண்ணீருண்டோ?' என்று வில்லிச்சி கேட்க, வில்லியும் 'அருகே இருக்கிறது' என்று ஒரு கிணற்றைக் காட்ட, இளையாழ்வாரும் அதுகேட்டு "நமக்குப் பரமோபகாரிகளான இவர்களுக்கு நாம் தண்ணீர் கொடுக்க வேண்டுமென்ற இதுவும் ஒரு விலக்ஷணவ்ருத்தாந்தமாயிருக்கிறது'' என்று நிரூபித்து, அந்தக் கிணற்றிலே இறங்கி அவர்களுக்குத் தண்ணீர் எடுத்துக் கொடுக்க, அவர்களும் பாநம் பண்ணி "இதுவே புண்யகோடி விமாநங்காணும்'' என்று சொல்லி அந்தர்த்தானமாகப் போய்விட்டார்கள். இளையாழ்வாரும் கரையேறி கீழ்வானம் வெளுத்தமையையும், அருகே புண்யகோடி விமாநத்தையும் கண்டு 'இதென்ன ஆஶ்சர்ய'மென்று மகிழ்ந்து 'கேணியாழி கண்ட பிராட்டி போலே ஸந்தோஷித்து, 'எந்திறம்' என்று ஆழ்வார் மோஹித்தாப்போலே இவரொருவருமே பேரருளாளனென்றும் "எம்மாயாவியேற்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்'' என்று மோஹித்துக் கிடந்து, பின்பு தானே தேறி, நித்யகர்மாநுஷ்டாநங்களை அங்கருகே இருந்த ஒரு தடாகத்தில் செய்தருளி, அதிஸந்துஷ்டராய் ராஜமார்க்கத்தாலே கோயிலேற எழுந்தருளி, பேரருளாளனையும் பெருந்தேவியாரையும் திருவடி தொழுது, ஆநந்தபரிதராய், நாடோறும் அந்தச் சாலைக்

1. வஞ்சித்து 2. காடு 3. கெட்டயோசனை.

கிணற்றினின்றும் திருமஞ்சநங் கொண்டு வந்து ஸமர்ப்பிவித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

அங்கே யாதவப்ரகாஶனும் இளையாழ்வாரைத் தேடிக்காணாமல் காட்டிலே [1]நஶித்திருப்பரென்று உள் மகிழ்ந்து, கோவிந்தபட்டரைப் பார்த்து 'இளையாழ்வாருக்கு என்ன தீங்கு வருகின்றதோ?' என்று சொல்லி ப்ரலோபித்து, ஶித்யார்த்திகளோடே கங்கா[2]தீரத்தைச் சென்று [3]மாகஸ்நாநம் பண்ணி நிற்க, ஒருநாள் கோவிந்த பட்டர் ஸ்நாநம் பண்ணச் செய்தே ஒரு லிங்கம் வந்து [4]கைசேரும்படி பண்ணி யாதவப்ரகாஶனும் 'இதென்ன ஆஶ்சர்யம்! கோவிந்த பட்டரே! உம்மிடத்தில் ஶிவப்ரஸாதம் இருந்தபடி' என்றும், 'இனி இதுவே நமக்கு ஆராத்யதேவதை' என்றும் சொல்லிச் சில [5]க்ஷுத்ர மந்த்ரத்தை ஜபிக்க, கோவிந்தபட்டரும் [6]துஸ்ஸங்கத்தாலே [7]ப்ராந்தராய் அத்தை அங்கீகரித்திருக்க, அன்று முதல் அவரை உள்ளங்கைகொணர்ந்த நாயனாரென்று அழைக்கத் தொடங்கினார்கள். யாதவப்ரகாஶனும் மீண்டு வரும்போது உள்ளங்கை கொணர்ந்த நாயனாரும் 'இந்த லிங்கத்தை ஒரு ஸ்தலத்திலே [8]ப்ரதிஷ்டிப்பித்து வருகிறேன்' என்ன, அவனும் அப்படியே செய்யுமென்று மார்க்கத்திலனுப்பிவிட்டுப் பெருமாள்கோயிலேறப் போந்தான். பின்பு உள்ளங்கை கொணர்ந்த நாயனாரும் மதுரமங்கலத்தில் அந்த லிங்கத்தை ப்ரதிஷ்டிப்பித்துப் பூஜித்து நிற்க, காளஹஸ்திநாதன் இவர் ஸ்வப்நத்திலே வந்து நீர் நம் பக்கல் வந்து நிற்க வேணுமென்று சொல்லித் தன் ஸ்தானத்தார் ஸ்வப்நத்திலும் அவரை அழைத்துக் கொண்டு வாருங்களென்று [9]ப்ரேரிக்க, அப்படியே ஸ்தாநத்தாரும் மதுரமங்கலத்தில் வந்து [10]பஹுமதி பண்ணி அழைத்துக் கொண்டு போய் ஸ்தாந நிர்வாஹகராய் வைக்க, இவரும் அங்கேயே பூஜித்துக் கொண்டிருந்தார்.

யாதவ ப்ரகாஶனும் இளையாழ்வாரைப் பெருமாள் கோயிலிலே கண்டு மிகவும் ஸந்தோஷித்து "உம்மைக் காட்டில் பறிகொடுத்தோ

---

1. அழிந்திருப்பர் 2. கரை 3. தை அமாவாசைக்குப் பிறந்து வரும் பூர்ணிமைவரை தினமும் அதிகாலையில் செய்யக்கூடிய ஸ்நானம் 4. கையில்வரும்படி 5. அற்ப மந்திரம் 6. கெட்ட சேர்க்கை 7. மயங்கியவராய் 8. பிரதிஷ்டை செய்வித்து 9. தூண்ட 10. மரியாதை செய்து.

மென்று நிர்வேதப்பட்டிருந்தேன், இங்குக் கண்ட பின்பு ஸந்தோஷ முண்டாயிற்று, நீர் வந்த ப்ரகாரம் என்?" என்று கேட்க, இளையாழ் வாரும் விட்டில் வ்ருத்தாந்தத்தை [1]அடங்கச் சொல்ல, அவனும் "இவர் ப்ரபாவம் [2]ஸர்வாதிஶயிதமாயிருந்தது" என்று போரப்ரீத ராய் ஸ்வகோஷ்டியிலே சேர்த்துக் கொண்டு வாசிப்பித்து நிற்க,

இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் பெருமாள் கோயிலினின்றும் புறப்பட்டுக் கோயிலேறச் சென்று நம்பெருமாளைத் திருவடி தொழுது ஆளவந்தார் திருவடிகளிலே ஸேவித்து நிற்க, ஆளவந்தாரும் 'பெரு மாள் கோயிலிலே என்ன விஶேஷம்?' என்று கேட்டருள, அவர் களும் எல்லாரும் ஆஶ்சர்யப்படும்படியாய் இளையாழ்வார் பக்கல் பேரருளாளன் வில்லி-வ்யாஜேந விஶேஷகடாக்ஷம் பண்ணிப் போந் ததை ஸவிஸ்தாரமாக விண்ணப்பஞ் செய்து யாதவப்ரகாஶ [3]வ்ருத் தாந்தத்தையும் இப்போது இளையாழ்வார் அவன் பக்கலிலே வாசிக் கிறாரென்றும் விண்ணப்பஞ் செய்ய, ஆளவந்தாரும் கேட்டருளி பெரிய பெருமாளிடத்தில் பண்ணின ப்ரபத்தி ஸபலமாயிற்று "ஒழிவில் காலமெல்லாம்" என்கிற திருவாய் மொழியிலே ஈடுபட்ட பெரிய திருமலை நம்பியைக் கொண்டு திருவேங்கட முடையானும் இத்தர்ஶநத்தை நிலை நிறுத்தும்படி பண்ணியருளினார். பேரருளாள னும் "அக்ரத: ப்ரயயௌ ராம:" என்கிறபடியே தானும் பிராட்டியும் முன் நடந்து "குருஷ்வ மாமநுசரம்" என்று ப்ரார்த்தித்த இளையாழ் வாரைத் திருவுள்ளம் பற்றித் தானே வழி நடத்தித் தம்மிருவரையும் திருவடி தொழுது "பத்ரம் புஷ்பம் பலம் தோயம்" என்கிறபடியே அவர் கொடுத்த தண்ணீரமுதையும் அமுதுசெய்து உள்குளிர்ந்து திருவுள்ளம் பற்றித் திருமஞ்சந கைங்கர்யத்தையும் நித்யமாகத் திரு வுள்ளம் பற்றியருளினார். தத்காலா[4]நுபாவ்யமான விபவம்போலன் றிக்கே பின்னானார் வணங்கும் சோதியான கோயில் திருமலை பெரு மாள் கோயிலெம்பெருமான்கள் மூவரும் இளையாழ்வாரிடத்தில் விஶேஷ கடாக்ஷம் பண்ணியிருப்பதால், "இவரே ஸித்தாந்த நிர் வாஹகராவர்" என்று போர உகந்து "பல்லாண்டு பல்லாண்டு" என்று பெரிய பெருமாளை மங்களாஶாஸநஞ் செய்தருள, முதலிகளும்

1. முழுதும் 2. எல்லோரையும் மிஞ்சியது 3. செய்தியையும் 4. அனுபவிக்கத்தக்க.

கேட்டு விசேஷார்த்தங்களை நெஞ்சிற் கொண்டிருக்க, ஆளவந்தாரும் நம் பெருமாளிடத்தில் விண்ணப்பஞ் செய்து இளையாழ்வாரைக் கடாக்ஷித்தருளுகைக்காக முதலிகளோடே திருக்கோவலூர் வழியாகப் பெருமாள் கோயிலேற எழுந்தருளி, எதிர் கொண்டு வந்த திருக்கச்சி நம்பியையும் ஸந்தோஷித்து, பேரருளாளன் எதிரே அனுப்பி வைத்த ஸ்ரீ ஶடகோபனையும் தண்டன் ஸமர்ப்பித்துச் சிரஸாவஹித்துத் தீர்த்த ப்ரஸாதம் ஸ்வீகரித்தருளி, கோயிலேற வெழுந்தருளி அர்த்திதார்த்த பரிதாநதீக்ஷிதரான பேரருளாளரையும் பெருந்தேவியாரையும் திருவடி தொழுது, ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி, கரியமாணிக்கத்தாழ்வாரை ஸேவித்து, சக்ரவர்த்தித் திருமகனையும் திருவடி தொழுது, வழி திகைத்து, உள் நடுங்கி 'ஆவாரார் துணை' என்று ரக்ஷகனைத் தேடின இளையாழ்வாருக்கு "தாஸா மாவிரூச் சௌரி:" என்கிறபடியே கண்காணத் தோன்றி "பயம் த்யஜத பத்ரம் வ:" என்னுமாப் போலே [1]ஸர்வ பயநிவ்ருத்தி புரஸ்ஸரமாக [2]ஸர்வ பலப்ரதனை தேவரீரே வாழ்வித்தருளினபடியாலே இளையாழ்வாரென்கிற திருநாமம் யதார்த்தமாயிற்று. இனிமேலும் "ஸக்ருதேவ" என்கிற ஶ்லோகத்தின்படியே ரக்ஷித்தருள வேணும் என்று ப்ரார்த்தித்து நிற்க, அப்போது யாதவ ப்ரகாஶனும் வித்தியார்த்திகளோடே பெருமாளை ஸேவித்து ப்ரதக்ஷிணம் பண்ண, ஆளவந்தாரும் இளையாழ்வார் ஆர்? என்று கேட்க, அங்குள்ளாரும் அவரென்று ஒருவரை[3] நிர்த்தேஶித்துக் காட்ட, ஆளவந்தாரும் தன் தாமரைக் கண்களால் குளிர நோக்கியருளி,

"பஸ்ய ப்ரஸாதகலயா பதிரஶ் ஶ்ருணோதி
பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்தி மூக: |
அந்த: ப்ரபஶ்யதி ஸுதம் லபதே ச வந்த்யா
தந்தேவமேவ வரதம் ஶரணங் கதோஸ்மி ||"

என்று பேரருளாளன் திருவடிகளிலே "இளையாழ்வார் இந்த ஸித்தாந்த [4]நிர்வாஹகராகவேணும்" என்று ப்ரபத்தி பண்ணி, இளையாழ்வாரைக் கண்டு நாம் வார்த்தை சொன்னுல் பூர்வபக்ஷம் வாசிக்கிறதற்கு விரோதமாம் என்று திருவுள்ளம் பற்றி மீண்டு முதலிகளும் தாமுமாகக் கோயிலேற வெழுந்தருளினுர்.

1. எல்லா பயங்களையும் போக்குபவனுன 2. எல்லா பலங்களையும் அளிப்பவனுன 3. குறிப்பிட்டு 4. நிலைநாட்டுபவர்.

பின்பு யாதவப்ரகாஶனும் வேதாந்தம் சொல்லிக் கொண்டிருக்கச் செய்தே, அந்தத் தேஶாதிபதியினுடைய பிள்ளையை ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸு பிடித்து மிகவும் பீடிக்க, ராஜாவும் பஹுமந்த்ரவாதிகளைக் கொண்டு பார்த்து அது தீராமல் பின்னையும் யாதவப்ரகாஶன் மஹா மாந்த்ரிகனென்று கேட்டு அவனை அழைப்பிக்கும்படி சிலரை யனுப்புவிக்க, அவர்களும் அந்த வ்ருத்தாந்தத்தை [1]அங்கேறப் போய் [2]ஸவிஸ்தாரமாகச் சொல்ல, யாதவப்ரகாஶனும் "அந்த ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸை நான் போகச் சொன்னேனென்று சொல்லுங்கள்" என்று சொல்லிப் போகவிட, அவர்களும் அப்படியே சொல்ல, ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸும் "யாதவ ப்ரகாஶனை நான் போகச் சொன்னேனென்று சொல்லுங்கள்" என்ன, அத்தையும் யாதவப்ரகாஶனுக்கு அறிவிக்க, அவனும் வித்யார்த்திகளோடே ராஜக்ருஹத்தில் மந்த்ர ஜபம் பண்ணிக் கொண்டு ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸின் ஸமீபத்திலே வந்து நிற்க, அதுவும் மடக்கின காலை நீட்டி "நான் உன் மந்த்ரத்திற்குப் பயப்படுவேனோ? நீ உன் ஜந்மமும் என் ஜந்மமும் அறியமாட்டாய்" என்று சொல்ல, அவனும் "உனக்குத் தெரியுமாகில் ஜந்ம வ்ருத்தாந்தத்தைச் சொல்வாய்" என்ன, அதுவும் "கோயில் பெரியோர்கள் திருமலைக்கு எழுந்தருளும் போது ஸ்ரீமதுராந்தகத்தில் ஏரி கரையில் ஒரு புற்றில் உடும்பாயிருந்தாய்; அவர்கள் நீராடி அமுது செய்தருளின விடத்தில் சிந்தின ப்ரஸாதத்தையும் தீர்த்தத்தையும் ஸ்வீகரித்தாய்; அத்தாலே உனக்கு ப்ராஹ்மண ஜந்மமும் சில வித்யையும் உண்டாயிற்று. என்னுடைய ஜந்மம் ப்ராஹ்மண வர்ணத்திலே உண்டாய் யாகம் பண்ணி அதிலே மந்த்ர லோபம் வந்து அத்தாலே ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸானேன்" என்று சொல்ல, அவனும் 'நீ யாருக்குப் போவது?' என்ன, அதுவும் 'உன் பக்கல் வாசிக்கிற இளையாழ்வார் கடாக்ஷித்தருளி என்னைப் போகச் சொன்னால் நான் போகிறதன்றிக்கே என் பாபமும் போகும்' என்று சொல்லி, இளையாழ்வார் திருவடிகளில் விழுந்து அடிக்க, யாதவப்ரகாஶனும் இளையாழ்வாரைப் பார்த்து 'அத்தைப் போகச் சொல்லீர்' என்ன, அவரும் அந்த ரக்ஷஸ்ஸைப் பார்த்து அருகேயிருந்த ஒரு வ்ருக்ஷத்தை முறித்து அடையாளமாகக் காட்டிப் 'போகக் கடவாய்' என்றருளிச் செய்ய, அந்த ரக்ஷஸ்ஸும் அந்த வ்ருக்ஷத்தை முறித்துக் கொண்டு

1. அங்கே சென்று 2. முழுவதையும்.

போய் விட்டது. அத்தைப் பார்த்து யாதவப்ரகாஶனும் அத்யாஶ்சர்யப்பட்டு, இளையாழ்வாரையும் ஸந்தோஷித்து மீண்டு தன் மடமேறப் போனான்.

பின்பு யாதவப்ரகாஶன் "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" "ஸதேவ ஸோம்யேதம்" என்கிற உபநிஷத்திற்கு [1]அத்வைதபரமாக அர்த்தம் சொல்ல, இளையாழ்வாரும் அத்தை [2]நிராகரித்து விஶிஷ்டாத்வைதபரமாக [3]ஸமஞ்ஜஸமான அர்த்தத்தை [4]உபபாதிக்க, அவனும் [5]அதிகுபிதனாய் "இன்று தொடங்கி உமக்குத் தகுமிடம் தேடிப் போய் வாசியும்" என்று சொல்ல, இளையாழ்வாரும் மீண்டு திருமாளிகையில் வந்து, திருத்தாயாரிடத்தில் இச் செய்தியைச் சொல்ல, அந்தத் தாயாரும் "பேரருளாளனுக்குக் கைங்கர்யம் பண்ணிக் கொண்டிரும்" என்று நியமித்தருள, இளையாழ்வாரும் அப்படியே இருந்தார்.

அவ்வளவிலே, ஆளவந்தார் திருமேனியில் நோவுசாத்தியெழுந்தருளியிருக்க, திருவரங்கப் பெருமாளரையரை முன்னிட்டுப் பெரிய நம்பியும் திருக்கோட்டியூர் நம்பியும் ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே தண்டன் ஸமர்ப்பித்து, "அடியோங்களுக்குத் [6]தஞ்சமாயிருப்பது ஒரு அர்த்தவிஶேஷத்தை ப்ரஸாதித்தருளவேணும்" என்று விண்ணப்பஞ் செய்ய, ஆளவந்தாரும் அவர்களைத் திருவுள்ளமுகந்து "உங்களுக்குத் தஞ்சமாயிருப்பது இதுவே" என்று அருளிச் செய்தார். அது எங்ஙனே என்னில்:— "ஸதாசார்யகடாக்ஷத்தாலே [7]ந்யஸ்தபரர்களான உங்களுக்கு அறியவேண்டியது ஆசார்ய பரம்பரையிலே [8]க்ருதஜ்ஞதாஜ்ஞானம்; செய்ய வேண்டியது ஆஜ்ஞாநுஜ்ஞாரூபமான பகவத் கைங்கர்யம்; இது பாகவதாசார்ய கைங்கர்ய பர்யந்தமாயிருக்கும். அறிவிப்பிக்க வேண்டியது, பரம புருஷார்த்தோபாயமான ப்ரபத்தியை அநுஷ்டிக்க வேணுமென்றும், அநுஷ்டித்த பின்பு முன் சொன்ன க்ருதஜ்ஞதையும் கைங்கர்யமும் தேஹாவஸாநத்தளவும் வேணுமென்றும்" இப்படி அர்த்த விஶேஷங்களை ஆளவந்தாரும் அருளிச் செய்ய, முதலிகளும் கேட்டுத் தெளிந்தார்கள்.

---

1. அத்வைத ஸித்தாந்தப்படி 2. மறுத்து 3. பொருத்தமான 4. விவரிக்க 5. மிகவும்கோபித்தவனாய் 6. புகலிடமாய். 7. சரணாகதி செய்துகொண்டவர்களான 8. நன்றியறிதல்.



பெருமாள் கோயிலில் (காஞ்சீபுரத்தில்) திவ்ய ஸேவைதரும்
ஸ்ரீ தேவராஜப்பெருமாள்

பின்பு பெருமாள் கோயிலினின்றும் ஸ்ரீவைஷ்ணவர்கள் கோயிலேற வந்து, நம்பெருமாளைத் திருவடி தொழுது, ஆளவந்தார் பக்கல் ஸேவித்து நிற்க, அவர்களை "இளையாழ்வார் என் செய்கிருர்?" என்று கேட்டருள, அவர்களும் "யாதவப்ரகாஶனை விட்டுப் பேரருளாளனுக்குத் திருமஞ்சந கைங்கர்யம் செய்கிருர்" என்று விண்ணப்பஞ் செய்ய, அத்தைக் கேட்டருளி, "பேரருளாளர் நம்முடைய ப்ரபத்தியை ஸபலமாக்கினுர்" என்று உகந்தருளி, "இளையாழ்வாரையழைத்துக் கொண்டு வாரும்" என்று பெரிய நம்பிக்கு நியமித்தருள, அவரும் அப்படியே பெருமாள் கோயிலேற எழுந்தருளி, பெருந்தேவியாரையும் பேரருளாளரையும் திருவடி தொழுது, ஆளவந்தாரருளிச் செய்த சதுஶ்ஶ்லோகியையும் ஸ்தோத்ர ரத்நத்தையும் அநுஸந்தித்துக் கொண்டு, இளையாழ்வார் சாலைக்கிணற்றினின்றும் திருமஞ்சநம் கொண்டுவருகிற வழியிலே நிற்க,

"ப்ரஹ்மா ஶிவஶ்ஶதமக: பரம ஸ்வராடித்யேதேபி யஸ்ய மஹிமார்ணவ விப்ருஷஸ்தே"

என்கிற ஶ்லோகத்தை இளையாழ்வார் கேட்டு, "இது ஆர் அருளிச் செயல்?" என்று பெரியநம்பியைக் கேட்க, "ஆளவந்தார் திவ்யஸூக்தி" என்று பெரியநம்பியும் அருளிச் செய்ய, "அப்படிக்கொத்த மஹாநுபாவரை அடியேன் ஸேவிக்க வேணும்" என்ன, பெரிய நம்பியும் "என்னேடே கூட வாரும்" என்ன, இவ நம் திருமஞ்சநத்தைப் பெருமாளுக்கு ஸமர்ப்பிவித்து விடைகொண்டு பெரிய நம்பியுடனே கோயிலேற எழுந்தருளினுர்.

அங்கு, ஆளவந்தாருக்கு மிகவும் திருமேனி தளர்ந்திருக்க, ஆளவந்தாரும் முதலிகளுமாய்ப் பெரிய பெருமாளை ஸேவித்து நிற்க, பெரிய பெருமாளும் "நம் [1]பெரிய வீடு சேரக்கடவீர்" என்று [2] அர்ச்சகமுகேந அருளிச் செய்து திருமாலை தீர்த்தம் முதலானவைகளை ப்ரஸாதிக்க, ஆளவந்தாரும் க்ஷாமணம் பண்ணிக்கொண்டு மடமேற வெழுந்தருளி ஒரு குறையுள்ளவர் போல் கண்ணீர் விட்டருள, முதலிகளும் "இதென்ன?" என்று திகைத்து "திருவுள்ளத்திலென்ன

---

1. மோக்ஷம் (வைகுண்டம்) 2. அர்ச்சகர் வாயிலாக.

குறை?" என்று கேட்க, ஆளவந்தாரும் "இனி யென்ன குறை யெழுமையுமே?" என்றிருக்கச் செய்தேயும், இளையாழ்வாரைக் காணாத குறையொன்றுண்டு; என்றும், அதுவுமன்றிக்கே வ்யாஸ ஸூத்ரத்திற்கு அவ்யாஹத பாஷ்யமும் செய்து, அவ்வர்த்தங்களில் ஸம்ஶயம் தீரும்படி ஈஶ்வரேஶ்வரிகளான திவ்யதம்பதிகளுடைய [1]பாரம்யத்தைப் பரக்கச் சொன்ன பராஶரருடைய திருநாமத்தையும், வேதாந்த ஸாரமான திருமந்த்ரத்தில் சொல்லுகிற ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை விஶதமாகக் காட்டுகிற திருவாய்மொழியை அருளிச் செய்த நம்மாழ்வார் திருநாமத்தையும் இரண்டு பிள்ளைகளுக்குச் சாத்தி, அவர்களுடைய [2]நிர்வாஹத்தையும் பண்ணும்படி செய்விக்க வேணும்" என்றும் "அது செய்யப் பெற்றிலேனே!" என்றும் அருளிச் செய்து மூன்று விரல்களை முடக்க, அவ்வளவில் முதலிகளும் "அப்படியே பெரிய பெருமாள் தலைக்கட்டக்கடவர், இப்போது செய்ய அடுப்பது என்?" என்ன, ஆளவந்தாரும் "இன்று திநத்தில் அபிஜிந் முஹூர்த்தத்தில் பெரிய வீடு சேரும்படி பெரிய பெருமாள் நியமநம், ஆகையால் பாகவத ஸ்ரீபாத தீர்த்தங் கொள்ள வேண்டுவது" என்றருளிச் செய்ய, முதலிகளும் "இங்குள்ளவர்களெல்லாரும் தேவரீர் திருவடி ஸம்பந்தம் பெற்றவர்களேயல்லது வேறில்லையே" என்று விண்ணப்பஞ் செய்ய, ஆகில், "நம் நாதமுநிகள் உய்யக்கொண்டார் திருமுடியிலே பாரிதோஷிகமாகத் திருவடிகளை யமர்த்தியருளும் போது, உய்யக்கொண்டாரும் இரண்டு திருவடி நிலைகளை நாதமுநிகள் திருவடிகளிலே ஸமர்ப்பித்து பரதாழ்வானைப் போலன்றிக்கே, நாதமுநிகள் இருக்கச் செய்தேயும் ஆராதித்துக் கொண்டு வந்து, தம் அந்திம தஶையிலே, நம்மாசார்யரான மணக்கால் நம்பிக்கு [3]ப்ரஸாதித்தருளினார். நம்பியும் அந்தத் திருவடி நிலைகளை நமக்கு ப்ரஸாதித்திருக்கையாலே அந்தத் திருவடி நிலையை ஆராதித்துத் தீர்த்தங் கொள்ளவேணும்" என்று அருளிச் செய்ய, அப்படியே முதலிகளும் செய்வித்து, "அடியோங்களுக்குத் தேவரீர் தீர்த்தமும் திருவடி நிலையும் ப்ரஸாதித்தருள வேணும்" என்று ப்ரார்த்திக்க, அப்படியே ஆளவந்தாரும் திருவுள்ளம் பற்றி ப்ரஸாதித்தருள, அவ்வளவில் நிர்யாண ஸமயமும் கிட்டினவாறே

1. பரம்பொருளாகும் தன்மையை 2. மேற்பார்வை 3. கொடுத்தருளினார்.

விதிசோதிதமான உபநிஷதநுஸந்தாநமும், நாதமுநிகள் நியமநப் படிக்குத் திருவாய்மொழி யநுஸந்தாநமும் முதலிகள் செய்து கொண்டிருக்க, ஆளவந்தாரும் நாதமுநிகள் திருவடி நிலையைத் தந் திருமுடியி லொற்றிக்கொண்டும், ஆசார்யர்களுடைய திருவடிகளை த்யாநித்துக் கொண்டும், த்வயாநுஸந்தானத்தோடே நிற்க, ப்ரஹ்ம ரந்த்ரம் திறந்தவாறே "சூழ்விசும் பணிமுகில்" என்கிற திருவாய்மொழியை ஸேவிக்க திருநாட்டுக்கெழுந்தருளினார்.

திருவரங்கப் பெருமாளரையர் முதலான முதலிகள் வேரற்ற மரம்போல் விழுந்து துடித்துத் தாங்களே தேறி [1]யதிஸம்ஸ்கார வித்யுக்த ப்ரகாரத்தாலே வைதிகங்களையும் ஸ்ரீசூர்ண பரிபாலநத்தையும் பிள்ளையரசு நம்பியைக் கொண்டு செய்வித்து, பெரிய பெருமாள் [2]ப்ரஸாதித்த திருமாலை முதலானவைகளைச் சாத்தி, [3]ப்ரஹ்ம ரதத்திலெழுந்தருளப் பண்ணி, பெரிய [4]திரளோடே திருக்கரம்பன் துறையில் [5]திருப்பள்ளிபடுத்திக் கொண்டிருக்க,

அப்போது பெரியநம்பியும் இளையாழ்வாருடனே இந்த ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியைக் கண்டு, "இதென்ன?" என்று கேட்க, அவர்களும் "ஆளவந்தார் திருநாட்டுக்கெழுந்தருளினார்" என்று சொல்ல, அதைக் கேட்டு அவர்களும் ஸோகித்து மூர்ச்சையடைந்து இளையாழ்வார் மிகவும் ப்ரலாபிக்க, பெரியநம்பி தேற்றி அழைத்துக் கொண்டு ஆளவந்தாருடைய திவ்ய விக்ரஹத்தை ஸேவிக்கப் பண்ண, இளையாழ்வாரும் தண்டன் ஸமர்ப்பித்து ஆபாத மஸ்தகம் ஸேவிக்குமளவில், மூன்று விரல்கள் முடங்கியிருக்க, இளையாழ்வாரும் "இப்படிக்கு முன்னமே உண்டோ?" என்று கேட்க, அவர்களும் ஆளவந்தாரருளிச் செய்த மூன்று அபிப்ராயங்களையும் நடந்த நடத்தையையும் பரக்க அருளிச் செய்ய, இளையாழ்வாரும் "ஆளவந்தார் கடாக்ஷ விஷயனான அடியேனைக் கொண்டு அந்த மூன்று கைங்கர்யங்களையும் பேரருளாளன் நிறைவேற்றக் கடவன்" என்று

---

1. ஸந்யாஸிகள் இறந்த பிறகு செய்யக்கூடிய ஸம்ஸ்கார முறைப்படி 2 அநுகிரஹிக்க 3. ப்ருஹ்மஞானிகள் இறந்த பிறகு அவர்கள் திருமேனியை ஒரு ரதத்தைப் பண்ணி அதில் மயானத்திற்கு எழுந்தருளப் பண்ணுவர். இதுவே ப்ருஹ்மரதம் 4. கூட்டம் 5. திருக்குழியில் எழுந்தருளப் பண்ணுவது.



மதுராந்தகம் ஸ்ரீ கோதண்டராமன்



மதுராந்தகத்தில் ஸ்ரீ பாஷ்யகாரும், ஸ்ரீபெரியநம்பியும்
ஸ்ரீ கிருஹஸ்தராகப் பெரிய நம்பியிடம் பஞ்சசம்ஸ்காரம்

விண்ணப்பஞ் செய்ய, அந்த மூன்று விரல்கள் நிமிர்ந்து திருமுகமும் மலர்ந்து வர, திருவரங்கப் பெருமாளரையர் முதலானவெல்லாரும் "இவரே இத்தர்ஶந நிர்வாஹகராவர்" என்று போர உகந்தருளி, ஆளவந்தாரைத் திருப்பள்ளி படுத்த, இளையாழ்வாரும் [1]அவப்ருத ஸ்நாநம் பண்ணிப் பெரியநம்பியைத் தண்டன் ஸமர்ப்பித்து நம்பெருமாளை ஸேவியாமல் வெறுத்துக் கொண்டு பெருமாள்கோயி லேற எழுந்தருளினர்.

ஆளவந்தாருடைய அபிப்ராயங்களாவன:-(1) வேதாந்த ஸார மான வ்யாஸஸூத்ரத்திற்கு விஶிஷ்டாத்வைதபரமாக [2]அவ்யாஹத பாஷ்யம் பண்ணுகை.(2) திவ்யதம்பதிகளுடைய பாரம்யத்தை ஸர்வ வ்யாப்திபூர்வகமாகப் பரக்கச்சொல்லுகிற ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற்கு ப்ரவர்த்தகரான பராஶரருடைய திருநாமத்தை ஒருவருக்குச் சாத் துகை. (3) அவ்வர்த்தங்களையெல்லாம் பொதிந்துகொண்டிருக்கிற திருமந்த்ரத்தில் சொல்லுகிற ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை விஶதமாகக் காட்டுகிற திருவாய்மொழியை யருளிச் செய்த நம்மாழ் வார் திருநாமத்தை ஒருவருக்குச் [3]சாத்துகை — என்று ஆளவந்தா ருடைய அபிப்ராய நிரூபணம்,

பின்பு ஆளவந்தாருடைய சரமகைங்கர்யங்களை யெல்லாம் கோயிலிலே செய்தருளினர்கள்.

**ஆளவந்தார் திருநக்ஷத்ரம் ஆடியில் உத்தராடம்.**

பின்பு ஒருநாள் திருக்கச்சிநம்பி பேரருளாளனுக்குக் கைங்கர் யம் பண்ணுகிற படியையும் பேரருளாளன் நம்பி விஷயத்தில் க்ருபை பண்ணுகிற படியையுங் கண்டு, ஒருநாள் கைங்கர்யம் பண்ணுகிற அவஸரத்தில் பேரருளாளன் திருவுள்ள [4]மலர்த்தியை யுங் கண்டு, நம்மிடத்தில் விஶேஷகடாக்ஷம் பண்ணியருளின ஆள வந்தார் திருவடிகளாகையாலே

"அத்யந்த பக்தி யுக்தாநாம் நைவ ஶாஸ்த்ரம் ந ச க்ரம:"

என்கிற ஸாமாந்[5]யோக்தியின்படியே [6]ஓரபிஸந்தி பிறந்து நம்பி கோயில் ப்ரதக்ஷிணமாக எழுந்தருளும்போது இளையாழ்வார் தம்

1. கர்மா முடிந்தபின் செய்யும் ஸ்னனம் 2. பிறர் மறுக்க முடி யாத 3. இடுவது 4. மலர்ச்சி 5. வார்த்தை 6. ஓர்அபிப்ராயம்.

திருமாளிகைக் கழைத்துக்கொண்டுபோய் ஓராஸநமிட்டு ஸாஷ்டாங்கமாய்த் தண்டன் ஸமர்ப்பிக்கப்போக, நம்பியும் "நம் ஆளவந்தார் ஸ்ரீபாதம் இப்படிக்கு வர்ணாஶ்ரமதர்மங்களை[1] அதிக்ரமிக்கக்கூடுமோ? நாதமுநிகளும் ஒரு காலத்தில் ராஜாவைப் பின்செல்லப் போக, உய்யக்கொண்டாரும் 'இப்படிக்கு ஶாஸ்த்ரா[2]திலங்கநம் கூடுமோ?' என்று தடுக்க, நாதமுநிகளும் ஶாஸ்த்ராதிலங்கநம் கூடாதென்று மீண்டெழுந்தருளினார் திருக்கண்ணமங்கையாண்டானும் ஆஹார நித்ராதிகளை [3]த்யஜித்தவராகையாலே ஸந்த்யாதி கைங்கர்யங்களையும் விட்டாரத்தனை. "ஸந்த்யாதிகைங்கர்யங்களுக்காக ஆஹாராதி தேஹதர்மங்களை [4]அங்கீகரித்திருக்கிற தேவரீர்களுக்கு ஶாஸ்த்ராதிலங்கநம் கூடாது" என்று அருளிச் செய்ய, அத்தைக் கேட்டு இளையாழ்வாரும் தெளிந்து "ஆகிலும், சில நினைவுகளை நினைத்திருக்கிறேன்; அவை யெவையென்று பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்து அவரருளிச்செய்த அர்த்தத்தை அடியேனுக்கு அருளிச் செய்யவேணும்" என்று விண்ணப்பஞ் செய்ய, நம்பியும் அப்படியே திருவுள்ளம்பற்றி எழுந்தருளினார். இளையாழ்வாரும் சிலதூரம் பின் சென்று திரும்பி வரும்போது [5]தேவியாரும் [6]வர்ணாந்தரஸ்தரிருந்த இடமென்று அந்த ஸ்தலத்தை நன்றாக ஶுத்திபண்ணித் தானும் ஸ்நாநம் பண்ணியிருக்க, இளையாழ்வாரும் "இதென்ன" என்று கேட்க, தேவியாரும் தான் நினைத்துச் செய்தபடியை விண்ணப்பஞ் செய்ய, இளையாழ்வாரும் "[7]உசித கைங்கர்ய மறியும்படியான [8]ஸத்களத்ரத்தைப் பெற்றிலோமே" என்று நொந்து பேரருளாளன் திருவடி தொழுது க்ஷாமணம் பண்ணிக் கொண்டருளினார்.

பின்பு நம்பியும் கச்சிவாய்த்தான் திருமண்டபத்திலெழுந்தருளியிருக்கிற பேரருளாளன் ஸந்நிதியில், இளையாழ்வார் விண்ணப்பத்தை ஒருகால் விண்ணப்பஞ் செய்ய, பேரருளாளரும் (1) ஸ்ரீமானான நாமே பரதத்வம், (2) நம்முடைய மதம் பேதம், (3) ப்ரபத்தியே உபாயம், (4) அந்திம ஸ்ம்ருதி ஆவஶ்யகமன்று, (5) தேஹாவஸாநத்தில் மோக்ஷம், (6) பெரியநம்பி திருவடிகளிலே

---

1. மீறுவது தகுமோ 2. மீறுவது 3. விட்டவர் 4. ஏற்றுக்கொண்டிருக்கிற 5. மனைவியாரும் 6. வேறு வருணத்தைச் சேர்ந்தவர் (வைச்யர்) 7. தகுந்த பணிவிடை 8. நல்ல மனைவி.

ஆஶ்ரயிப்பதுஎன்று ஆறுவார்த்தைகளை அருளிச்செய்ய, நம்பியும் இளையாழ்வாரை அழைத்து இவ்வர்த்தத்தை அருளிச்செய்ய, இளையாழ்வாரும் போர ப்ரீதராய் "நமக்கு இது ஓர் நன்னாளாயிற்று" என்று [1]உள்மகிழ்ந்து பேரருளாளன்திருவடி தொழுது நம்பி பக்களிலும்,

> "யஶ்ஶூத்ரம் பகவத்பக்தம் நிஷாதம் ஶ்வபசம் ததா |
> வீக்ஷதே ஜாதிஸாமாந்யாத் ஸ யாதி நரகம் நர: ||"

இத்யாதிகளின்படியே வரும் அபராதங்கள் புகுராமல் ஶாஸ்த்ராதி லங்கநமும் பண்ணாமல் மிகவும் க்ருதஜ்ஞதை தோற்றும்படி [2]ப்ரபத்தி பண்ணிக்கொண்டிருந்தார்.

## பெரியநம்பி எம்பெருமானாரை அங்கீகரித்தல்

அநந்தரம் கோயிலிலே ஆளவந்தார் திருவடிகளிலே ஆஶ்ரயித்த முதலிகளெல்லாரும் "ஆளவந்தார் விஶேஷ கடாக்ஷம் பெற்றிருக்கிற இளையாழ்வாரை இத் தர்ஶநத்திற்கு ப்ரவர்த்தகராகும்படி செய்தருளி அழைத்துக்கொண்டு வரவேணும்" என்று பெரிய நம்பி ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்ய, பெரியநம்பியும் அப்போதே புறப்பட்டுத் தேவிகளோடேகூடப் பெருமாள் கோயிலேற வெழுந்தருளச் செய்தே ஸ்ரீ மதுராந்தகத்தில் ஏரிகாத்த பெருமாள் ஸந்நிதியிலே யெழுந்தருளி யிருந்தவளவில், இளையாழ்வாரும் பேரருளாளன் நியமனப்படிக்கு பெரியநம்பி திருவடிகளிலே ஆஶ்ரயிப்பதாகக் கோயிலேற வெழுந்தருளி, ஸ்ரீ மதுராந்தகத்தில் பெரியநம்பி யெழுந்தருளியிருக்கக் கண்டு, "எண்ணின பலம் எதிரே வந்து வாய்த்தது" என்று ஆநந்த [3]நிர்பரராய்ப் பெரியநம்பியைத் தண்டன் ஸமர்ப்பித்து, பேரருளாளன் நியமநத்தையும் விண்ணப்பஞ் செய்து,

"ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம்"

---

1. மனம் மகிழ்ந்து 2. பக்தி 3. நிரம்பியவராய்.

என்கிறபடியே அடியேனுக்கு ஹிதோபதேஶம் செய்தருளவேணும்'' என்று ப்ரார்த்திக்க, பெரிய நம்பியும் ''பேரருளாளன் ஸந்நிதியில் செய்கிறோம்'' என்ன, இளையாழ்வாரும் ''காலம் போக்க வேண்டா ஆளவந்தார் பக்கல் கண்டது அமையாதோ?'' என்று விண்ணப்பஞ் செய்ய, பெரிய நம்பியும் ஏரிகாத்த பெருமாள் ஸந்நிதியில் திருமகிழ மரத்தடியிலே பஞ்சஸம்ஸ்காரத்தையும் மற்றும் ஸர்வ மந்த்ரோப தேஶத்தையும் த்வயார்த்தத்தையும்ப்ரஸாதித்தருளி ஏரிகாத்தபெரு மாளையும் ஸேவித்துப் பெருமாள் கோயிலேற எழுந்தருளினார். இளை யாழ்வாரும் தம் திருமாளிகையிலே பெரிய நம்பியை எழுந்தருளப் பண்ணி வைத்துக் கொண்டு [1]ஆராதநோபயுக்த [2]த்ரவ்யங்களையும் ஸமர்ப்பித்து ஆராதித்துக் கொண்டிருக்க, பெரிய நம்பியும் வ்யாஸ ஸூத்ரார்த்தத்தையும் திருவாய்மொழி[3]யொழிந்த மூவாயிரங்களையும் திருமாலை முதலாகப் ப்ரஸாதித்தருளினார்.

ஒருநாள் இளையாழ்வாருக்கு எண்ணெய்க் காப்புச் சாத்துகிற ஸ்ரீ வைஷ்ணவர் இளைத்திருக்கையாலே தேவிகளை அழைத்து அவருக்கு அபூபாதிகளைக் கொடுக்கச் சொல்ல, தேவிகளும் ''அல்ப மாகிலும் இல்லை'' என்ன, தேவிகளை ஒரு கார்யத்திலே விட்டு உள் புகுந்து பாண்டத்தைப் பார்க்க அபூபங்களிருக்கக் கண்டு தாமே [4]ப்ரஸாதித்துத் தேவிகளையும் அழைத்துக் கோபித்து விட்டருளினார்.

பின்பு ஒருநாள் இளையாழ்வார் கார்யவஶத்தாலே ஸ்ரீபெரும் பூதூரேற எழுந்தருள, தேவிகளும் கிணற்றின் கரையிலே பெரிய நம்பி தேவிகளோடே ஒரு தோண்டி வ்யாஜத்தாலே சண்டைப்பட, அத்தைப் பெரியநம்பி கேட்டருளித் தம்முடைய தேவிகளைக் கோபித்து இளையாழ்வாருக்கும் அறிவியாமல் தேவிகளுடன் கோயி லேற எழுந்தருளினார். இளையாழ்வாரும் இச்செய்தியைக் கேட்டுத் தம் தேவிகளை மிகவும் கோபித்துப் பிறந்தவகம் போய்வா வென் றனுப்பியருளினார்.

பின்பு ஒரு பாகவதனை ''இகழ நினைத்து இருந்த இடம் ஶுத்தம் பண்ணி ஸ்நாநம் பண்ணியும், பசித்தார்க்கு ஊணிருக்க இல்லை''

---

1. பூஜைக்குப் பயன்படும் 2. பொருள்கள் 3. நீங்கலாக 4. கொடுத்து.

யென்று சொல்லியும், "[1]ஆசார்யபத்நியை இகழ நினைத்துச் சண்டையும் பண்ணின இவள் நமக்குத் [2]தர்மபத்நியாகாள்" என்று அவளை [3]த்யஜித்து [4]துர்யாஶ்ரமஸ்வீகாரம் நியமித்தருளவேணு மென்று பேரருளாளன் ஸந்நிதியில் ப்ரார்த்திக்க, பேரருளாளனும் அப்படியே நியமித்தருள, இளையாழ்வாரும் [5]பூர்வம் [6]உபதிஷ்ட மந்த்ரத்தைக் கொண்டு ஆஶ்ரம ஸ்வீகாரம் பண்ணியருள, பேரருளாளனும் [7]அர்ச்சகமுகேந "யதிராஜன்" என்று திருநாமம் ப்ரஸாதித்தருளினார்.

## நடாதூராழ்வானுதியர் எம்பெருமானாரை ஆஶ்ரயித்தல்

பின்பு யதிராஜரும் பெரிய திருமலை நம்பி ஸந்நிதிக்கு ஒரு ஸ்ரீவைஷ்ணவரை அனுப்பி கோவிந்தபட்டரை காளஹஸ்தியினின்றும் விடுவித்துத் தேவரீர் திருவடிகளுக்கு ஆட்படுத்திக்கொள்ள வேண்டாவோ? என்று விண்ணப்பஞ் செய்து போகவிட்டார். நடாதூராழ்வானும் பின்பு ஸ்ரீவத்ஸசிஹ்நமிஶ்ரரென்கிற கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் யதிராஜர் திருவடிகளிலே ஆஶ்ரயித்தார்கள்.

## எம்பெருமானாரை யாதவப்ரகாஶன் ஆஶ்ரயித்து உஜ்ஜீவித்தல்

பின்பு யாதவப்ரகாஶன் தாயார் இளையாழ்வாருடைய ப்ரபாவத்தைக் கண்டு யாதவனும் ராமாநுஜன் திருவடிகளிலே ஆஶ்ரயித்தால் நன்றாயிருக்கும் என்று நினைக்க, அப்போது "அதுவே நல்லது நல்லது" என்கிற [8]உபஶ்ருதியைக் கேட்டு யாதவப்ரகாஶனுக்கும் இச் செய்தியைச் சொல்ல, யாதவப்ரகாஶனும் "யான் ஶிகா யஜ்ஞோபவீத த்யாகம் பண்ணினதற்கு ப்ராயஶ்சித்தமாக பூ ப்ரதக்ஷிணம் வேண்டாவோ?" என்று விசாரித்துக் கொண்டிருக்க, ராத்ரி ஸ்வப்நத்தில் "நம் ராமாநுஜனை ஒரு ப்ரதக்ஷிணம் பண்ணி

---

1. ஆசாரியன் மனைவி 2. தருமம் தவறாத மனைவி 3. விடுத்து 4. நான்காவது ஆச்ரமம் (ஸந்நியாஸம்) 5. முன்பு 6. உபதேசிக்கப்பட்ட 7. அர்ச்சகர் வாயிலாக 8. யாரோ பேசும் பேச்சு நாம் நினைத்ததற்குப் பொருத்தமாகக் காதில் கேட்பது.

னுள் அளைமயும்'' என்று பேரருளாளன் அருளிச் செய்ய, பின்பு யாதவனும் திருக்கச்சி நம்பியுடனே ''என் நினைவைப் பெருமாளிடத்தில் கேட்டுச் சொல்லவேணும்'' என்ன, நம்பியும் அப்படியே கேட்டு, ''இராமாநுசனை ப்ரதக்ஷிணம் பண்ணினால் பூப்ரதக்ஷிண துல்யமாம்'' என்று அருளிச் செய்ய, அதைக் கேட்டு உள் மகிழ்ந்து ராமாநுஜனை ப்ரதக்ஷிணம் பண்ணித் தண்டன் ஸமர்ப்பித்து இவ் வர்த்தங்களை யெல்லாம் விண்ணப்பஞ் செய்து ''அடியேனுக்கு [1]த்ரிதண்ட தாரணம் பண்ணிவைத்தருளவேணும்'' என்று ப்ரார்த்திக்க, இராமாநுசனும் ஆஶ்சர்யப்பட்டு உகந்தருளி ப்ராயஶ்சித்த பூர்வகமாக யாதவனுக்கு த்ரிதண்ட [2]காஷாயாதிகளையும் ப்ரஸாதித்தருளி, கோவிந்த ஜீயரென்று திருநாமம் ப்ரஸாதித்து, [3]யதிதர்ம ஸமுச்சயமென்று ஒரு க்ரந்தம் செய்யும்படி நியமித்தருள, அவரும் அப்படியே செய்ய, அந்த க்ரந்தத்தையும் திருக்கண் சாத்தி உகந்தருளினார்.

பின்பு இவ்வ்ருத்தாந்தந்தைக் கோயிலிலே ஆளவந்தார் திருவடிகளெல்லாரும் கேட்டருளித் திருவரங்கப் பெருமாளரையரைப் பேரருளாளனை ப்ரார்த்தித்து ராமாநுஜனை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வரவேணும் என்று விண்ணப்பஞ் செய்ய, திருவரங்கப் பெருமாளரையரும் பெருமாள் கோயிலேற வெழுந்தருளி, பேரருளாளன் திருவடி தொழுது, ''என்னெஞ்சமே யான்'' இத்யாதி பாட்டுக்களைத் தேவகாநத்திலேறிட்டுப்பாட, பேரருளாளனும் தீர்த்த ப்ரஸாதாதிகளையும் ப்ரஸாதித்து ''உமக்கு என்ன வேண்டுவது?'' என்று அர்ச்சகமுகேந கேட்டருள, அரையரும் ''இந்த ராமாநுஜனைப் [5]ப்ரஸாதித்தருள வேணும்'' என்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாளும் ராமாநுஜனை யழைத்து ''திருவரங்கப் பெருமாளரையருடனே போகும்'' என்றருளிச் செய்ய இராமாநுசனும் அப்படியே பேரருளாளன் திருவடி தொழுது கூரத்தாழ்வான் முதலான முதலிகளைக் கொண்டு தம் திருவாராதநமான பேரருளாளரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வரும்படி செய்துவைத்து அரையருடனே கோயிலேற எழுந்தருளும்போது திருக்கச்சி நம்பி முதலானவர்களும் வழிவிட்டு மீண்டுபோக, நல்குல வ்ருத்தங்களையுடைய பெண்கள்

1. முக்கோல் 2. காவி வஸ்திரம் 3. துறவி தருமத் தொகுப்பு 4. பார்வையிட்டு 5. கொடுத்தருள.

பிறந்தகம் விட்டுப் புக்ககம் புகுமாப் போலே மகிழ்ந்துகொண் டெழுந்தருளினர்.

கோயிலிலே [1] அநந்த கொத்து பரிஜனங்களும் ஸ்ரீவைஷ்ணவர் களுடனே திருமாலை திருப்பரியட்டம் முதலான வரிசைகளையும் கொண்டு ஸகல வாத்யங்களோடே திருக் காவேரிக்கரையில் எதிர் கொள்ள, ராமாநுஜனுந் தண்டன் ஸமர்ப்பித்துப் பெரிய பெருமாள் நியமித்தருளின திருமாலை முதலானவைகளைச் சிரஸாவஹித்துத் திருவீதி ப்ரதக்ஷிணமாய் உள்ளே புகுந்து ஸேவாக்ரமமாக ஸ்ரீரங்க நாச்சியாரையும் அழகிய மணவாளனையும் திருவடி தொழுது திரு மணத் தூணருகே சென்று பெரிய பெருமாளை அமலனுபிரான் படியே ஸேவித்துக் கொண்டிருக்க, பெருமாளும் தீர்த்தம் முதலான வைகளை ப்ரஸாதித்து "[2]உபய விபூத்யைஶ்வர்யத்தை யெல்லாம் ஆராய்ந்து நடத்தும்" என்று அருளிச் செய்து, "நம் உடையவர்" என்றும் அர்ச்சகமுகேந அருளப்பாடிட்டருள, உடையவரும் 'நாயன்தே' என்று நியமநத்தைச் [3]சிரஸா வஹித்து,

"அத்ர பரத்ர சாபி நித்யம் யதீயசரணௌ ஶரணம் மதீயம்"

என்கிறபடியே "பெரிய நம்பி திருவடிகளே நமக்கு உபய விபூத் யைஶ்வர்யத்தையும் கொடுத்ததுகாண்" என்று உள் மகிழ்ந்து கோயில் திருவாராதநம் முதலான ஸமஸ்த மஹோத்ஸவங்களுக்கும் வேண்டியனவை யெல்லாம் குறைவற நடத்தும்படி அகளங்க நாட் டாழ்வானையும் ஶிஷ்யனுக்கிக் கோயிலுக்கு மேல்காவலாக வைத்து அவனைக் கொண்டு ஸமஸ்தோத்யோகங்களையும் நடத்தி யருளினர்

## எம்பாரைத் திருத்திய விவரம்

அக்காலத்திலே முன்பு பெரியதிருமலைநம்பி ஸந்நிதிக்குப் போயிருந்த ஸ்ரீவைஷ்ணவர் வந்து உடையவர் திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்துத் தேவரீர் நியமனப்படிக்குப் பெரியதிருமலை

1. கைங்கரியம் செய்வோர் எல்லோரும் 2. நித்ய விபூதி, லீலா விபூதி என்ற பகவானுடைய இருப்பிடமான இரண்டு இடங்களிலும் 3. சிரமேற்கொண்டு.

நம்பி ஸந்நிதியில் விண்ணப்பஞ் செய்தேன். "நம்பியும் முதலி களோடு அடியேனையுங் கூட்டிக் கொண்டு காளஹஸ்திக் கெழுந் தருளி அவ்விடத்தில் தீர்த்த பத்ர புஷ்பாதிகளை ஸங்க்ரஹித்து அங்கே ஶிவபூஜை பண்ணிக் கொண்டிருக்கிற உள்ளங்கை கொணர்ந்த நாயனாரைச் சில லௌகிக வார்த்தைகளாலே திருத்தி யருள, அவ்வளவிலும் உத்தரம் சொல்லிப் போய் ஒரு மரத்திலேறிப் பத்ரமெடுக்கும் போது, நம்பியும் 'தேவுமெப்பொருளும் படைக்க" என்கிற பாட்டில் "பூவும் பூசனையுந் தருமே" என்கிற வாக்கியத் திற்கு [1]ஶாஸ்த்ரோபந்யாஸ பூர்வகமாக முதலிகளுக்கு அர்த்த மருளிச் செய்ய, அத்தைக் கேட்டு "தகாது தகாது" என்று சொல்லிக் கொண்டு லிங்கத்தையும் ருத்ராக்ஷத்தையும் அறுத்து எறிந்துப் போகட்டு, நம்பி திருவடிகளிலே விழுந்து "உபய விபூத்யைஶ்வர்யத்திற்கும் முடிசூடி நிற்க, [2]முடைத்தலை கொண்டி ருக்குமவனைப் பூஜித்தேனே" என்று புலம்பி, "இவ்வாத்மாவை உஜ்ஜீவிப்பிக்க வேணும்" என்று எழுந்திராமலிருக்க, நம்பியும் அவரை எடுத்துப் [3]பல்படி [4]ஸாந்த்வவாதநம் பண்ண, "அந்த ஸ்தாநத்தாரும் நீர் இப்படிக்குச் செய்யலாமோ?" என்ன, இவரும் [5]திறவுகோல் [6]மோதிரம் முதலானவைகளையும் போகட்டு, "மந்த்ரவாதி பக்கலிருக்கிற எனக்குப் பிஶாசத்தின் பயமுண்டோ? உங்களுக்கும் எனக்கும் [7]பசையற்றது;" என்று சொல்லிப் போகட்டு, நம்பி திருவடிகளிலே நிற்க, நம்பியும் திருமலை ஏற வெழுந்தருளி, இவருக்கு வபநாதிகளையும் செய்வித்துப் பஞ்ச ஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதித்துப் பெரியாழ்வார் திருமொழி முதலாய்த் திவ்ய ப்ரபந்தங் களையும் ப்ரஸாதித்தருளி, காடு சென்றுபோன கட்டுடைப் பிள்ளை யைக் கண்டு மகிழ்ந்தருளினார்." என்று விண்ணப்பஞ் செய்ய, உடையவரும் அந்த ஶ்ரீவைஷ்ணவரிடத்தில் மிகவும் க்ருபை செய் தருளினார்.

---

1. சாஸ்திரங்களை எடுத்துக் காட்டிச் செய்யும் உபந்யாஸம் 2. பரமசிவனை 3. பலவிதமாக 4. ஆறுதல் கூற 5. சாவி 6. முத்திரை, 7. தொடர்பு விட்டது.

## பாஷ்யகாரர் திருக்கோட்டியூர்நம்பிபக்கல் ரஹஸ்யார்த்தம் சிக்ஷித்தல்

பின்பு பெரியநம்பியும் உடையவரைத் திருக்கோட்டியூர்நம்பி பக்கல் திருமந்த்ரார்த்தத்தையும் சரமஶ்லோகார்த்தத்தையும் கேட்கும்படி நியமித்தருள, உடையவரும் திருக்கோட்டியூரிற் சென்று நம்பி திருவடிகளிலே அவ்வர்த்தத்தை விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் "இம்மந்த்ரார்த்த கௌரவம் எல்லாருக்கும் தெரியவேணும்" என்று "இனி யொருகால் போய்வாரும்" என்று அருளிச்செய்ய, உடையவரும் அப்படியே கோயிலுக்கெழுந்தருளி பின்னும் [1]ஸப்த தஶவாரம் கதாகதிபண்ணிக்கொண்டும் பலம் கைகூடாமையாலே [2]நிர்விண்ணராயிருக்க, அப்போது நம்பியும் கோயிலுக்கெழுந்தருளி நம்பெருமாளை மங்களாஶாஸநம் செய்துகொண்டிருக்க, அங்குள்ள முதலிகளும் "இப்படிக்கு உடையவர்விஷயத்தில் பரீக்ஷை பண்ண வேணுமோ?" என்று விண்ணப்பஞ்செய்ய, அத்தைத் திருவுள்ளத் திற்கொண்டு திருக்கோட்டியூரேற எழுந்தருளி, "ராமாநுஜனை அழைத்துவாரும்" என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவரை அனுப்புவிக்க, உடையவரும் கேட்டு உகந்து, கூரத்தாழ்வானையும் நடாதூராழ்வானையும் முதலியாண்டானையும் கூட்டிக்கொண்டு திருக்கோட்டியூரிற் சென்று அவர்களை ஓரிடத்தில் வைத்துத் தாமொருவருமே சென்று நம்பிதிருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, நம்பியும் "இவ்வர்த்தத்தை ஒருவருக்கும் சொல்லவேண்டா" என்று நியமித்தருளித் திருமந்த்ரார்த்தத்தையும் சரமஶ்லோகார்த்தத்தையும் பரக்க ப்ரஸாதித்தருள, உடையவரும் க்ருதார்த்தராய் அன்று மற்றைநாள் தெற்காழ்வான் திருவோலக்கத்தில் அந்த ரஹஸ்யார்த்தத்தை எல்லாருக்கும் ப்ரஸாதித்தருள, இச்செய்தியை நம்பி கேட்டருளி, "ஒருவருக்கும் சொல்லவேண்டாவென்று நாம் சொல்லியிருக்க, அத்தையும் மறுத்த உமக்குப் பலம் என்?" என்று கேட்க, உடையவரும் "ஆசார்யநியமநத்தை மறுத்த அடியேனுக்கு நரகமே பலம்" என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் "இப்படி அறிந்து செய்ய அடுக்குமோ?" என்று கேட்டருள,

---

1. பதினேழு தடவை போய் வந்தும் 2. வருந்தியவராய்.

"மமைவ மரணம் பூயாந் மா பூத் வம்ஶவிநாஶநம் |
இதி புத்த்யா விநிஶ்சித்ய ராகவாய ந்யவேதயத் ||"

என்று சொன்ன இளையபெருமாளவதாரமாகையாலே, உடைய வரும் "அடியேனொருவனுமே நரகம்போவது, இவ்வர்த்தத்தைக் கேட்ட ஆத்மகோடிகளெல்லாரும் உஜ்ஜீவிப்பர்களே" என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் உடையவருடைய உள்கருத்துக்குப் போரஉகந்து, தாமது பெற்றிலோமென்று தம்மை நொந்து, "இன்று முதல் இத்தர்ஶநத்தை ராமாநுஜஸித்தாந்தமென்னக்கடவது, உமக்கு [1]ஆஜ்ஞாதிலங்கநதோஷம் இல்லை" என்று அருளிச்செய்து [2]போரஉகந்தருளினார்.

பின்பு அங்குள்ளவர்களெல்லாரும் "இவ்வர்த்தத்தை அருளிச் செய்த எம்பெருமானாரோ?" என்று உடையவர் திருவடிகளிலே ஸேவித்து நிற்க, நம்பியும் "இது எம்பெருமானார் தர்ஶநமென்று பேர் பெற்றிருக்கக்கடவது" என்று அருளிச்செய்தார்.

## ஸ்ரீபாஷ்யகாரர் திருவரங்கப்பெருமாளரையர்பக்கல் திருவாய்மொழி ஓதி நல்வார்த்தை கேட்டல்.

எம்பெருமானாரும் நம்பி திருவடிதொழுது விடைகொண்டு முதலிகளுடனே கோயிலேற எழுந்தருளிப் பெரியநம்பி திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, நம்பியும் "திருவரங்கப்பெருமாளரையர் பக்கல் திருவாய்மொழியுமோதி சில விஶேஷங்களான நல்வார்த்தைகளையும் கேளும்" என்று அருளிச்செய்ய, எம்பெருமானாரும் அன்று முதலாக ஆறுமாஸம் திருவரங்கப்பெருமாளரையருக்கு ஸர்வவித கைங்கர்யங்களையும் செய்து [3]அநுவர்த்திக்க, ஒரு நாள் மஞ்சள் காப்புக்கைங்கர்யத்தில் அரையரும் மிகவும் திருவுள்ள முகந்து "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து"என்கிறபடியே உறங்கும் பெருமாளே உலாவும் பெருமாளாக வந்த ஸதாசார்யன் பக்கல் மந்த்ரத்தையும் அர்த்தஶிக்ஷையையும் பெற்று எம்பெருமான் சரமஶ்லோகத்திலருளிச்செய்த உபாயத்தை அநுஷ்டித்து "அத்ர

1. கட்டளையைமீறின 2. மிக்க மகிழ்ந்தார் 3. பின்பற்றியிருக்க.

பரத்ர சாபி" என்கிறபடியே ஆசார்யன் பக்கல் மஹாவிச்வாஸமிருந்தால் "தஸ்ய முக்திஃ ஸ்தேஸ்திதா" என்கிறபடியே பரமபுருஷார்த்தம் [1]கைபுகுரும்; இது "நம் ஆளவந்தார் அருளிச்செய்த நல்வார்த்தை" என்றருளிச்செய்து, இதற்கு மதுரகவிகள் நடத்திப் போந்த கண்ணிநுண்சிறுத்தாம்பின் அர்த்தத்தையும், "தென்குருகூர் நகர் நம்பிக்கு அன்பனாய் மதுரகவிசொன்னசொல் நம்புவார்பதிவைகுந்தம்" என்றருளிச்செய்து ஸ்வரூபோபாயபுருஷார்த்தங்களை [2]விசதமாகக் காட்டுகிற திருவாய்மொழியையும் உபதேசித்தருள, அவைகளை க்ரஹித்தருளி அரையர் திருவடிதொழுது விடைகொண்டு பெரிய நம்பி ஸ்ரீபாதத்திலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க,

## ஸ்ரீ பாஷ்யகாரர் திருமாலையாண்டான்பக்கல் திருவாய்மொழி கேட்டல்

நம்பியும் "திருமாலையாண்டான்பக்கல் திருவாய்மொழிக்கு அர்த்தங் கேட்டுவாரும்" என்று நியமித்தருள, எம்பெருமானாரும் திருமாலையாண்டான் திருவடி தொழுது திருவாய்மொழிக்கு அர்த்தங் கேட்டுக்கொண்டிருக்க, "அறியாக் காலத்துள்ளே" என்கிற பாட்டுக்கு ஒருபடியாக அர்த்தம் அருளிச்செய்ய, எம்பெருமானாரும் ஒருபடியாய் [3]க்ருதஜ்ஞதை தோற்றும்படி ஒரு [4]யோஜனைசெய்து, "இதுவும் இப்பாட்டுக்கு ஒத்திருக்குமோ?" என்று விண்ணப்பஞ் செய்ய, ஆண்டானும் உகமகிழ்ந்து, அவ்வர்த்தத்தைத் திருக்கோட்டியூர்நம்பியும் பெரியநம்பியும் முதலிகளுடனே இருக்கும் போது அங்கேற எழுந்தருளி விண்ணப்பஞ்செய்ய, அவர்களும் "நம் ஆளவந்தார் பக்கல் இவ்வர்த்தத்தைக் கேட்டிருந்தோம்" என்று அருளிச்செய்து "ஆளவந்தார் பரிபூர்ணகடாக்ஷவிஷயரான எம்பெருமானார் நம்மிடத்தில் விசேஷார்த்தங்களைத்தெரியுமதுவும் ஸாந்தீபிநியிடத்தில் கண்ணன் வித்யாக்ரஹணத்தோடு [5]துல்யமாம்" என்றருளிச்செய்ய, ஆண்டானும் "அது ஒக்கும்" என்று உகந்தருள, அத்திரளோடே பெரியநம்பியும் எம்பெருமானார் மடமேற எழுந்தருளிக் குளிரக்கடாக்ஷித்துப் போந்தார். பின்பு திருமாலையாண்டானும் திருவாய்மொழி அர்த்தத்தைச் சாத்தியருளினார்.

1. கைக்கு வரும் 2. தெளிவாக 3. நன்றி 4. பொருத்தி 5. ஸமம்.

பின்பு ப்ரணதார்த்திஹரரென்கிற கிடாம்பியாச்சான் தனக்குப் [1]பித்ருஸஹோதரியான பெரியதிருமலைநம்பிதேவிகளைப் பார்க்கைக்காகத் திருமலையிற்சென்று நம்பி திருமாளிகையில் சில நாளிருக்க, அப்போது பெரிய திருமலைநம்பிக்கு ஒரு குமாரருண்டாக, அவருக்குப் பிள்ளை என்று திருநாமம் சாத்தினர்.

## திருக்குருகைப்பிரான்பிள்ளான் வைபவம்

துலாயாம் வேங்கடாத்ரௌ து பூர்வாஷாடாஸமுத்பவம் |
குருகேஶம் ப்ரசண்டாம்ஶம் வந்தே ஸ்ரீஶைலபூர்ணஜம் ||

பின்பு பெரியதிருமலைநம்பிக்குக் கலியுகத்தில் சஈகூ௩-ஆவதான ப்ரவ வர்ஷத்தில் ஐப்பசிமாஸம்[2]பூர்வாஷாடாநக்ஷத்ரத்தில் ப்ரசண்டாம்ஶராக இரண்டாங்குமாரரவதரிக்க அவருக்குப்பிள்ளானென்று திருநாமம் சாத்தியருளினர். அந்தப் பிள்ளானும் நம்பி காலக்ஷேபம் பண்ணிக் கொண்டிருக்கும்போது திவ்யப்ரபந்தங்களில் ஏதேனுமொரு பாட்டிற்கு அர்த்தமருளிச் செய்தால் அத்தை யுற்றுக் கேட்கவும் கேவல பாலர்கள் போலே அழுவதும் சிரிப்பதுமின்றியே எப்போதுமொரு தெளிவுடையதாய் நிற்கவும் கண்டு, நம்பியும் "இது ஓராஶ்சர்யகரமாயிருப்பதே" என்று போர உகந்து "நம்முடைய பூம்ப் பிராட்டியாரிடத்தில் பிறந்த இளையாழ்வார் போல் காணும்" என்று நெஞ்சிற் கொண்டிருக்க, இவைகளையெல்லாம் அங்குள்ளாரறிந்து "இதென்ன?" என்று திகைக்க, கிடாம்பியாச்சானும் தான் அத்யயநாதிகளைப் பண்ணிக் கொண்டு பிள்ளான் நாள்தோறும் [3]அபிவ்ருத்தராய்ச் செய்கிற அக்ஷராப்யாஸம் முதலான வித்யா க்ரஹணத்தையும் திவ்யப்ரபந்தாபிமாநத்தையுங் கண்டு "இதென்ன?" என்று உள் மகிழ்ந்து நிற்க,

பின்பு ஒரு நாள் கோயில் ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமலையேற எழுந்தருளித் திருமலையப்பனைத் திருவடி தொழுது, நம்பி திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, "கோயில் வ்ருத்தாந்தமென்?" என்று நம்பியும் கேட்டருள, அவர்களும் எம்பெருமானார் ப்ரபாவத்தைப் பரக்க விண்ணப்பஞ் செய்ய, நம்பியும் கேட்டு உகந்து "நம் ஆளவந்தார் நியமநம் பலித்தது" என்று போர உகந்து இப்படிக்கு

1. தந்தையின் சகோதரி 2. பூராடம் 3. வளர்ந்தவராய்.

நிறைவேற்றின திருமலையப்பனைத் திருவடி தொழுது "ப்ரூஹி ஸௌம்ய புந: புந." என்கிறபடியே "இன்னும் சொல்லும் இன்னும் சொல்லும்" என்று கோயில் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கேட்க, அவர்களும் அந்த [1]வைபவத்தைத் திரும்பவும் சொல்ல, இவைகளைக் கேட்டு பிள்ளானும்,

"பாலா அபி க்ரீடமாநா க்ருஹத்வாரேஷு பூரிஶ: ।
ராமாபிஷ்டவஸம்யுக்தாஶ் சக்ருரேவ மித: கதா: ॥"

என்கிறபடியே எம்பெருமானார் வைபவத்தையே பல இடத்திலும் பல்காலமும் சொல்லித்திரிய, இத்தைக் கண்டு நம்பியும் உள் மகிழ்ந்து, பிள்ளானுக்குத் திருக்கல்யாணம் பண்ணி வைத்து, "கதா த்ரக்ஷ்யாமஹே ராமம்" என்கிறபடியே எம்பெருமானார் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கவேணும் என்று த்வரைப்பட்டிருக்கிற கிடாம்பியாச்சானோடே பிள்ளானையுங் கூட்டி அனுப்பித்து, எம்பெருமானாருக்குத் திருமலை அப்பனைத் திருவடி தொழ வரும்படி நியமித்தருள, ஆச்சானும் பிள்ளானுடனே பெருமாள் கோயிலேற வந்து பேரருளாளன் திருவடி தொழுது, இவ்வர்த்தங்களை யெல்லாம் தம் தாயாருக்கும் அறிவித்துக் கோயிலேறப் போய்ப் பெரியபெருமாளை ஸேவித்து எம்பெருமானார் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து விழுந்து கிடக்க, எம்பெருமானாரும் "இதென்ன?" என்று கேட்க, ஆச்சானும் பெரியதிருமலைநம்பி ஸந்நிதியில் நடந்த[2]வ்ருத்தாந்தங்களையெல்லாம் விண்ணப்பஞ் செய்ய, எம்பெருமானாரும் பெரிய திருமலை நம்பி திருவுள்ளத் துகப்பைக் கேட்டு உள் மகிழ்ந்து, ஆச்சானை [3]முடிபிடித்தெடுத்துப் போர உகந்தருளி, "இவரோ பிள்ளான்?" என்று கேட்க, பிள்ளானும் "அடியேன்" என்று திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, எம்பெருமானாரும் தந் தாமரைக் கண்களை அமலங்களாக விழித்து, குளிர நோக்கியருளி, "நம்மிடத்தில் ஆளவந்தாரும் நம்பியும் செய்தருளின கடாக்ஷ விஶேஷம் உமக்கு [4]ஸ்வதஸ்ஸித்தமாயிருக்கும்" என்று போர உகந்தருளி, ஆச்சானுக்கு ஸமஸ்த விஶேஷார்த்தங்களையும் ப்ரஸாதித்தருளினார். ஆச்சானும் [5]அநிதர ஸாதாரணமாக எம்பெருமானார் [6]திருமேனிப்பரிவராய்ப் போந்தார்.

1. பெருமையை 2. செய்திகளை 3. தலையைப் பிடித்தெடுத்து (அன்போடு வாரியணைத்து) 4. தானேயமையும் 5. மற்றவருக்கில்லாத 6. உடலில் அன்பு.



திருச்சானூரில் திவ்ய ஸேவை தந்தருளும்

**ஸ்ரீ அலர்மேல்மங்கைத்தாயார்**



திருமலையில் திவ்ய ஸேவை தந்தருளும்

ஸ்ரீ திருவேங்கடமுடையான்

பின்பு பெரிய நம்பியும் திருக்கோட்டியூர் நம்பியுடனே எழுந்தருளியிருக்கும் போது "கோயிலிலே எம்பெருமானார் [1]மாதுகரத்தில் ஒருவன் துர்புத்தியாலே விஷத்தைக் கலந்து கொடுக்கக் கண்டு [2]உடவாஸத்தோடே எழுந்தருளியிருக்கிறார்" என்று கேட்டருளி, பெரிய நம்பியும் பரபரப்புடனே நம்பியையும் கூட்டிக் கொண்டு எழுந்தருளச் செய்தே மத்யாஹ்ந காலத்தில் திருக்காவேரியிலெழுந்தருள, எம்பெருமானாரும் முதலிகளோடே எதிர்கொண்டு போய் பெரிய நம்பியைத் தண்டன் ஸமர்ப்பிக்க நம்பியும் முடிபிடித்தெடுத்துக் குளிரக் கடாக்ஷித்தருள, திருக்கோட்டியூர் நம்பி பக்கல் தண்டன் ஸமர்ப்பித்துக் கொண்டிருக்க, நம்பியும் "[3]அமையும், எழுந்திரும்" என்று சொல்லாமலிருக்க, கிடாம்பியாச்சானும் "இதென்ன? ஆசார்ய ஶிஷ்ய [4]க்ரமந்தான்; உயிர் முடியுமளவும் பரீக்ஷை பண்ண [5]அடுக்குமோ?" என்று எம்பெருமானாரை வாரியெடுத்துக் கொண்டு கண்ணீர் மல்க நிற்க, திருக்கோட்டியூர் நம்பியும், "உம்மை அன்றோ தேடுகின்றோம்? இவர் திருமேனிக்குப் பரிவரான நீரே மாதுகரத்தை ஶோதித்து [6]ஸமாபநம் பண்ணுவிக்கக் கடவீர்" என்று நியமித்தருள, கிடாம்பியாச்சானும் அப்படியே பண்ணிக் கொண்டு வர, எம்பெருமானாரும் திருவுள்ளம் பற்றி யெழுந்தருளியிருந்தார்.

## எம்பெருமானாரை யஜ்ஞமூர்த்தி ஆஶ்ரயித்தல்

அப்போது யஜ்ஞமூர்த்தி யென்கிற ஒரு வித்வான் திக்விஜயம் பண்ணிக் கொண்டு கோயிலேற வந்து உடையவரைப் பார்த்து, "இப்போது உம்முடைய ஸித்தாந்தத்தை நிர்வஹித்தீராகில், உமக்கு நான் ஶிஷ்யனாகக் கடவேன்" என்றும், "இல்லாவிட்டால் எனக்கு நீர் ஶிஷ்யனாகவேண்டும்" என்றுஞ் சொல்ல, எம்பெருமானாரும் அப்படியே திருவுள்ளம் பற்றிப் பதினெட்டு நாள் எல்லையிட்டுப் பதினேழு நாளும் யஜ்ஞமூர்த்தி யுக்திப்ரபலமாயிருக்கக் கண்டு, தம் பேரருளாளனை ஆராதித்து "இந்தத் தர்ஶநம் அடியேனைத் தோற்றித் தோற்கக் கடவதோ?" என்று தாம் அமுது செய்யாமல் கண் வளர்ந்தருள, பேரருளாளனும் "ஆளவந்தார் அருளிச் செயல்

1. பிக்ஷை 2. பட்டினி 3. போதும் 4. முறை 5. தகுமோ 6. அமுது செய்வித்தல்

களை மறந்தீரோ?'' என்று [1]ஸ்வப்நத்திலருளிச்செய்ய, எம்பெருமானு ரும் விடிந்தவாறே அவ்வர்த்தங்களை யெல்லாம் நெஞ்சிற் கொண்டு வேதாந்தத்தில் யஜ்ஞமூர்த்தியை ஜயித்து அவருக்கு ப்ராயஶ்சித்த [2]புரஸ்ஸரமாக ஶிகாயஜ்ஞோபவீத ஸஹித துரீயாஶ்ரமத்தையும் பஞ்ச ஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதித்தருளி, பேரருளாளன் ஸ்வப் நத்தாலே அவருக்கு அருளாளப் பெருமாளெம்பெருமானுரென்று திருநாமம் ப்ரஸாதித்துத் திவ்யப்ரபந்தம் முதலான விஶேஷார்த் தங்களையும் ப்ரஸாதித்தருளினுர்.

## அநந்தாழ்வார் வைபவம்

பின்பு ஒருநாள் ''ஒழிவில் காலமெல்லாம்'' என்கிற திருவாய் மொழியில் ஆளவந்தார் திருவுள்ளத்தை அருளிச் செய்ய, அநந்தாழ் வான் ''அந்தக் கைங்கர்யத்தை நடத்துகிறேன்'' என்று திருமலை யில் திருநந்தநவநம் செய்து திருமலையப்பனுக்குப் புஷ்ப கைங்கர்யம் செய்துகொண்டிருந்தார்.

## திருமலைநம்பி பக்கல் எம்பெருமானுர் ஸ்ரீமத் ராமாயணம் கேட்டல்

பின்பு எம்பெருமானுர் பெரிய திருமலை நம்பி நியமநப்படிக்குத் திருமலையேற வெழுந்தருளும் போது பெருமாள் கோயிலிலே சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆஶ்ரயிக்க, அவர்களையும் அழைத்துக் கொண்டு திருமலை அடிவாரத்திலெழுந்தருள, அவ்விடத்தில் முப்பது திருநாமங்களாஶ்ரயிக்க, அவர்களை [3]அங்கீகரித்துப் பின்பு அநந் தாழ்வான் திருமலை இறங்கி உடையவரை யெழுந்தருளப் பண்ணிக் கொண்டு போக, திருவேங்கடமுடையான் அமுது செய்தருளின ப்ரஸாதத்தை ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் கையில் கொடுத்து ''எம்பெரு மானுருக்கு எதிர் கொண்டு தீர்த்த ப்ரஸாதங் கொடுத்து வாரும்'' என்று திருமலைநம்பி நியமித்தருள, அவரும் எதிர்கொண்டு போய்க் கொடுக்க, எம்பெருமானுரும் அத்தை ஸ்வீகரித்துக் கோயிலருகே எழுந்தருள, அநந்தகோத்து பரிஜநமும் திருமாலை முதலானவைகளை யெடுத்துக் கொண்டு எதிரே வந்து [4]ஸத்கரிக்கும்படி செய்வித்துத் தாமும் முன்பாக எழுந்தருள, உடையவரும் நம்பி திருவடிகளிலே

1. கனவில் 2. முன்னிட்டு 3. ஏற்று 4. கௌரவிக்கும்படி.

விழுந்து "அடியேனை இவ்வண்ணமாக்கும்படி [1]ரக்ஷார்த்தமாக திரு விலச்சினையும் ப்ரஸாதித்து, ஆளவந்தார் நியமநப்படிக்கு [2]அபி வ்ருத்தமாகும்படி பகவத் ப்ரபத்தி செய்தருளின தேவரீர் திருவடி களைத் தொழும்படி இப்போதன்றோ வாய்த்தது!" என்று உள் மகிழ்ந்து நிற்க, நம்பியும் வாரியணைத்து "நம் ஆளவந்தார் திருவுள் ளத்தை நம் அப்பன் [3]தலைக்கட்டினான்" என்று திருவுள்ளமுகந்து திருமாலை முதலானவைகளையும் ப்ரஸாதித்தருள, எம்பெருமானாரும் பெரிய திருவீதி ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி ஞானப்பிரானையும் திருவேங்கடமுடையானையும் திருவடி தொழுது மூன்று நாள் எழுந்தருளியிருந்து திருமலையினின்றுமிறங்கி அந்தப் பெரியதிருமலைநம்பி ஸந்நிதியில் ஒரு [4]ஸம்வத்ஸரம் ஸ்ரீமத் ராமாயணார்த்தத்தைக் கேட்டுக்கொண்டெழுந்தருளியிருந்து ஸ்ரீமத் ராமாயணம் சாத்தினவாறே,

திருமலை நம்பியும் தம் குமாரர்களை உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்து, பிள்ளானுடைய [5]ஆஜாநஸித்தமான [6]ஸத்வ்ருத்தாந் தத்தையும் அருளிச் செய்து "உம்முடைய விஶேஷகடாக்ஷத்திற்கு இது நல்ல பாத்ரம்" என்று பிள்ளானைக் காட்டிக் கொடுத்தருள, எம் பெருமானாரும் அப்படியே திருவுள்ளம் பற்றி அங்கீகரித்துப் பஞ்ச ஸம்ஸ்காரம் முதலாக ஸமஸ்த விஶேஷார்த்தங்களையும் ப்ரஸா தித்தருளி,

## எம்பார் வைபவம்

"கோவிந்தப் பெருமாளையும் அடியேனுக்குக் கொடுத்தருள வேணும்" என்று நம்பியைக் கேட்டு [7]உதகதாரா பூர்வமாக வாங்கிக் கொண்டு கோயிலேறப் போவதாகப் பெருமாள் கோயிலேற வெழுந் தருள, கோவிந்தப் பெருமாளிடத்தில் [8]வைவர்ண்யத்தைக் கண்டு, "நம்பியை ஸேவித்து வாரும்" என்ன, அவரும் அப்படியே போக, நம்பியும் முகம் கொடாமலிருக்க, [9]நிராஶராய்த் தெளிந்து உடைய வர் திருவடிகளிலே ஸேவித்து நிற்க, எம்பெருமானாரும் அத்திர ளோடே கோயிலேற வெழுந்தருளினார்.

---

1. காப்பாக 2. வளரும்படி 3. செய்துமுடித்தான் 4. வருடம் 5. பிறவி முதலாகவே உண்டான 6. நற்செய்தியை 7. நீர் தாரை வார்த்துக் கொடுக்க (தத்தெடுத்துக் கொண்டு) 8. முகவாட்டம் 9. வெறுப்புள்ளவராய்.

பின்பு ஒருநாள் கோவிந்தப் பெருமாளுடைய விஷய விரக்தியைப் பஹுவாகப் பார்த்தருளி, துரீயாஸ்ரமத்தைப் பண்ணுவித்தருளி, தந் திருநாமத்தில் [1]ஆத்யந்தக்ரஹணம் பண்ணி "எம்பார்" என்று திருநாமம் ப்ரஸாதித்தருளினார்.

பிறகு எம்பெருமானார் கூரத்தாழ்வான், நடாதூராழ்வான், முதலியாண்டான், எம்பார் முதலான முதலிகளையும் கூட்டிக்கொண்டு ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை ப்ரதிபாதிக்கிற திருமந்த்ரத்தினுடைய அர்த்தங்களைப் பூர்வபக்ஷ ப்ரதிக்ஷேப புரஸ்ஸரமாக ஸித்தாந்த ஸ்தாபநம் பண்ணும்படி விசிஷ்டாத்வைதபரமாக வேதவியாஸர் செய்தருளின ஸூத்ரத்திற்குப் [2]பாதிதார்த்தங்களைக் கற்பித்த சங்கராதிகள் போலன்றிக்கே அபாதிதார்த்தங்களை அவ்யாஹதமாக எல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி ஒரு பாஷ்யம் செய்தருளவேணும் என்று நிஸ்சயித்து, வேதார்த்த ஸங்க்ரஹம், வேதாந்தஸாரம், வேதாந்த தீபம் என்கிற கிரந்தங்களையும் செய்தருளிப் பின்பு ஸ்ரீபாஷ்யத்தையும் செய்தருளி, ஆளவந்தாருடைய [3]ப்ரதமமான திருவுள்ளத்தை நிறைவேற்றினார்.

பின்பு ஒருகால் ஒரு பங்குனி உத்திரத் திருநாளில் பெருமாளும் நாச்சிமாரும் திருமஞ்சநங்கொண்டருளி ஒரு சேர்த்தியிலெழுந்தருளியிருக்கும்போது "தாம் பண்ணின [4]பரஸமர்ப்பணத்தைத் திருவுள்ளம் பற்றின திவ்ய தம்பதிகள் தமக்கு அபயப்ரதாநம் பண்ணின திருமுகப்பாசுரத்தை யெல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கவேணும்" என்று திருவுள்ளம் பற்றி கத்யத்ரயத்தை அருளிச் செய்தார். இப்படி பாஷ்யாதிகளாலே உபாயத்தை அறிந்து கத்யத்ரயத்தாலே அநுஷ்டித்தவனுக்குப் புருஷார்த்தமான கைங்கர்யங்களை இங்கு இருந்த காலமெல்லாம் க்ரமமாக நடத்துகைக்காக நித்யக்ரந்தத்தையும் அருளிச் செய்தார்.

பின்பு ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களில் [5]அத்யந்த வைராக்யமும் பாகவத ப்ராவண்யமும் அநுஷ்டான [6]வைலக்ஷண்யமும் பிள்ளானிடத்தில் அதிசயித்திருக்க, அத்தைக்கண்டு எம்பெருமானாரும் போர உகந்தருளினார்.

1. முதலெழுத்தும் கடை எழுத்தும் சேர்த்து 2. பாதகமான (முரணான) 3. முதலாவதான 4. சரணாகதியை 5. சிறப்பான அறிவையும் 6. சிறப்பும்.

பின்பு கூரத்தாழ்வான் நடாதூராழ்வான் முதலான முதலிகளோடே எம்பெருமானாரும் பரமதங்களை ஜயித்துக் கொண்டு திருக்குடந்தை முதலாக அழகர் திருமலையிலும் திருப்புல்லாணியிலும் எம்பெருமான் திருவடி தொழுது திருவணையாடித் திருநகரில் ஆழ்வாரையும் பொலிந்துநின்றபிரான் முதலான எம்பெருமான்களையும் திருவடிதொழுது திருக்குறுங்குடியில் பெருங்கூட்டத்து முதலிகளோடே நீராடி அநுஷ்டாநம் செய்துகொண்டிருக்க, அந்தத் திவ்யதேசத்தெம்பெருமானான திருக்குறுங்குடி நம்பியும் ஒரு ஸ்ரீவைஷ்ணவரூபமாய் வந்து உடையவரைப் பார்த்து "எம்பெருமான் ராமக்ருஷ்ணாதி ரூபேண அவதரித்துத் திருத்தவும் திருந்தாத இச்சேதநர்களையும் திருத்தும்படியான மந்த்ரம் உமக்கு இருக்கிறது. ஆகையால் அந்த மந்த்ரத்தை எனக்குச் சொல்ல வேணும்" என்ன, உடையவரும் அந்த ஸ்ரீவைஷ்ணவருக்குப் பஞ்ச ஸம்ஸ்காரபுரஸ்ஸரமாகத் திருமந்த்ரத்தை உபதேசித்து ஸ்ரீவைஷ்ணவ நம்பியென்று [1]திருநாமமும் திருமண்காப்பும் ப்ரஸாதித்தருள, அந்த ஸ்ரீவைஷ்ணவரும் அவைகளைப் பெற்றுக் கொண்டு [2]அந்தர்த்தாநமாய்ப் போக, உடையவரும் முதலிகளும் "இதென்ன ஆஶ்சர்யம்!" என்று திருக்குறுங்குடிநம்பி திருவடி தொழுது [3]ஆபாதமஸ்தகம் நம்பியை ஸேவித்துநிற்க, தாமிட்ட திருமண்காப்பு நம்பி திருநெற்றியிலே இருக்கக் கண்டு ஶரணாகதி கத்யத்தாலே க்ஷாமணம் பண்ணிக்கொள்ள, நம்பியும் உகந்தருளி உடையவரைக் குளிரக் கடாக்ஷித்தருளினார்.

பின்பு உடையவரும் திருவண்பரிசாரம் முதலாகத் திவ்யதேசங்களில் எம்பெருமான் திருவடிதொழுது அங்கங்குள்ள [4]குத்ருஷ்டிகளையும் ஜயித்து ஸரஸ்வதீ பீடத்தேற எழுந்தருள ஸரஸ்வதியும் எதிர்கொண்டு அழைத்து "ஶங்கராதிகள் போலன்றிக்கே யதார்த்தத்தைக்கொண்டு பாஷ்யம் பண்ணினவரானகயாலே அந்தப் பாஷ்யத்திற்கு "ஸ்ரீபாஷ்யம்" என்றும், உமக்கு "ஸ்ரீபாஷ்யகாரர்" என்றும் திருநாமம் சாத்தினோம்" என்று சொல்லி அந்த ஸ்ரீபாஷ்யத்தை [5]ஶிரஸா வஹித்துத் தனக்கு ஆராதநமான ஸ்ரீலக்ஷ்மீஹயக்ரீவரையும் அந்தப் பாஷ்யத்தையும் உடையவர் கையில் கொடுக்க,

1. பெயரும் 2. மறைந்து போக 3. திருவடி முதல் திருமுடி வரை 4. கெட்ட நோக்குடையவர்களை 5. தலையாலேற்று.

உடையவரும் மஹாதநத்தைப் பெற்று ஸந்தோஷத்தோடே மடமேற எழுந்தருளியிருந்து அங்குள்ள குத்ருஷ்டிகளையும் ஜயிக்க, அத்தேஶத்தின் ராஜா கேட்டு உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்க, குத்ருஷ்டிகள் [1]அபிசாரஹோமத்தைப் பண்ண, அதுவும் அவர்களுக்கே தீங்காய் முடிய, அவர்களும் உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்க, உடையவரும் அங்குநின்றும் புறப்பட்டு வடதிசை மதுரை முதலான திவ்ய தேஶங்களில் எம்பெருமான் திருவடி தொழுது கங்கையில் நீராடி ஸ்ரீபுருஷோத்தமத்திலும், ஸ்ரீகூர்மத்திலும், ஸிம்ஹாத்ரியிலும், அஹோபிலத்திலும் எம்பெருமான் திருவடி தொழுது அங்கங்குள்ள குத்ருஷ்டிகளையும் ஜயித்து திருமலையேற எழுந்தருளினர்.

அப்போது ஶைவர் வந்து திருவேங்கடமுடையானை "எங்கள் நாயனர்" என்று பெரிய திருமலைநம்பியோடே வழக்கிட்டுக் கொண்டிருக்க, அவ்வளவில் உடையவரும் பெருங்கூட்டத்து முதலிகளோடே சென்று அவர்களை விலக்க, அவர்களும் "வைஷ்ணவ [2]சிஹ்நமும் ஶைவசிஹ்நமும் இல்லாமையாலும், இருபடியாயிரண்டு சிஹ்நமும் இருக்கிறபடியாலும் பொதுவாகவேண்டும்" என்ன, உடையவரும் "[3]திருவாழி திருச்சங்குகளையும் திருமார்வுநாச்சியாரையும் த்ரிஶூல [4]டமருகங்களையும் பண்ணிவைத்துத் [5]திருக்காப்பு சேர்த்து "ப்ராதஃகாலத்தில் ஶோதித்தறிந்து கொள்ளுவோம்" என்ன, அவர்களும் அப்படியே [6]இசைந்தவாறே, அப்படியே செய்துவைத்துத் திருக்காப்பு சேர்த்துக் காவலிட்டு வைத்து, ப்ராதஃகாலத்தில் இருவருமாய் வந்து ஶோதிக்குமளவில், த்ரிஶூல டமருகங்களை முறித்துக் [7]காற்கடைக்கொண்டு திருவாழி திருச்சங்குகளையும் திருமார்வுநாச்சியாரையும் தரித்துக் கொண்டிருக்கக் கண்டு, உடையவரும் அந்த ஶைவர்களையும் ஓட்டிவிட்டுத் திருவேங்கடமுடையானுக்குத் திருவாராதநம் முதலானவைகளை முன்புபோலே நடத்த, பெரிய திருமலைநம்பியும் உடையவரைப் போர உகந்தருளி, பிள்ளானையும் குளிக் கடாக்ஷித்தருளி, பின்னை திருமலைநம்பியை நிறுத்திக்கொண்டு விடைகொடுக்க, உடையவரும் நம்பி திருவடி தொழுது பெருமாள் கோயில் முதலாக உள்ள

---

1. சூன்யமிடுதல் 2. அடையாளம் 3. சக்கரம் 4. உடுக்கை 5. கதவடைத்து 6. ஒப்பினவாறே 7. காலுக்கடையில்.

எம்பெருமான் திருவடி தொழுது கோயிலேற வெழுந்தருளி ஸமஸ்த விசேஷார்த்தங்களையும் ப்ரஸாதித்துக்கொண்டெழுந்தருளி யிருந்தார்.

## பட்டர் வைபவம்

பின்பு ஒருநாள் கூரத்தாழ்வான் [1]வர்ஷா ப்ரதிபந்தகத்தாலே உபவாஸத்துடனே இருக்க, அப்போது பெரிய பெருமாள் அமுது செய்து திருச்சின்னம் பரிமாற, அவர் தேவிகள் கேட்டு இப்படி பக்தர் பட்டினியேயிருக்க, நீர் என் செய்கிறீர்? என்ன, பெருமாளும் உத்தமநம்பிக்கு ஸ்வப்நத்தில் ஆழ்வானுக்கு ப்ரஸாதம் கொடுக்கும்படி நியமித்தருள, அவரும் அப்படியே கொடுக்க, ஆழ்வானும் எதிரே சென்று 'மஹாப்ரஸாதம்' என்று அங்கீகரித்துத் தேவிகளுக்குங் கொடுத்துத் தாமும் அமுதுசெய்ய, அது முதல் ஆழ்வான் தேவிகளுக்குக் கர்ப்பம் தரித்து இரண்டு குமாரர்களவதரிக்க, எம்பெருமானாரும் அஸாதாரணமான ஆசார்ய பக்தியுடைய ஆழ்வானுக்குப் பெரியபெருமாள் கடாக்ஷத்தாலே உத்பந்நர்களான இருவர்களில் ஜ்யேஷ்ட குமாரருக்கு எம்பாரைக்கொண்டு பராசர பட்டர் என்று திருநாமத்தை ப்ரஸாதிக்கும்படி செய்தருளி, ஆளவந்தாருடைய த்விதீயாபிப்ராயத்தை நிறைவேற்றினார்.

பின்பு எம்பார் ஸந்நிதியில் திருமந்த்ராதிகளைப் பெற்று அபிவ்ருத்தரான பட்டரை அழைத்து ஸஹஸ்ரநாம பாஷ்யம் பண்ணும்படி [2]நியமித்தருள, பட்டரும் அப்படியே செய்ய, அத்தையே பாஷ்யமென்று காலக்ஷேபத்தில் வைக்கும்படி நியமித்தருளினார்.

பின்பு ஒருகால் திவ்ய ப்ரபந்தார்த்தங்களை [3]மநநம் பண்ணிக் கொண்டு எம்பெருமானார் மடத்திற்குள்ளே உலாத்திக்கொண்டிருக்க, பிள்ளானும் அவ்வாசல் திறவுகோல் வழியாய்ப் பார்த்து, எம்பெருமானார் அபிநய க்ரமமாக உலாத்திக் கொண்டிருக்குமதை யறிந்து இப்போது "திருமாலிருஞ்சோலை மலையென்றேனென்ன" என்கிற திருவாய்மொழி அர்த்தாநுஸந்தாநமோ?" என்று விண்ணப்பஞ் செய்ய, எம்பெருமானாரும் கேட்டு "இதென்ன?" என்று திகைத்து, 'நம் பிள்ளானோ?' என்று கேட்க, அவரும்

1. மழைத் தடங்கலாலே 2. கட்டளையிட 3. தியானம்.



ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யகர்த்தாவான

ஸ்ரீ பட்டர்

(கூரத்தாழ்வானின் திருக்குமாரர், பிதாவும் உகந்த ஞானநிதி)
ரங்கநாத புத்ரர், பராசர பட்டர் என்று போற்றப்படுபவர்.

---

சென்னை பைராகி மடம் ஸ்ரீநிவாஸர் ஸந்நிதியில் ஸேவை தருபவர்

"அடியேன்" என்று விண்ணப்பஞ் செய்ய, வாசல் திறந்துவிட்டுப் பிள்ளானை வாரியெடுத்து உச்சி மோந்து, பெரியநம்பி முதலான பெருங்கூட்டத்தில் ஆழ்வான் முதலான முதலிகளும் கேட்கும்படி இவ்வாஶ்சர்யத்தை யருளிச்செய்து, இவர் ஆஜாநஸித்தமான ஸத்வ்ருத்தங்களையும் ப்ரபந்த ப்ராவண்யத்தையும் கேட்டுமன்றி யில் பாஷ்யாதிகளிலே இவருடைய வைஶத்யத்தையும், பாகவத பாரதந்த்ர்யத்தையும் இப்போது நாம் ப்ரபந்தார்த்த மநநம்பண்ண அதன் சுவடு அறிந்தபடியையும் பார்த்தால் "நம்பி நியமநப்படிக்கு விஶேஷ கடாக்ஷ பாத்ரர் இவரேயாவர்" என்று போர உகந்தருளி, அந்தப் பெருங் கூட்டத்தில் பிள்ளானை ஜ்ஞாநபுத்ரராக ஸ்வீகரித் தருளி, அவருக்கு "திருக்குருகைப்பிரான் பிள்ளான்" என்று ஆழ் வாருடைய திருநாமத்தையும் ப்ரஸாதித்து, ஆளவந்தாருடைய த்ருதீயாபிப்ராயத்தை நிறைவேற்றியருளினார்.

பின்பு பிள்ளானை யழைத்து "ஆழ்வார்கள் அருளிச் செயல்களை யும் திருமந்த்ரம் முதலான வேதாந்த ஸம்ப்ரதாயத்தையும் 'நாதோ பஜ்ஞம் ப்ரவ்ருத்தம்' என்னும்படி நம்மாழ்வாரிடத்தில் பெற்று அவைகளை [1]யவிச்சிந்ந குருபரம்பரையாலே நிலைநிறுத்தின நாதமுநி கள் திருவம்ஶத்தில் பிறவித் துவக்காலும் ஆளவந்தாருடைய நியமநத்தைத் தலைக்கட்டின பெரிய திருமலைநம்பி குமாரராகை யாலும் ஆஜாநஸித்தமான ப்ரபந்த ப்ராவண்யத்தை யுடையவ ராகையாலும் முன்னோர்கள் கடாக்ஷ விஶேஷத்திற்குப் பாத்ர பூத ராய் இப்போது திருவாய் மொழியில் அர்த்தாநுஸந்தாந க்ரமத்தை யறிந்தீர். நாலாயிரத்தில் ப்ரதாநமான இந்தத் திருவாய் மொழிக்கு ஆறாயிரப்படி வ்யாக்யாநம் பண்ணும்" என்று நியமித்தருள, பிள் ளானும் திருமந்த்ரார்த்தமான வ்யாஸஸூத்ரார்த்தத்தை தொண் டர்க் கமுதுண்ணலாம்படி எல்லாருக்கும் அதிகரிக்கலான பாஷை யாலே நம்மாழ்வாரருளிச் செய்ததாகையால் அந்த ஸூத்ரபாஷ்யத் திற்கு உடையவர் செய்தருளின மங்களமே த்ரமிட வேதாந்த பாஷ்யத்திற்கும் மங்களமாகக் கடவது என்று நினைத்து, ஆறாயிரப் படி வ்யாக்யாநத்தைச் செய்தருளி ஸமர்ப்பிக்க, உடையவரும் அத்தைக் கடாக்ஷித்துப் போர உகந்தருளி, "உமக்கு ஆளவந்தார் நியமநத்தாலே திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்று திருநாமம்

1. தொடர்ச்சியான.

ப்ரஸாதித்தது ஸார்த்தமாயிற்று" என்று அருளிச் செய்து அந்த வ்யாக்யாநத்தையே 'பகவத்விஷயம்' என்று திருநாமம் சாத்தி "தாம் செய்த ஸூத்ரபாஷ்யத்தைப்போலே காலக்ஷேபத்தில் வைக்கக்கடவது" என்று எம்பெருமானார் நியமித்தருள, பெரிய நம்பி முதலான பெரியோர்களும் அப்படியே திருவுள்ளம் பற்றி உகந்தருளினார்கள்.

பின்பு இவ்வ்ருத்தாந்தங்களையெல்லாம் கோயில் ஸ்ரீவைஷ்ணவர்கள் பெரிய திருமலை நம்பி ஸந்நிதியில் விண்ணப்பஞ் செய்ய, நம்பியும் கேட்டுப் போர உகந்தருளி, ஆளவந்தார் நியமநம் தலைக்கட்டித்தென்று உள்ளுகிழ்ந்தருளினார்.

இவ்வர்த்தங்களையெல்லாம் ஸங்க்ரஹித்து—

"அபாதிதார்த்தைர நபாயவாசாம்
தத்வ்யாஸஸூத்ரஸ்ய யதார்த்தபாஷ்யம் |
க்ருத்வா யதீந்த்ரோ துரி யாமுநார்ய-
மநோரதம் பூரிதவாந் ஸ ஆத்யம் ||

பட்டாரகந் தஞ்ச பராஶராக்யங்
க்ருத்வா க்ருதந் தேந ஸஹஸ்ரநாம்நாம் |
பாஷ்யம் ப்ரதிஷ்டாப்ய ச யாமுநார்ய-
மநோரதம் பூரிதவாந் த்விதீயம் ||

பிள்ளாநபிக்யங் குருகேஶ்வராக்யங்
க்ருத்வா க்ருதந் தேந ச ஷட்ஸஹஸ்ரம் |
பாஷ்யம் ப்ரதிஷ்டாப்ய ஸ யாமுநார்ய-
மநோரதம் பூரிதவாந் த்ருதீயம் ||"

என்று வடுகநம்பி யதிராஜவிபவத்தில் அருளிச் செய்தார்.

பின்பு திருக்கோட்டியூர் நம்பி திருநாட்டுக் கெழுந்தருளினாரென்று கேட்டு உடையவரும் ஸ்ரீசூர்ண பரிபாலநம் முதலானவைகளைச் செய்தருளினார்.

**திருக்கோட்டியூர் நம்பி திருநக்ஷத்திரம் வைகாசி மாஸத்தில் ரோஹிணி.**

பின்பு திருமாலையாண்டான் திருநாட்டுக் கெழுந்தருளினாரென்று கேட்டு உடையவரும் ஸ்ரீசூர்ண பரிபாலநம் முதலானவைகளைச் செய்தருளினார்.

**திருமாலையாண்டான் திருநக்ஷத்ரம் மாசி மாஸத்தில் மகம்.**

பின்பு ஒருநாள் திருவரங்கப் பெருமாளரையர் திருநாட்டுக் கெழுந்தருள, அவருக்குப் [1]பௌத்ரரான சொட்டையம்மானைக் கொண்டு ஸ்ரீசூர்ண பரிபாலநம் முதலான கைங்கர்யங்களையெல்லாம் பண்ணுவித்தருளினார்.

திருவரங்கப் பெருமாளரையர் திருநக்ஷத்ரம் வைகாசி மாஸத்தில் கேட்டை

பின்பு உடையவர் வைபவங்களையெல்லாம் கேட்டு [2]மதாந்தரஸ்த வித்வான்களெல்லாரும் இந்த ராமாநுஜ ஸித்தாந்தத்தை ஜயிக்கும்படியான ஶக்தி யில்லாமையாலே, சோழனைக் கொண்டு வஞ்சிக்கும்படி அவனுக்குத் [3]துர்ப்போதநம் பண்ணிவைத்தார்கள்.

பின்பு கூரத்தாழ்வான் நடாதூராழ்வான் முதலான முதலிகளோடே உடையவர் காலக்ஷேபஞ்செய்துகொண்டிருக்கிற காலத்தில் சோழ ராஜாவும் வித்வான்களை யழைத்து "ஶிவாத் பரதரம் நாஸ்தி" என்று எழுதச் சொல்லித் தண்டிக்க, சிலர் [4]அர்த்த காமங்களடியாக எழுத்திட்டார்கள். சிலர் அவனுக்கு அஞ்சி எழுத்திட்டார்கள். இத்தை நாலூரான் கண்டு எம்பெருமானார் எழுத்திட்டாலன்றோ ப்ரயோஜந முண்டாவது? இவர்களெழுத்திட்டாலென்ன ப்ரயோஜநம்?" என்ன, சோழனும் எம்பெருமானாரை அழைத்துக் கொண்டு வரும்படி சில மநுஷ்யரை யனுப்பிக்க, அவர்களும் அங்கேற அழைக்கப் போக, அந்த வ்ருத்தாந்தத்தை மாத்யாஹ்நிக ஸ்நாநார்த்தமாகப் போகும்போது கேட்டு முதலியாண்டான் நீராடி வர, நடாதூராழ்வான் முன்னமே அந்த வ்ருத்தாந்தத்தை வந்து சொல்லக் கேட்டு "நீரன்றோ [5]ப்ரிய பாகிநேயர்!" என்று போர உகந்து கூரத்தாழ்வான் உடையவருடைய த்ரிதண்ட காஷாயாதிகளைத் தரித்துக் கொண்டு அந்த மநுஷ்யரோடே போக, பெரியநம்பியும் கூட எழுந்தருளினார். பின்பு நடாதூராழ்வான் முதலியாண்டான் திருக்குருகைப்பிரான்பிள்ளான் முதலானவர்கள் "தேவரீர் இங்கிருக்க வொண்ணாது" என்று உடையவருக்கு வெள்ளைச் சாத்தி மேல்நாட்டுக் கெழுந்தருளப் பண்ணிக் கொண்டு போக, ஒருநாள் மலையடிவாரத்தில் திருமலை நல்லானுடைய ஶிஷ்யரான சில வேடரிருக்குமிடத்தில் எம்பெருமானாரும் முதலிகளுடனே மழையில் நனைந்தெழுந்தருள, அவர்களும் எம்பெருமானாரென்று

1. பிள்ளையின் பிள்ளை 2. வேறு மதத்தைச் சேர்ந்த 3. கெட்ட போதனை 4. பணம், தொழில் 5. அன்புக்குரிய மருமான்.

அறிந்து, அவர்களுக்குப் புது வஸ்த்ரம் ஸமர்ப்பித்து, நெருப்பும் [1]இந்தநமும் கொண்டு குளிர் போகக் காய்ச்சுவித்து "திருமலை நல்லான், தம் திருவடிகளான அடியோங்களுக்கு எம்பெருமானுர் திருவடிகளே ஶரணம் என்று உபதேஶித்திருக்கையாலே அடியோங்களை அநுக்ரஹித்தருள வேணும்" என்று ப்ரார்த்தித்துத் தேனும் திணைக்கதிரும் கொண்டுவந்து ஸமர்ப்பிக்க, அத்தை வறுத்திடித்துத் தேனிற் கலந்து பேரருளாளனுக்கு அமுது செய்யப் பண்ணித் தாமும் முதலிகளும் அமுது செய்து, வேடர்களுக்கும் ப்ரஸாதித்து அவர்களைப் போர உகந்தருளி 'நல்லானென்கிற [2]காளமேகம் நடுக்காட்டில் வர்ஷித்தது' என்று அருளிச் செய்து அன்று ராத்ரி கண் வளர்ந்தருளினுர்.

பின்பு ஒரு ஸ்ரீ வைஷ்ணவரைக் கோவிலுக்குப் போக விட்டருளினுர். அந்த வேடர்களும் எம்பெருமானுரை முதலிகளுடனே மேனுட்டில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு போய் ஒரு க்ராமத்தில் ஒரு ப்ராஹ்மண க்ருஹத்தில் விட்டுச் சில த்ரவ்யங்களைக் கொடுத்து வேண்டின பதார்த்தங்களைக் கொடுக்கும்படி சொல்லிப் போனுர்கள். அங்கே சிலர் வந்து ஆஶ்ரயிக்க எம்பெருமானுரும் த்ரிதண்டகாஷாயாதிகளை ஸம்பாதித்துப் பேரருளாளன் ஸந்நிதியில் வைத்து முன்போலே தரித்தருளி ஆஶ்ரயித்தவர்களுக்குப் பஞ்ச ஸம்ஸ்காராதிகளை ப்ரஸாதித்தருளி அங்குநின்றும் புறப்பட்டு ஶால க்ராமத்தில் சிலர்கள் வந்து ஆஶ்ரயிக்க அவர்களுக்கு பஞ்சஸம்ஸ்காராதிகளை ப்ரஸாதித்து "இன்று முதலாக இவ்வூர் ஸாளக்ராமமென்னக் கடவது" என்று உடையவர் அருளிச் செய்து, அங்கே வடுகநம்பிக்குத் தர்ஶநார்த்தங்களை ப்ரஸாதித்துக் கொண்டு சிங்கர் கோயிலிலே சில நாளெழுந்தருளியிருந்து, விஷ்ணு வைஷ்ணவ த்வேஷியான சோழன் [3]க்ரிமிகண்டனுய் [4]நஶிக்கும்படி [5]அபிசார கர்மத்தை அர்ச்சகரைக் கொண்டு பண்ணுவித்துத் தொண்டனூரேற வெழுந்தருளினுர்.

அங்கு அதிபதியான விடலதேவராயன் மகள் [6]பிஶாசாவிஷ்டையா யிருக்க, ஒருவராலும் தீர்க்கவொண்ணுமையாலே ராய

1. கட்டைகளும் 2. கருமேகம். 3. புழுக்களுள்ள கழுத்தையுடையவனுய் 4 அழியும்படி 5. ஏவல், பில்லி, சூனியம் வைத்தல் முதலியன 6. பிசாசு பிடித்தவளாய்.

னும் து:கிதனுயிருக்க, தொண்டனூர் நம்பியும் அங்கேறச் சென்று "நம்மாசார்யர் எம்பெருமானுரெழுந்தருளினுல் அவர் கடாக்ஷத்தாலே இக் காட்டேரி போய்விடும்" என்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் கதையையும் ஸவிஸ்தாரமாகச் சொல்ல, "அவனும் இக் காட்டேரியை விடுவிக்கில் அவர் திருவடிகளில் ஆஶ்ரயிக்கக்கடவேன்" என்ன, தொண்டனூர் நம்பியும் எம்பெருமானுரை ஸ்ரீவைஷ்ணவ [1]ஸம்ருத்த்யர்த்தமாக அவன் க்ருஹத்திலெழுந்தருளப் பண்ணி ஸ்ரீபாத தீர்த்தத்தையும் அவன் புத்ரிக்கு ப்ரஸாதிக்க, அந்தப் பெண்ணும் தெளிந்து உடையவரை ஸேவிக்க, விடலதேவராயனும் ஆஶ்சர்யப்பட்டு உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்க, அவனுக்கு விஷ்ணுவர்த்தந நாராயணனென்று திருநாமம் ப்ரஸாதித்தருளினுர்.

பின்பு அந்த ராஜாவின் குருக்கள் பன்னீராயிரம் [2]க்ஷபணர்கள் வந்து ஏககாலத்தில் வாதம் பண்ண, உடையவரும் ஒரு மண்டபத்தில் திரையை வளைத்துக் கொண்டு [3]ஸஹஸ்ரபணுமண்டலமுடைய திருவநந்தாழ்வானைப் போலே ப்ரத்யுத்தர மருளிச்செய்து, அவர்களை ஜயித்துக் கல்செக்கிலே காணமாடுவித்தார். அவர்களிற் சிலர் ஆஶ்ரயிக்க அவர்களையும் திருத்தியருளினுர்.

அக்காலத்தில் 'நித்யமாகத் திருமண்காப்புச் சாத்துகைக்குத் திருமண் பெற்றிலோமே!' என்று சிந்தித்துக் கொண்டு உடையவர் திருக்கண் வளர்ந்தருள, அன்று இராத்திரியில் திருநாராயணப் பெருமாள் ஸ்வப்நத்திலெழுந்தருளி, "யதுகிரியில் கல்யாண ஸரஸ்ஸின் தென் மேலை மூலையிலே திருமகிழ் மரத்திற்குத் தென் பக்கத்தில் பெரிய திருத்துழாயின் கீழே பெரிய புற்றுக்குள்ளே இருக்கிறோம்; திருமண்ணும் ஸரஸ்ஸிற்கு வடமேலை மூலையில் பெரியதிருவடியாலே ஶ்வேதத்வீபத்தினின்றுங் கொண்டுவந்து நிக்ஷேபிக்கப்பட்டு அக்ஷயமாயிரா நின்றது. உமக்கு அடையாளமாக இவ்விடம் தொடங்கி நாமிருக்கும் புற்றளவாக முறித்திட்ட திருத்துழாய் கண்டு வாரீர்" என்றருளிச்செய்ய, உடையவரும் எழுந்திருந்து திகைத்து முதலிகளுக்கு அருளிச்செய்ய, விஷ்ணுவர்த்தந நாராயணனும் அத்தைக் கேட்டுக் காடு வெட்டிவைத்து உடையவர் பின்னே ஸேவித்துக் கொண்டு போக, உடையவரும் வேதபுஷ்

1. வளர்ச்சிக்காக 2. ஜைனர்கள் 3. ஆயிரம் தலைகளையுடைய.



மைசூர் ப்ராந்தம் மேல்கோட்டை என்னும் திருநாராயண
புரத்தில் ஸேவைதரும்
செல்வப்பிள்ளை
(ராமப்ரியர், திருநாராயணன் என்றும் திருநாமங்கள் உண்டு)

கரிணியில் நீராடி காஷாயத்தைத் தரித்தருளி அவ்விடம் தொடங்கி முறித்திட்ட திருத்துழாய்க் குறியாகக் கல்யாண ஸரஸ்ஸின் கரையி லெழுந்தருளித் திருத்துழாய் மரத்தைக் கண்டு ஸேவித்து [1]மண் காப்பை நீக்கிப் புற்றினுள்ளே பார்க்க, அங்கு ஒரு கோயில் தோன்ற, அதற்குள்ளே கலியுகம் ௪௨௦௦-க்கு ஸரியான ஶகவர்ஷம் ௧௦௨௧-ஆவதான பஹுதாந்ய ஸம்வத்ஸரம் பங்குனி மாஸம் ஶுக்ல சதுர்த்தஶி குருவாரம் கூடின புநர்வஸு நக்ஷத்ரத்தில் திரு நாராயணப் பெருமாளையும் கண்டு அத்யாநந்தத்துடனே திருவடி-

1. மணமேட்டை,

தொழுது ராஜாவையழைத்து ஸேவிக்கப்பண்ணி ஸகல மங்கள வாத்யங்களோடே பாலமுதாலே திருமஞ்சநம் பண்ணிவைத்துக் கல்யாண ஸரஸ்ஸின் வடமேலை மூலையிலே திருமண்காப்பையுங் கண்டு அங்கீகரித்துக் கோயிலும் ஊரங்குடிவந்து ஸ்ரீபாஞ்சராத்ர ஸம்ஹிதையாலே தேவராஜ பட்டரைக்கொண்டு ப்ரோக்ஷணாதி புரஸ்ஸரமாகத் திருவாராதநம் பண்ணுவித்தருளி, ஒரு நாயகத் திருவாய்மொழியைத் திருநாராயணப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து அந்தத் திவ்ய தேஶத்திற்குத் திருநாராயணபுரமென்று திருநாமம் சாத்தி [1]உத்ஸவ பேரத்தைத் தேடிக்கொண்டிருக்க, திருநாராயண னும் ஸ்வப்நத்திலெழுந்தருளி, "நம்முடைய உத்ஸவபேரமான ராமப்ரியன் டில்லியிலே துருஷ்க ராஜக்ருஹத்திலிருக்கிறார்" என் றருளிச்செய்ய, உடையவரும் எழுந்திருந்து உள்மகிழ்ந்து சில முதலி களுடனே டில்லி புரத்திலெழுந்தருள, அந்தத் துருஷ்கராஜாவும் உடையவரைக் கண்டு தேஜோவிஶேஷத்தாலே ஆஶ்சர்யப்பட்டுப் [2]பஹுமதிபண்ணி "என்னவேணும்?" என்று கேட்க, உடையவரும் "எங்கள் குலதெய்வமான ராமப்ரியரைக் கொடுக்கவேணும்" என்ன, அவனும் கொள்ளை கொண்டுவைத்த விக்ரஹ ஶாலையைக் காட்டி எடுத்துக்கொள்ளச் சொல்ல, உடையவரும் அவ்விடம் ஶோதித்துக் காணாமையாலே விசாரிக்க, "அந்த ராஜபுத்ரியாலே பூஜிக்கப்பட் டுக் கொண்டிருக்கிறார்" என்று அறிந்து ராஜாவுக்கும் அறிவிக்க, ராஜாவும் எடுத்துக்கொள்ளும் என்ன, உடையவரும் ராமப்ரியரைக் கண்டு "வருக வருக வருக விங்கே" என்று விண்ணப்பஞ்செய்ய, ராமப்ரியரும் எல்லாரும் காணும்படி பொற்சதங்கை ஶப்திக்கக் குதித்து உடையவர் மடியிலே எழுந்தருளியிருக்க, உடையவரும் "என்னுடைய செல்வப்பிள்ளையோ!" என்று எடுத்து அணைத்துக் கொண்டருளினார். அன்றுமுதல் செல்வப்பிள்ளை யென்று திருநாம மாயிற்று. இத்தைக்கண்டு டில்லி ராஜாவும் அத்யாஶ்சர்யப்பட்டுச் செல்வப்பிள்ளையை யெழுந்தருளுவித்துக்கொடுக்க, உடையவரும் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரச்செய்தே உறங்கியிருந்த துருஷ்க ராஜபுத்ரியும் செல்வப்பிள்ளையை விட்டுப் பிழைக்க மாட்டேன் என்ன, ராஜாவும் செல்வப்பிள்ளையைக் கொண்டு

1. உத்ஸவமூர்த்தி 2. கௌரவித்து.

வரும்படி மநுஷ்யரை அனுப்பிக்க, உடையவரும் [1]ஒரகம்யஸ்தலத்தில் மறைந்திருந்து செல்வப்பிள்ளையை யெழுந்தருளப் பண்ணிக் கொண்டுவர, அவ்விடத்திலுள்ளவர்கள் 'அடியோங்களுக்கு ஒரு பாரிதோஷிகம் வேணும்' என்ன, உடையவரும் செல்வப்பிள்ளையை யாதவாத்ரியிலே திருநாராயணனுடனே சேர்த்து [2]ப்ரதிஷ்டிப்பித்து நித்யோத்ஸவாதி மஹோத்ஸவங்களை நடப்பித்து [3]ஸங்கடஸமயத்தில் ஸஹாயம்பண்ணின அந்தச் [4]சண்டாளருக்குத் திருக்குலத்தாரென்கிற பேரையும் ப்ரஸாதித்துத் திருத்தேர் முதல் தீர்த்தோத்ஸவத்தளவும் கல்யாண தீர்த்த ஸ்நாநமும் பகவத் ஸந்நிதியில் ப்ரதக்ஷிணமும் தீர்த்தபரிக்ரஹமும் பண்ணும்படி ஒரு மர்யாதை நடப்பித்தருளினுர். துருஷ்கராஜபுத்ரியும் பிரிந்திருக்க மாட்டாதே திருநாராயணபுரத்தில் வந்து செல்வப்பிள்ளையை ஸேவித்து [5]அந்தர்த்தாநகதையானள்.

அநந்தரம் உடையவரும் பத்மகிரியில் பௌத்த ஸமயங்களை ஜயித்து அவர்களைக் கல்காணத்தில் அரைப்பித்துத் திருநாராயணன் ஸந்நிதியில் பன்னிரண்டு ஸம்வத்ஸரம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தர்ஶனர்த்தம் ப்ரஸாதித்துக்கொண்டிருக்கிற நாளையிலே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கோயிலினின்றும் வந்து உடையவர் திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து "முன்பு சோழராஜமநுஷ்யர் கூரத்தாழ்வானையும் பெரியநம்பியையும் அழைத்துக்கொண்டுபோக, சோழனும் 'ஶிவாத் பரதரம் நாஸ்தி' என்று ஒலைப்புறத்தில் கையெழுத்திடச் சொன்னுன்; ஆழ்வானும் அநேக ப்ரமாணங்களை உபந்யஸித்து நீ சொன்னது அப்ரமாண மென்றருளிச்செய்ய, சோழனும் கையெழுத்திடவேணுமென்று நிர்ப்பந்திக்க, ஆழ்வானும் 'த்ரோணமஸ்தி தத: பரம்' என்று கையெழுத்திட்டார். சோழனும் இந்தப் பரிஹாஸத்தாலே குபிதனுய், இவர்களுக்கு [6]நேத்ரோத்பாடநம் பண்ணிவைத்தான். பின்பு பெரியநம்பி கோயில்வழியிலே திருக்கண்வேதனையாலே திருநாட்டுக்கெழுந்தருளினுர். கூரத்தாழ்வான் கோயிலிலே எழுந்தருளியிருக்கிறுர்" என்று விண்ணப்பஞ் செய்ய, உடையவரும் மிகவும் [7]க்லேஶித்து

1. போகக்கூடாத இடத்தில் 2. பிரதிஷ்டை செய்துவைத்து 3. சங்கடமான சமயத்தில் 4. ஹரிஜனங்களுக்கு 5. மறைந்தாள் 6. கண்ணைப் பிடுங்குதல் 7. வருந்தி.

"கூரத்தாழ்வான் இருக்கப் பெற்றோமே!" என்று தேறி, பெரிய நம்பிக்கு ஸ்ரீசூர்ணபரிபாலநம் செய்தருளினார்.

பெரியநம்பி திருநக்ஷத்ரம் மார்கழியில் கேட்டை.

பின்பு சிறியாண்டானைக் கோயிலேறப் போய் ஆழ்வானைத் தேற்றிவைக்கும்படி நியமிக்க, சிறியாண்டானும் அப்படியே கோயிலேறப்போய் ஆழ்வானைத்தேற்றி உடையவர் நியமநத்தையும், உடையவர் திக்விஜய வ்ருத்தாந்தத்தையும் விண்ணப்பஞ் செய்ய, ஆழ்வானும் அத்யந்த ஸந்தோஷத்தோடே இருக்க, அவ்வளவில் 'சோழனும் கழுத்திலே புழுத்துப் புரண்டான்' என்று கேட்டுச் சிறியாண்டானும் நிஶ்சயத்தையறிந்து, அம்மங்கியம்மாளுடனே திருநாராயணபுரத்திற்கெழுந்தருள, உடையவர் திருக்கல்யாண ஸரஸில் முதலிகளோடே அநுஷ்டாநம் செய்துகொண்டிருக்கச் செய்தே தண்டன்ஸமர்ப்பித்து "சோழன் புழுத்துப் புரண்டான்" என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் கேட்டு உகந்து இவர்களை ஸந்தோஷித்து இப்போது "இக்கல்யாண ஸரஸ்ஸை [1]அந்வர்த்தமாகக்கண்டோம்" என்று அருளிச்செய்து, திருமலையில் அழகியசிங்கரையும் திருநாராயணனையும் செல்வப்பிள்ளையையும் திருவடிதொழுது, தீர்த்தப்ரஸாதாதிகளையும் ஸ்வீகரித்து அங்குச் சிலரைத் திருநாராயணனுக்குக் கைங்கர்யம் பண்ணும்படி நியமித்துக் கோயிலுக்குப் புறப்பட்டருள, அவர்களும் "பிரிந்திருக்க மாட்டோம்" என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் தம்மைப் போலே ஒரு ஶிலாவிக்ரஹத்தை யுண்டாக்கிவைத்து அதிலே திவ்ய ஶக்தியையும் ஏறிட்டு "இத்தைக் கொண்டு [2]தரியுங்கோள்" என்றருளிச்செய்ய, அவர்களும் ஸந்துஷ்டராக, உடையவரும் புறப்பட்டுக் கோயிலேறவெழுந்தருள, ஊராரெல்லாரு மெதிர்கொண்டுவந்து ஸேவிக்க, அவர்களையு முகந்து, நம்பெருமானைத் திருவடிதொழுது தீர்த்தம் திருமாலை முதலானவைகளையும் பெற்று, கூரத்தாழ்வான் திருமாளிகையி லெழுந்தருள, ஆழ்வானும் திருவடிகளிலே ஸேவித்துநிற்க, உடையவரும் "உமக்கு இப்படி த்ருஷ்டிபோவதோ?" என்று க்லேஶித்துப் பின்பு தெளிந்து தம் மடத்தி லெழுந்தருளியிருந்தார்.

அப்போது திருவத்யயநோத்ஸவத்திற்குத் திருநகரியினின்றும் ஆழ்வார் கோயிலேற எழுந்தருளாமலிருக்க, உடையவரும் கோயி

1. பெயர் பொருத்தமுள்ளது 2. உய்யுங்கள்.

ஒரு [1]கோவையாக்கி "பூதம் ஸரஸ்ச" என்கிற ஸ்லோகத்தை விண்ணப்பஞ்செய்து "யோ நித்யமச்யுத" என்கிற ஸ்லோகத்தையும் நியமித்தருளவேணுமென்ன, உடையவரும் "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" "யோநித்யமச்யுத" "மாதாபிதா" "பூதம்ஸரஸ்ச" என்கிற ஸ்லோக [2]சதுஷ்டயத்தையும் அநுஸந்தித்து ப்ரபந்தாநுஸந்தாநம் பண்ணும்படி நியமித்தருளி, அங்குள்ள திவ்யதேசங்களிலும் ஆழ்வார் திருப்ரதிஷ்டை முதலானவைகளையும் செய்துவைத்துக் கோயிலேற எழுந்தருளினார்.

பின்பு பெரியதிருமலைநம்பி திருநாட்டுக்கெழுந்தருள, பிள்ளை திருமலைநம்பியும் அந்தக் கைங்கர்யங்களைச்செய்து கோயிலேறவந்து உடையவர் ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் ஸ்ரீசூர்ண பரிபாலநம் முதலியவைகளைச் செய்தருளினார்.

பெரிய திருமலைநம்பி திருநக்ஷத்ரம் புரட்டாசி அநுராதம்.

பின்பு சித்ரகூடமழிந்து அந்த எம்பெருமான் கீழைத் திருப்பதியிலெழுந்தருளினாரென்று சிலர் வந்து விண்ணப்பஞ்செய்ய, உடையவர் கேட்டு அத்திருப்பதியேற எழுந்தருளி, ஸ்ரீகோவிந்தராஜனையும் ப்ரதிஷ்டிப்பித்து, ஆழ்வார்களும் "திருவேங்கடமாமலை யொன்றுமே தொழ"என்று திருமலையையே விரும்புகையாலே திருமலை யடிவாரத்திலேயே ஆழ்வாராசார்யர்களையும் ஆண்டாளையும் திருப்ரதிஷ்டை செய்துவைத்துத் திருவத்யயநோத்ஸவமும் நடக்கும்படி நியமித்துத் திருவேங்கடமுடையானைத் திருவடிதொழுது, பெருமாள் கோயிலேற வெழுந்தருளிக் கூரத்தாழ்வானை வரதராஜஸ்தவம் செய்யும்படி நியமிக்க, ஆழ்வானும் அப்படியேசெய்து "நேத்ரஸாத் குருகரீஶ ஸதா மே"என்று ஜ்ஞாநசக்ஷுஸ்ஸை அபேக்ஷித்தபடியையுங் கண்டு உடையவர் "இப்படிக்குச் செய்யலாமோ?"என்று ஆழ்வானை வெறுத்துப் பேரருளாளன் திருவடிதொழுது நிற்க, ஆழ்வானும் பேரருளாளன் சாத்திக்கொண்டிருக்கிற திவ்யாபரணங்களிவை யிவையென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் க்ருதார்த்தராய் அந்த ஸந்நிதியில் ஆழ்வாராசார்யர்களையும் ஆண்டாளையும் திருப்ரதிஷ்டை செய்துவைத்து மற்றுமங்குள்ள திவ்யதேசங்களில் ஆழ்வாராசார்யர்களையும் ஆண்டாளையும் ப்ரதிஷ்டிப்பித்துத் திருவத்யயநோத்ஸவம் நடக்கும்படி நியமித்தருளி ஸ்ரீமதுராந்தகத்தில் ஏரி

1. தொகுத்து 2. நான்கு.

காத்த பெருமாள் திருவடிதொழுது கோயிலேற வெழுந்தருளி முதலிகளுடனே பாஷ்ய ப்ரவசநம் நாலாயிர திவ்யப்ரபந்த வ்யாக்யாநங்களோடே ப்ரவர்த்திப்பித்துக் கொண்டெழுந்தருளியிருந்தார்.

பின்பு ஸ்ரீபாதத்து முதலிகளுக்கு நாலாயிர வ்யாக்யாநமருளிச் செய்யும்போது "நாறு நறும்பொழில்" என்கிற பாட்டு ப்ரஸ்துதமாக "ஆண்டாள் ப்ரார்த்தனையை நாம் தலைக்கட்டவேணும்" என்று புறப்பட்டுத் திருமாலிருஞ்சோலை மலையேற வெழுந்தருளி நூறு [1]தடா நிறைந்த வெண்ணெயும் நூறு தடா நிறைந்த அக்கார வடிசிலும் அழகர்க் கமுது செய்வித்தருளி, ஸ்ரீவில்லிபுத்தூரில் வடபெருங் கோயிலுடையானையும் ஆண்டாளையும் திருவடி தொழுது, ஆண்டாள் திருவுள்ளமுகந்து ப்ரஸாதித்த வரிசைகளை யும் பெற்று, திருநகரியில் ஆழ்வாரையும் திருவடிதொழுது, கோயிலேறவெழுந்தருளித் தர்மநார்த்தங்களை ப்ரஸாதித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

பின்பு உடையவரும் தம் ஸ்ரீபாதத்தில் ஆஶ்ரயித்திருக்கிற முதலிகள் அஸங்க்யேயர்களாகையாலே அவர்களில் ஒரு [2]நிபந்தனம் செய்தருளவேண்டுமென்று திருவுள்ளம்பற்றி, எழுபத்திநாலு திருவாழி திருச்சங்குகளைத் திருப்ரதிஷ்டைசெய்து நான்கு ஸ்ரீபாஷ்ய ஸ்ரீகோஶங்களை யேறியருளப்பண்ணி, அவைகளையும் தம் நியமநத்தினாலே திருக்குருகைப்பிரான் பிள்ளான் செய்தருளின பகவத் விஷயமான ஆறுயிரப்படியுடனே தம் திருவாராதநமான பேரருளாளன் ஸந்நிதியில் ஸமர்ப்பித்து, முதலிகளை யழைத்தருளி, எழுபத்துநாலு திருநாமங்களுக்குத் திருவாழி திருச்சங்குகளையும், அவர்களில் நால்வருக்கு ஸ்ரீபாஷ்ய ஸ்ரீகோஶங்களையும், அவர்களில் ஒருவரான திருக்குருகைப்பிரான் பிள்ளானுக்குப் பகவத் விஷயமான ஆறுயிரப்படியையும் ப்ரஸாதித்தருளி, பின்னோர்களுக்குத் திருவிலச்சினை முதலாக உபயவேதாந்தம் முதலானவைகளையும் ப்ரஸாதிக்கும்படி நியமித்தருளி, எழுபத்துநால்வருக்கு ஸிம்ஹாஸநாதிபத்யமும், அதிலும் நால்வருக்கு ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸநாதிபத்யமும், அதிலும் ஒருவருக்கு உபயவேதாந்தாதிபத்யமும் பிருதாக ப்ரஸாதித்தருளினார்.

இவர்கள் அன்றியும் எழுநூறு சீயர்களும், பன்னீராயிரம்

1. அண்டா 2. கட்டுப்பாடு.

விலே ஒரு நம்மாழ்வாரைத் திருப்ரதிஷ்டைசெய்து திருவத்யய ஏகாந்திகளும் திருமஞ்சநம் முதலானவைகள் செய்யும் அநேக கைங்கர்யபரர்களும், பின்னும் அநேக ஸ்ரீவைஷ்ணவர்களும் உடையவர் நியமநப்படிக்குத் தந்தம் கைங்கர்யத்தைப் பண்ணிக் கொண்டிருப்பர்கள். அதிலும் முன்பாக ஆஸ்ரயித்தவர்களாயும் [1]வயஸா ஜ்யேஷ்டர்களாயுமிருந்துள்ள கூரத்தாழ்வான், நடாதூராழ்வான், முதலியாண்டான், கிடாம்பியாச்சான், எம்பார் முதலான முதலிகளும், பின்பு ஜ்ஞாநபுத்ரராக ஸ்வீகரித்து ஆளவந்தார் நியமநத்தாலே திருக்குருகைப் பிரான் பிள்ளானென்கிற திருநாமம் ப்ரஸாதித்து அவரைக் கொண்டு பகவத் விஷயமான ஆறுயிரப் படியையும் செய்துவைத்து அத்தைப் பாஷ்யத்தோடொக்கப் பகவத் விஷயமாகக் காலக்ஷேபத்தில் நடத்தும்படி நியமித்தருளி, அவருக்கு உபயவேதாந்தாதிபத்யத்தையும் உடையவர் ப்ரஸாதித் தருளினபடியாலே பூர்வம் ஸ்வீக்ருதர்களாயும் ஜ்யேஷ்டர்களாயும் இருந்துள்ள தத்தபுத்ரர்கள் பின்பாக ஜநித்த [2]ஔரஸனைப் பார்த்து அவனை [3]அநுவர்த்தித்து நடக்கவேண்டுமாபோலே திருக் குருகைப்பிரான் பிள்ளானை மேன்மையுள்ளவராக நினைத்து அவருக்குத் தாங்கள் கீழ்ப்பட்டிருந்தவர்களாகத் தந்தம் கைங்கர்யங்களை நடத்த, உடையவரும் [4]ஶாஸ்த்ராநுமதமாயும் தம் திருவுள்ளத்திற்கு உகந்ததாயும் அவர்கள் இருந்தபடியைக் கண்டு போர உகந்தருளினார்.

இவ்வர்த்தங்களை ஸங்க்ரஹித்து,

"பிதாமஹஸ்யாபி பிதாமஹஸ்ய
　　ஸுதம் வரேண்யம் ஶடகோபஸூக்தே: |
ஸஹஸ்ர ஷட்ஸங்க்யக பாஷ்யகாரம்
　　ஶடாரிநாமா நமஹம் ப்ரபத்யே ||

விக்யாதோ யதிஸார்வபௌம ஜலதேஶ்
　　சந்த்ரோபமத்வேந ய:
ஸ்ரீபாஷ்யேண யதந்வயாத் ஸுவிதிதா:
　　ஸ்ரீவிஷ்ணு சித்தாதய: |
வ்யாக்யாம் பாஷ்யக்ருதாஜ்ஞயோபநிஷதாம்
　　யோ த்ராமிடநாம் வ்யதாத்

1. வயதினால் மூத்தவர் 2. வயிற்றில் பிறந்தவன் 3. அநுசரித்து 4. சாஸ்திரம் சொல்லியபடி.

பூர்வம் தம் குருகேஶ்வரம் குருவரம்
காருண்ய பூர்ணம் பஜே ||

ஜ்ஞாநாத்மஜோ யதிபதேரபி பாதுகேதி
ஸ்ரீ கூரநாதமுகதேஶிக பூஜிதோ ய: |
வ்யாக்யாதவாந் ஶடரிபோஶ் சரமப்ரபந்தம்
வந்தேய தேஶிகமஹம் குருகேஶ்வரந் தம் ||

யத்பர்யாப்தகலாக்யாதோ யதிராஜாப்தி சந்த்ரமா: |
குஶலம் தீயதாம் மேஸௌ குருகேஶ்வர தேஶிக: || ''

என்று முன்னோர்கள் அருளிச் செய்தார்கள்.

திவ்யதேஶ யாத்ரை யெழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களும் அங்கங்குள்ளவர்கள் "உடையவர் எழுந்தருளியிருக்கிறபடி யென்?" என்று கேட்க,

" ராமாநுஜஸ்ஸப்தஶதைர் யதீநாம்
பீடைஶ் சதுஸ்ஸப்ததிபிஸ் ஸமேத: |
ஏகாந்திபிர் த்வாதஶபிஸ் ஸஹஸ்ரைஶ்
ஸ்ரீரங்க ஆஸ்தே யதிஸார்வபௌம: ||

நாநாவிதே ச கைங்கர்யே நியதைர் பஹுபிர் ஜநை: |
அந்யைரபி யுதோ பாதி யதிராஜோ குருத்தம: || "

என்று அருளிச் செய்தார்கள்.

அவர்கள் பிரிவு எங்ஙனே என்னில்:—

க. திருக்குருகைப் பிரான்பிள்ளான்
கூரத்தாழ்வான்
நடாதூராழ்வான்
எங்களாழ்வான்
ரு. தெற்காழ்வான்
இளையாழ்வான்
கோமடத்தாழ்வான்
சேட்டலூராழ்வான்
வேதாந்தியாழ்வான்
கo. அநந்தாழ்வான்
நடுவிலாழ்வான்
மிளகாழ்வான்
நெய்யுண்டாழ்வான்
உக்கலாழ்வான்
கரு. திருக்கோவலூராழ்வான்
திருமோகூராழ்வான்
கோயிலாழ்வான்
அருணபுரத்தாழ்வான்
கணியனூர்சிறியாழ்வான்
உo. திருமலைநல்லான்
கிடாம்பியாச்சான்
வங்கிப்புரத்தாச்சான்

ஈச்சம்பாடியாச்சான்
கொங்கிலாச்சான்
உரு. திருக்கண்ணபுரத்தாச்சன்
எச்சான்
சிறியகோவிந்தப்பெருமாள்
வீரவல்லிப்பெருமாள்
கிடாம்பிப்பெருமாள்
௩௦. அம்மங்கிப்பெருமாள்
ஆஸுரிப்பெருமாள்
பிள்ளையப்பன்
பிள்ளைதிருமலைநம்பி
வங்கிப்புரத்துநம்பி
௩௫. சொட்டைநம்பி
முடும்பைநம்பி
பராங்குஶநம்பி
திருக்குறுங்குடிநம்பி
தொண்டனூர்நம்பி
௪௦. அருணபுரத்துநம்பி
மருதூர்நம்பி
மழையூர்நம்பி
வடுகநம்பி
குரவிநம்பி
௪௫. புண்டரீகாக்ஷர்
முதலியாண்டான்
கந்தாடையாண்டான்
மாருதியாண்டான்
மதுரையாண்டான்
௫௦. ஈயுண்ணியாண்டான்
சோமாசியாண்டான்
சீயராண்டான்
ஈசாண்டான்
பெரியாண்டான்
௫௫. சிறியாண்டான்
அம்மங்கியாண்டான்
ஆளவந்தாராண்டான்
ஸுந்தரத்தோளுடையார்
உக்கலம்மாள்
௬௦. பருத்திக்கொல்லையம்மாள்
சொட்டையம்மாள்
முடும்பையம்மாள்
வைத்தமாநிதியார்
பராஶரபட்டர்
௬௫. சீராமப்பிள்ளைபட்டர்
சிறுப்பள்ளிதேவராஜபட்டர்
பிள்ளையுறந்தையுடையர் [யர்
பிள்ளைத்திருவாய்மொழியரை
பிள்ளைராஜமஹேந்த்ரப் பெரு
௭௦. அதிகாரிப்பிள்ளை [மாளரையர்
திருநகரிப்பிள்ளை
கோமாண்டூர்பிள்ளை
அநந்தஸோமயாஜியார்
௭௪. காஞ்சீஸோமயாஜியார்

ஆக ஸிம்ஹாஸநாதிபதிகள் எழுபத்திநால்வர். அவர்களில்:—

திருக்குருகைப்பிரான் பிள்ளான் நடாதூராழ்வான் கிடாம்பியாச்சான் முதலியாண்டான் இவர்கள் நால்வரும் ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸநாதிபதிகள். அவர்களிலும் திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷய உபய ஸிம்ஹாஸநாதிபதி. பின்பு சீயர்கள்:— எம்பார், அருளாளப் பெருமாளெம்பெருமானார், ஸ்ரீரங்க நாராயண சீயர், குலஶேகர சீயர், ஆள்கொண்டிவல்லி சீயர்,

ஸட்டம்பள்ளி சீயர், ஈச்சம்பாடி சீயர் இவர்கள் முதலான சீயர்கள் எழுநூற்றுவர். அலங்கார வேங்கடவர் நம்பிகுருந்தேவர், இவர்கள் முதலான ஏகாந்திகள் பன்னீராயிரவர்.

தூயமுனிவேழ்வான் முதலான கைங்கர்யபரர்களும், திருவரங்கமாயோன் முதலான காவலதிகாரிகளும், ஜ்ஞாந பக்தி பலங்களுடைய நத்தத்து முதலிகள் முதலானவர்களும், பிள்ளையுறங்காவலிதாஸர் முதலான சாத்தாத வைஷ்ணவர்களும், திருவநந்தபுரத்தம்மை முதலான ஜ்ஞாந பக்தி வைராக்யங்களுடைய அம்மைகளும் உடையவர் திருவடிகளிலே ப்ரவணராய் தந்தம் கைங்கர்யத்தில் தத்பரராயிருப்பர்கள்.

அநந்தரம் இப்படி முதலிகளுடனே உடையவர் வாழ்ந்து கொண்டிருக்கிற காலத்தில்,

"ஸம்ஸேவிதஸ் ஸம்யமி ஸப்தஶத்யா
பீடைஶ் சதுஸ்ஸப்ததிபிஸ் ஸமேதை: |
அந்யைரநந்தைரபி விஷ்ணு பக்தை:
ஶ்ரீரங்க ஆஸ்தே யதிஸார்வபௌம: ||"

என்றும் சிலர் அநுஸந்திப்பர்கள்.

## கூரத்தாழ்வான் வைபவம்

பின்பு ஒருநாள் கூரத்தாழ்வான் பெரிய பெருமாள் திருவடி தொழுது "இப்போதே [1]தன்னுடைச் சோதியை அடையும்படி பண்ணவேணும்" என்று ப்ரார்த்திக்க, பெரிய பெருமாளும் அப்படியே திருவுள்ளம் பற்றித் திருமாலை முதலானவைகளை ப்ரஸாதிக்க, ஆழ்வானும் அச்செய்தியை உடையவர் ஸந்நிதியில் விண்ணப்பஞ் செய்து திருவடி தொழுது ஸ்ரீபாத தீர்த்தம் ப்ரஸாதித்தருளவேணும் என்று ப்ரார்த்திக்க, உடையவரும் அத்தைக் கேட்டு நிர்வேதப்பட்டு "நானிருக்கச் செய்தே நீர் பெரிய பெருமாளிடத்தில் இப்படிக்கு ப்ரார்த்திக்கலாமோ?" என்று கேட்டருள, ஆழ்வானும் "அடியேனுக்குத் தன்னுடைச் சோதியினின்றும் எதிர்கொண்டு வந்து தேவரீரை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவது ஸ்வரூபமன்றோ?" என்ன, முதலிகளும் இத்தைக் கேட்டு ஆஶ்சர்யப்பட்டிருக்க, உடையவரும் போரவுகந்தருளி, "இனி

1. வைகுண்டம்.



அவதாரஸ்தலமான கூரத்தில் ஸேவைதரும்
ஸ்ரீ கூரத்தாழ்வான்
(உடையவரின் உண்மைச் சீடர், அறிவுக் களஞ்சியம்)
ஸ்ரீவத்ஸசிஹ்ந மிச்ரர், திருமறு மார்பன், கூரநாதர்,
மஹாதாதா என்று போற்றப்படுபவர்

நாம் செய்வதென்?" என்று துணிந்து ஸ்ரீபாததீர்த்தம் ப்ரஸாதித்தருள, ஆழ்வானும் உடையவர் திருவடிகளை த்யானித்துக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினார்.

கூரத்தாழ்வான் திருநக்ஷத்ரம் தை மாஸத்தில் ஹஸ்தம்.

பின்பு உடையவரும் ஆழ்வானுக்கு ஸ்ரீமந்நாதமுனிகள் நியமித்தருளினபடியே ஸ்ரீசூர்ண பரிபாலநம் முதலாக [1]த்வாதசாஹ க்ருத்யத்தையும் பட்டரைக்கொண்டு செய்துவைத்து, அநந்தரம் கௌதமாதிகள் சொன்ன ப்ராயச்சித்த ரூபமான ஸம்ஹிதாபாராயணத்தில் திருவாய்மொழியையும் ப்ரதாநமாக அநுஸந்தித்து நூற்றந்தாதியைக்கொண்டு இயல் நடத்தும்படிக்கும் நியமித்தருளி, அப்போது நம்மாழ்வாருக்கு ஸம்பாவநா ரூபமாக [2]ஓரடைக்காய் ஸமர்ப்பிக்கும்படி நியமித்தருள, முதலிகளும் அந்தப்படிக்கு ஆழ்வானுக்குத் திருவத்யயநத்தையும் நடப்பிவித்து ஆழ்வாருக்கும் எம்பெருமானுக்கும் ஸம்பாவநா ரூபமாக அடைக்காய் ஸமர்ப்பிக்க, உடையவரும் அத்தைத் திருவுள்ளம் பற்றியருளி, இனிமேலும் ஸ்ரீவைஷ்ணவர்கள் திருநாட்டுக்கெழுந்தருளினால் இப்படிக்குத் திருவத்யயநாதிகளை நடப்பிக்கும்படி நியமித்தருளினார்.

பின்பு உடையவர் நியமநப்படிக்குக் கோயிற்றிருமலை பெருமாள் கோயில் முதலான திவ்ய தேசங்களிலும் மற்றும் பெரியோர்கள் எழுந்தருளியிருக்கிற திவ்ய தேசங்களிலும் ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை பாஷ்யாதிகளிலே தெளிந்து கத்யத்தில் சொன்ன ப்ரபத்தியை அநுஷ்டித்து, நித்யத்தில் சொன்ன நிஷ்டையுடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸமூஹத்தைக் கண்டு "பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்" என்கிறபடியே ச்ரிய:பதியான எம்பெருமான் "கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கருள் செய்யும்" என்னும்படி "இவ்வுலகத்தைத் திருத்தியருளின ஸ்ரீபகவத் ராமாநுஜ வைபவம் உண்டானபடியென்?" என்று சிலர் ஆநந்த பாஷ்பங்களைப் பெருக்க, அப்போது,

"ஸ்ரீமத்ரங்கபதிஶ்ச வேங்கடபதிஶ்
ஸ்ரீவாரணேந்த்ர: பதிஶ்
ஸ்ரீயத்வத்ரிபதிஶ்ச கேசவ ததா
திவ்யாஸ்தலாதீஶ்வரா: |

1. பன்னிரண்டாவது நாள் கைங்கரியம் 2. பாக்கு.

ஆசார்யஶ்ச ஸ யாமுநோ முநிவர:
ஶ்ரீஶைலபூர்ணஸ் ததா
ஶ்ரீராமாநுஜஸம்யமீந்த்ரகுரவே
தாத்ருக் ப்ரஸாதம் தது: ||"

என்று நடாதூராழ்வான் அருளிச் செய்தார்.

பெரிய பெருமாள் அநுக்ரஹமாவது:—[1]உபய விபூதியைஶ்வர்யத்தையும் கொடுத்து உடையவரென்று திருநாமம் ப்ரஸாதித்தது முதலானவைகள்.

திருவேங்கடமுடையான் அநுக்ரஹமாவது:—தாம் திருவாழி திருச்சங்குகளைத் திருவுள்ளம்பற்றி விரோதிகளை வெல்லும்படியான ஏற்றத்தை ப்ரஸாதித்தது முதலானவைகள்.

பேரருளாளன் அநுக்ரஹமாவது:—வில்லியும் வில்லிச்சியுமாய் நடுக்காட்டிற்குச் சென்று அழைத்துக்கொண்டு வந்து அவர் கையாலே தண்ணீரமுது திருவுள்ளம் பற்றி ஆறு வார்த்தை அருளிச் செய்து உபகரித்தது முதலானவைகள்.

திருநாராயணன் அநுக்ரஹமாவது:—ஸ்வப்நத்தில் தானிருக்கிறபடியைச் சொல்லி, பாஷ்யாதிகளில் ப்ரகாஶிப்பித்தது போலன்றிக்கே, பிறர் பலரும் தொழுதேற்றும்படி தன்னை ப்ரதிஷ்டிப்பித்து வைத்தது முதலானவைகள்.

பின்னும் சில எம்பெருமான்கள் அநுக்ரஹமாவது:—ஸ்ரீமதுராந்தகத்தில் ஏரிகாத்த பெருமாள் பகவத் ஸம்பந்தம் முதலானவைகளை உண்டாக்கியதும், திருக்குறுங்குடி நம்பி அவைஷ்ணவனுக்கு மந்த்ரோபதேஶாதிகள் கூடாதென்று எல்லாருமறியும்படி பண்ணினதும், அழகரும் ஆண்டாள் ப்ரார்த்தனையைத் தலைக்கட்டும்படி செய்துவைத்துக் கொண்டதும் இவை முதலானவைகள்.

ஆளவந்தார் அநுக்ரஹமாவது:—முன்னமே பெரிய திருமலை நம்பிக்கு நியமித்துப் பின்பு,

"தம் தேவமேவ வரதம் ஶரணம் கதோ஽ஸ்மி"

என்று தாமே கண்டு பேரருளாளன் திருவடிகளில் ப்ரபத்தி பண்ணினதும், யாதவனை விட்டாரென்று கேட்டு ஸித்தாந்த நிர்வாஹகராம்படி பெரிய பெருமாள் திருவடியில் ப்ரபத்தி பண்ணியும்

1. நித்ய விபூதி (பரமபதம்), லீலாவிபூதி (பூலோகம்).

மூன்று மநோரதங்களை நிறைவேற்றும்படி நியமித்தருளினதும் முதலானவைகள்.

பெரிய திருமலைநம்பி அநுக்ரஹமாவது :— பூமிப்பிராட்டியா ரென்கிற உடன்பிறந்தாளிடத்தில் உண்டானவரை "ஆமுதல்வ னிவன்" என்று கடாக்ஷித்தருளி, ரக்ஷார்த்தமாகத் திருவிலச்சினை யும் ப்ரஸாதித்தது முதலானவைகள்.

ததா—என்றது பெரியநம்பி முதலான ஆசார்யர்கள் செய் தருளின அநுக்ரஹவிசேஷம். ஆக, இவர்களுடைய அநுக்ரஹ விசேஷங்களாலே உடையவர் இவ்விருள் தரு மாஞாலத்தில் ஆழங்கால்பட்டிருக்கிற சேதநர்களில் ஸ்வரூபோபாய புருஷார்த் தங்களைத் தெளிந்து உபாயத்தை அநுஷ்டித்து வர்ணாச்ரம ஆசாரங்களை [1]அநுவர்த்திக்குவமர்களுக்கே பரமபுருஷார்த்தம் உண்டாகுமென்று [2]அறுதியிட்டு, அவர்களைத் திருத்தியருளி ஈச்வரேச்வரிகளான திவ்யதம்பதிகளுடைய திருவுள்ளம் உகக் கும்படி பண்ணினாராயிற்று. இத்தால் ஸ்ரீமத்ராமாநுஜன் திருவடி களிலே ஆச்ரயித்தவர்களே பெரிய பிராட்டியாரை உபாயோ பேயமாக சரணமடைந்து, அவள் உகப்பாலே பகவத்ப்ரபத்தியும் ஸித்தித்து, "ஜகத் ஸமஸ்தம் யதபாங்கஸம்ச்ரயம்" என்றும் "யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கித பராதீநோ விதத்தேகிலம்" என்றும் சொல்லுகிறபடியே முக்தைச்வர்யத்தை எம்பெருமானும் அவள் சொன்னபடி கொடுத்தருள்வன் என்றதாயிற்று. ஆகை யாலிறே,

"அங்கயல் பாய்வயல் தென்னரங்கனணியாக மொன்றும்,
பங்கய மாமலர்ப்பாவையைப் போற்றுதும் பத்தியெல்லாந்
தங்கியதென்னத் தழைத்த நெஞ்சே நந்தலைமிசையே,
பொங்கிய கீர்த்தியிராமாநுசனடிப்பூமன்னவே"

என்றும்,

"ராமாநுஜாங்க்ரி சரணோஸ்மி குலப்ரதீபஸ்
த்வாஸீத் ஸ யாமுநமுநேஸ் ஸ ச நாதவம்ச்ய: |
வம்ச்ய: பராங்குசமுநேஸ் ஸ ச ஸோபி தேவ்யா
தாஸஸ் தவேதி வரதாஸ்மி தவேக்ஷணீய: ||"

என்றும் திருவரங்கத்தமுதனாரும் ஆழ்வானும் அருளிச்செய்த காதாச்லோகங்களைக் கேட்டு உடையவரும் உகந்தருளினார்.

1. பின்பற்றுபவர்களுக்கே 2. நிச்சயித்து.

பின்பு சிலநாள் கழிந்தவாறே, உடையவரும் பெரியபெருமாள் திருவடிதொழுது, [1]மேல்வீடு பெறும்படி நியமித்தருளவேணு மென்று ப்ரார்த்திக்க, பெரியபெருமாளும் அப்படியே திருவுள்ளம் பற்றித் திருமாலை முதலானவைகளையும் ப்ரஸாதித்தருள, உடையவரும் ஶிரஸாவஹித்துப் பிள்ளான்முதலான முதலிகளோடே மடமேற எழுந்தருள, முதலிகளும் இவ்வர்த்தத்தை அறிந்து, உடையவருடைய விஶ்லேஷத்தை ஸஹியாமல் [2]தேஹத்யாகம் பண்ணுமவர்களாயிருக்கக்கண்டு உடையவரும் பிள்ளான் முதலான முதலிகளை அழைத்தருளி "என்னுடைய வியோகத்தில் தேஹத்யாகம் பண்ணினருளராகில் ஆளவந்தார் ஸ்ரீபாதமே என்னோட்டவர்களுக்கு ஸம்பந்தமில்லை" என்றருளிச்செய்ய, அவர்களுமத்தைக் கேட்டு மிகவும் [3]ஶோகார்த்தாளாய் "இனி எங்களுக்குச் செய்ய அடுப்பதென்?" என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் "ஒருவன் ப்ரபந்நனானால் அவனுடைய [4]ஆத்மயாத்ரை பகவததீநையாகையாலே அதில் இவனுக்கு அந்வயமில்லை. உண்டென்றிருந்தானாகில் ஆத்ம ஸமர்ப்பணம் பொய்யாமித்தனை. தேஹயாத்ரை [5]கர்மாதீநை யாகையாலே இவனதற்குக் கரையவேண்டா. கரைந்தானாகில் நாஸ்திகனுமித்தனை. ஆகையால் உபயயாத்ரையுங் கொண்டு இவனுக்குக் கார்யமில்லை. ஆனால் மநோ வாக் காயங்களாகிற [6]த்ரிவித கரணங்களையுங் கொண்டு வேண்டிற்றுச்செய்து திரியஅமையுமோ? என்னில்; அது இவனுக்கு [7]ஸ்வரூபமன்று. உபாயாம்ஶத்தில் [8]அந்வயமில்லாவிட்டால் ப்ராப்யமான கைங்கர்யத்தில் இவற்றை அந்வயிப்பிக்குமித்தனை. அது இவனுக்கு இங்கிருந்தநாள் பண்ணுங் கைங்கர்யம் அஞ்சு உண்டு. அவையாவன:— ஸ்ரீபாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல். அதற்கு யோக்யதை இல்லையாகில், அருளிச்செயலைக் கேட்டு ப்ரவர்த்திப்பித்தல். அதற்கு யோக்யதை இல்லையாகில் உகந்தருளின திவ்யதேஶங்களுக்கு அமுதுபடி, சாத்துப்படி, திருவிளக்கு, திருமாலைகளை உண்டாக்கல். அதற்கு யோக்யதை இல்லையாகில், த்வயத்தினுடைய அர்த்தாநுஸந்தாநம் பண்ணுதல். அதற்கு யோக்யதை இல்லையாகில், என்னுடையவனென்று அபிமா

1. பரமபதம் 2. உடலைவிடுதல் 3. சோகத்தால் பீடிக்கப்பட்ட 4. வாழ்க்கை 5. முன்செய்தவினைப்படி நடக்கக்கூடியது 6. மூன்று வித 7. தகுந்ததன்று 8. தொடர்பு.

னிப்பான் ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய அபிமானத்தில் ஒதுங்கி வர்த்தித்தல் செய்யலாம்." இத்யாதி ஶாஸ்த்ரநியமநாதிகாரத்தில் சொல்லுகிறபடியே அருளிச்செய்ய, முதலிகளும் கேட்டுத் தெளிந்து நிற்க, அப்போது கலிபுருஷன் உடையவர் முன்பே வந்து "கலியுங் கெடுங் கண்டுகொண்மின்" என்கிறபடியே, "நம்மை இந்நாட்டினின்றும் ஓட்டிவிட்ட உம்முடைய ஸித்தாந்தத்தை எப்படியாகிலுங் குலைக்கக்கடவேன்!" என்றுசொல்ல, உடையவரும் "இஸ்ஸித்தாந்தத்திற்குப் பெரியபெருமாள் ப்ரவர்த்தகராகையாலே ஒரு தீங்கும் வாராமல் "யதா யதா ஹி தர்மஸ்ய க்லாநிர் பவதி" என்றும், "ஸாக்ஷாந் நாராயணோ தேவ:" இத்யாதிகளிலும் சொல்லுகிறபடியே நிலைநிறுத்திக்கொள்ளக்கடவன்" என்று ப்ரபத்தி பண்ணி, பின்பு திருமேனியில் நோவுசாத்தியிருக்கும்போது பிள்ளான், ஆழ்வான், ஆச்சான், ஆண்டான் இவர்களுடைய ஆர்த்தியைக்கண்டு "நாம் முன்பு சொன்னது அமையாதோ?" என்று அருளிச்செய்ய, கிடாம்பியாச்சானும் "இத்திருமேனி நோவுபடவுங் கண்டு அடியோங்கள் எங்ஙனே [1]உஜ்ஜீவிப்பது" என்றும், திருக்குருகைப்பிரான் பிள்ளானும் "ஆழ்வார்களோபாதி திவ்ய மங்கள விக்ரஹப்ரதிஷ்டையை நியமித்தருளவேணும்" என்றும், முதலியாண்டானும் "இப்படி இல்லாவிடில் ஸித்தாந்தம் குலையும்" என்றும் விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமானாரும் அப்படியே மூன்று விக்ரஹங்களைப் பண்ணிவைத்து ஆலிங்கநம் செய்தருளி கோயிலிலும், ஸ்ரீபெரும்பூதூரிலும், திருநாராயணபுரத்தில் முன்னமே ஶிலாமயமான திவ்யவிக்ரஹத்தைப் ப்ரஸாதித்திருப்பதால் அவ்விடத்திலும் ப்ரதிஷ்டிப்பிக்கும்படி நியமித்து ஆச்சான், பிள்ளான், ஆண்டான் மூவர்களுக்கும் ப்ரஸாதித்தருள, நடாதூராழ்வானும் "நம் பேரருளாளர் பண்ணின குற்றம் எங்ஙனேயோ?" என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் போர உகந்தருளி, "உம்மை கூரத்தாழ்வான் முன்னமே ப்ரியபாகிநேயர் என்று சொன்னது மிகவும் தகும்" என்றருளிச்செய்ய, நடாதூராழ்வானும் "திவ்ய தேஶங்கள்தோறும் இப்படிக்கு நியமித்தருளவேணும்" என்று ப்ரார்த்திக்க, உடையவரும் அப்படியே நியமித்தருளினார்.

பின்பு முதலிகளை அழைத்துத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் கையில் காட்டிக்கொடுத்து "இஸ்ஸித்தாந்தத்தைப் பரக்க ப்ரவர்த்

1. வாழ்வது.

திப்பிக்கக்கடவது'' என்று அருளிச்செய்து, ஆளவந்தார் பாதுகைகளில் ஸ்ரீபாததீர்த்தம் கொண்டு தாமமுதுசெய்து முதலிகளுக்கும் ப்ரஸாதித்தருள, முதலிகளும் உடையவர் ஸ்ரீபாததீர்த்தத்தையும் திருவடி நிலையையும் ப்ரார்த்திக்க, உடையவரும் அப்படியே ப்ரஸாதித்தருளினார். பின்பு கோயிலநந்தகொத்து பரிஜநங்களும் வந்து ''இனி என் செய்யக் கடவோம்' என்று ஸேவித்து நிற்க, உடையவரும் ''நம்முடைய ஜ்ஞாநபுத்ரரான பிள்ளானிருக்க உங்களுக்குக் குறையுண்டோ? பெரிய பெருமாள் கைங்கர்யங்களைக் குறைவற நடத்திப் போருங்கோள்'' என்று அருளிச்செய்து பிள்ளானையும் கிடாம்பியாச்சானையும் அழைத்தருளிச் சில விசேஷார்த்தங்களை அருளிச் செய்து,

'' விசேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்தமுக்தவாந் '
ஸ ஹி தஸ்மிந் ஹரிச்ரேஷ்டே நிச்சிதார்தோர்த ஸாதநே ॥ ''

என்கிறபடியே திருவடி விஷயத்தில் மஹாராஜர் கார்யநிச்சயம் பண்ண, பெருமாளும் [1]அங்குளீயகத்தையும் ப்ரஸாதித்து விசேஷார்த்தங்களை அருளிச் செய்தாற்போலே உடையவரும் காலதத்வமுள்ளளத்தனையும் இந்த ஸித்தாந்தம் அவ்யாஹதமாய்ப் போருகைக்காக அவர்கள் திருமுடியில் தந்திருவடிகளை அமர்த்தியருளி ''இந்த ஸித்தாந்தம் உங்கள் முகமாக நிலைநிற்கும்படி பெரிய பெருமாள் திருவுள்ளம் பற்றியிருப்பதால் அதற்கநுகுணமாக ஸத்பாத்ரத்தில் விநியோகித்துப் போருங்கோள்'' என்று அருளிச்செய்து, தம் திருவாராதநமான பேரருளாளரையும் ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவரையும் பிள்ளானுக்கு ப்ரஸாதித்துக் குளிரக் கடாக்ஷித்தருளி, கோயிலுக்கு நேரே பிள்ளான் மடியில் திருமுடியும் கிடாம்பியாச்சான் மடியில் திருவடிகளுமாய்க்கண்வளர்ந்தருள, நடாதூராழ்வான், எம்பார், முதலியாண்டான் ப்ரப்ருதிகளான முதலிகளும் சீயர்களும், மற்றும் ஏகாந்திகளும் ப்ரஹ்மவல்லி முதலான உபநிஷதநுஸந்தாநத்தையும், ''சூழ்விசும்பணிமுகில்'' முதலான திருவாய்மொழியநுஸந்தாநத்தையும் நடத்த, கைங்கர்யபரர்களும் ஸகல வாத்யங்களுடனே திருச்சங்கு பரிமாற, பெரியநம்பி திருவடிகளை த்யானித்துக் கொண்டிருக்கச் செய்தே ப்ரஹ்மரந்த்ரம் திறந்து திருநாட்டுக்கெழுந்தருளினார்.

எம்பெருமானார் திருநக்ஷத்ரம் சித்திரை ஆதிரை.

---

1. மோதிரத்தை.

பின்பு பிள்ளான் முதலான முதலிகளும் [1]முசித்துக் கிடந்து [2]பெருமிடறு செய்து ஸோகித்துத் தாங்களே தேறிப் பிள்ளானைக் கொண்டு சரமகைங்கர்யங்களையெல்லாம் ஆளவந்தாருக்கு நடந்தாற்போல நடப்பித்து உடையவர் நியமநப்படிக்குத் திருவத்யயநத்தையும் நடப்பித்துத் தீர்த்தம் ஸ்வீகரித்துப் பிள்ளான் பக்கல் உடையவர் நியமநப்படிக்கு முதலிகளெல்லாரும் விஶேஷ ப்ரதிபத்தி பண்ண, பிள்ளானும் உடையவர் நியமநப்படிக்கு முதலிகளைத் தேற்றிக்கொண்டு ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டெழுந்தருளியிருந்தார்.

பின்பு உடையவர் நியமநப்படிக்கு பிள்ளானும் கோயிலிலே உடையவரை ஒரு மூலபேரத்தோடே சேர்த்து ப்ரதிஷ்டிப்பித்து ஆராதித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார். முதலியாண்டானும் ஸ்ரீபெரும்பூதூரில் உடையவரை திருப்ரதிஷ்டை செய்து வைத்தார். கிடாம்பி ஆச்சானும் நல்லான் முதலான சில முதலிகளோடே திருநாராயண புரத்தில் உடையவர் நியமநப்படிக்கு ஆழ்வார் ஆசார்யர்களையும் ஆண்டாளையும் திருப்ரதிஷ்டை செய்வித்துத் தமக்கு ப்ரஸாதித்த உடையவர் திவ்ய மங்கள விக்ரஹத்தை அவ்விடத்திலிருந்த மூலபேரத்தோடே சேர்த்து ப்ரதிஷ்டிப்பித்துத் திருவத்யயநோத்ஸவம் முதலானவைகளை நடப்பித்தருளினார். நடாதூராழ்வானும் பெருமாள்கோயிலில் உடையவர் திருப்ரதிஷ்டை செய்து வைத்தார். பிள்ளை திருமலை நம்பியும் கீழைத் திருப்பதியில் பெரிய திருமலை நம்பியையும் திருப்ரதிஷ்டை செய்வித்து அவ்விடத்திலும், திருமலையில் திருமாலை ப்ராணாதம் திருவுள்ளம் பற்றின இடத்திலும், திருவேங்கடமுடையான் ஸந்நிதியிலும் உடையவர் திருப்ரதிஷ்டை செய்வித்தார். மற்றும் அங்கங்குள்ள திவ்ய தேஶங்களில் அங்கங்குள்ளவர்களும் உடையவரை திருப்ரதிஷ்டை செய்வித்தார்கள்.

## கிடாம்பி ஆச்சான், ராமாநுஜப் பிள்ளான் வைபவங்கள்

பின்பு திருக்குருகைப்பிரான் பிள்ளானும் உடையவர் நியமநப்படிக்கு எங்களாழ்வான் முதலான முதலிகளுக்கு ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயங்களையும் மற்றும் விஶேஷார்த்தங்களையும் ப்ரஸாதித்துக் கொண்டு ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டு இருக்கிற காலத்

1. மோகித்து 2. மிக வருந்தி.

தில், பரமாஸ்திகாக்ரேஸரராய், யதிராஜ [1]மாஹாநஸிகரான கிடாம்பி யாச்சானும் உடையவர் நியமநப்படிக்குப் பாஷ்யாதி ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்கும்போது, தமக்கொரு குமாரரவதரிக்க, அவருக்கு ராமாநுஜப் பிள்ளான் என்று திருநாமம் சாத்தி உடையவர் தமக்கு ப்ரஸாதித்தருளின அர்த்தங்களையெல்லாம் அவருக்கு ப்ரஸாதித்துத் தர்ஶநப்ரவர்த்தகராக்கியருளி திருநாட்டுக்கெழுந்தருளினர். பின்பு அவர் சரம கைங்கர்யங்களையெல்லாம் ராமாநுஜப் பிள்ளானைக் கொண்டு எங்களாழ்வான் முதலானவர்கள் நடப்பித்தார்கள். கிடாம்பி ஆச்சான் திருநக்ஷத்ரம் சித்திரையில் ஹஸ்தம்.

## கிடாம்பி ராமாநுஜப் பிள்ளான் ஸ்ரீரங்கராஜர் வைபவங்கள்

பின்பு ராமாநுஜப் பிள்ளானும் பாஷ்யாதி ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்க, தமக்கொரு குமாரர் அவதரிக்க, அவருக்கு ஸ்ரீரங்கராஜரென்று திருநாமம் சாத்தித் தமக்கு ஆச்சான் ப்ரஸாதித்தருளின அர்த்தங்களையெல்லாம் ப்ரஸாதித்தருளி திருநாட்டுக்கெழுந்தருளினர். இராமாநுசப்பிள்ளான் திருநக்ஷத்ரம் ஐப்பசி பூராடம்.

## திருக்குருகைப்பிரான் பிள்ளான், எங்களாழ்வான் வைபவங்கள்

திருக்குருகைப்பிரான்பிள்ளானும் உடையவர் நியமநப்படிக்கு ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருந்து, நாலாயிரப்ரபந்தங்களை அந்த அந்த ப்ரபந்தங்களுக்கு [2]அநுகுணமாகத் தனியன்களைச் சேர்த்து அநுஸந்திக்கும்படி நியமித்தருளி, எங்களாழ்வானுக்கு [3]ஏகாந்தத்தில் சில விஶேஷார்த்தங்களை அருளிச்செய்து, தீர்த்தமும் ப்ரஸாதித்து, தாமும் உடையவர் ஸ்ரீபாத தீர்த்தம் ஸ்வீகரித்து திருநாட்டுக்கெழுந்தருளினர். பின்பு பிள்ளான் சரமகைங்கர்யங்களையெல்லாம் ஔரஸ புத்ரரான புண்டரீகாக்ஷரைக் கொண்டு எங்களாழ்வான் முதலான முதலிகளெல்லாரும் உடையவர் நியமநப்படிக்குப் பரக்க நடத்திப் போந்தார்கள்.

பிள்ளான் திருநக்ஷத்ரம் ஐப்பசி பூராடம்.

---

1. திருமடப்பள்ளி கைங்கரியபரர் 2. தகுந்தபடி 3. தனிமையில்.

## எங்களாழ்வான், நடாதூரம்மாள் வைபவங்கள்

*சைத்ரே சித்ரோத்பவம் காஞ்ச்யாம் தேவராஜ குரோ:ஸுதம் |*
*ஸுபத்ராம்ஶம் குருத்தம்ஸம் வாத்ஸ்யம் வரதமாஶ்ரயே ||*

பின்பு எங்களாழ்வானும் உபய வேதாந்த ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்க, உடையவருக்கு ப்ரியபாகிநேயருமாய் பாஷ்யஸிம் ஹாஸநாதிபதியுமான நடாதூராழ்வான் குமாரரான தேவராஜப் பெருமாளுக்குக் கலியுகத்தில் சகூஎஎ- ஆவதான பார்த்திவ வர்ஷம் சித்திரை மாஸம் சித்ரா நக்ஷத்ரத்தில் ஸுபத்ராம்ஶரான ஒரு குமாரரவதரிக்க, அவருக்கு வரதாசார்யரென்று திருநாமம் சாத்தி வேத வேதாங்கங்களான ஸகல ஶாஸ்த்ரங்களையும் அப்யஸிப்பித்து எல்லாராலும் நடாதூரம்மாளென்று கொண்டாடப் பட்டிருக்க, அந்த நடாதூரம்மாளும் தமக்குப் பிதாவான தேவராஜப் பெருமாளிடத்தில் மந்த்ர மந்த்ரார்த்தங்களைப் பெற்றபின்பு ஸ்ரீபாஷ்யத்தைக் கேட்க [1]யத்நப்பட, தேவராஜப் பெருமாளும் இவருடைய ஸாமர்த்யத்தையும் [2]பித்ருத்வாபிமாநத்தாலே நிர்பயத்தையுங் கண்டு தினவு கெடச் சொல்லும் திருவெள்ளறைச் சோழியரான எங்களாழ்வான் பக்கல் பிள்ளான் ப்ரஸாதித்தருளின விஶேஷார்த்தங்களோடே பாஷ்யாதிகளை அதிகரிக்கும்படி நியமித்தருள, அம்மாளும் அப்படியே எங்களாழ்வான் பக்கல் போய்த் தண்டன் ஸமர்ப்பித்துத் தேவராஜப் பெருமாள் நியமநத்தை விண்ணப்பஞ் செய்ய, எங்களாழ்வானும் உடையவர் நியமநப்படிக்குத் தமக்குப் பிள்ளான் ப்ரஸாதித்தருளின அர்த்தங்களையெல்லாம் இவர் முகமாக ப்ரகாஶிக்குமென்று பேர உகந்தருளி, "நமக்குப் [3]புத்ரத்வத்தையும் [4]ஶிஷ்யத்வத்தையும் [5]வஹிக்கிறோம் என்று நீர் [6]ப்ரதிஜ்ஞை பண்ணிக் கொடுத்தீராகில் நாம் சொல்லுகிறோம்." என்றும், "ஸ்ரீபாஷ்ய [7]ஸ்ரீகோஶத்தைக்கொண்டு வாரும்" என்றும்அருளிச்செய்ய அம்மாளும் அவ்வர்த்தத்தைத் பிதாவினிடத்திற் சொல்ல, அவரும் அப்படியே [8]அப்யநுஜ்ஞை பண்ண, அம்மாளும் ஸ்ரீகோஶத்தைக் கொண்டு போய் அப்படியே ப்ரதிஜ்ஞை பண்ணிக் கொடுக்க, எங்களாழ்வானும் ஸ்ரீபாஷ்யாதிகளை [9]ஆக்ஷேபஸமாதாநங்களோடே

1. முயற்சிக்க 2. தந்தை என்ற 3. பிள்ளையாயிருப்பது 4. சீடனாய் இருப்பது 5. ஏற்கிறோம் 6. சபதம் 7. புத்தகம் 8. உத்தரவு கொடுக்க 9. கேள்வி-பதில்கள்.

[1]ப்ரதிஷ்டிதமாகும்படி ப்ரஸாதித்தருளினார். பின்பு அம்மாளும் ஸ்ரீபாஷ்யாதிகளை ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்கும் போது, அவருக்கு ஆசார்யபக்தி கரைபுரண்டிருக்கிற படியைக் கண்டு, எங்களாழ்வானும் தமக்குப் பிள்ளான் ப்ரஸாதித்த அர்த்த விசேஷங்களை யெல்லாம் ப்ரஸாதித்து,

"வர்ணாஶ்ரமாசாரவதா புருஷேண பர: புமாந் |
விஷ்ணு ராராத்யதே பந்தா நாந்யஸ் தத்தோஷகாரக: ||"

என்றும் சொல்லுகிறபடியே, "உடையவர் செய்தருளின நித்யத்திற் சொன்ன பாரமைகாந்த்ய முடையவர்கள் உத்தேஶ்யர்கள்" என்றும், "அந்நிஷ்டை பெறுகைக்காகக் கத்யத்திற் சொன்ன உபாயாநுஷ்டாநம் வேண்டும்" என்றும், "அவ்வர்த்தம் தெளிகைக்காக ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளை அதிகரிக்க வேண்டும்" என்றும், "இவ்வளவு [2]ஜ்ஞாநபூர்த்தி இல்லாதாருக்கு ஓராசார்யனைத் திருவடி தொழுதால் இவனுடைய ஆத்மபரத்தை ஆசார்யன் எம்பெருமான் திருவடிகளிலே ஸமர்ப்பித்து இவனை [3]நிர்பரனாக்குவன்" என்றும் அருளிச் செய்து, "இவ்வர்த்தங்களை எல்லாம் நல்ல பாத்ரத்தில் [4]விநியோகிக்கும்படி நம்பிள்ளான் நியமநம்" என்றும் அருளிச்செய்து திருநாட்டுக்கெழுந்தருள, அம்மாளும் ஆசார்யன் உபதேஶிக்கும்போது [5]ப்ரதிவாதம் பண்ணுமையாகிற ஶிஷ்யத்வத்தை முன்னமே நடத்தினவராகையாலே, அப்போது சரமகைங்கர்யங்களையெல்லாம் [6]ஜநகபிதாவுக்குப்போலே பரக்கச் செய்தருளிப் புத்ரத்வத்தையும் நிறைவேற்றினார்.

எங்களாழ்வான் திருநக்ஷத்ரம் ஆனிமாஸத்தில் ஸ்வாதி.

## கிடாம்பி அப்பிள்ளார் வைபவம்

சைத்ரார்த்ராஸம்பவம் காஞ்ச்யாம் ரங்கராஜகுரோஸ்ஸுதம் |
ஸுப்ரதிஷ்டாம்ஶமாத்ரேயம் ராமாநுஜ குரும் பஜே ||

பின்பு ஸ்ரீரங்கராஜரும் தமக்கு ராமாநுஜப்பிள்ளான் ப்ரஸாதித்த அர்த்தங்களையெல்லாம் ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்க, அப்போது கலி ௪௩௨௨-ஆவதான விக்ரமவர்ஷம் சித்திரை மாஸம்

1. நிலைபெறும்படி 2. ஞானநிறைவு 3. கவலையற்றவனாக்குவான் 4. கொடுக்கும்படி 5. எதிர்வாதம் 6. பெற்ற தந்தை.

திருவாதிரை நக்ஷத்ரத்தில் ஸுப்ரதிஷ்டாம்ஶரான ஒரு குமாரரவதரிக்க, அவருக்கு ஸ்வாசார்யரான ராமாநுஜப்பிள்ளான் திருநாமத்தை ப்ரஸாதிக்க, அவரும் பால்யமே தொடங்கி சதுரராய் ஸகல [1]வித்யாபாரங்கதராயிருக்க, இத்தைக் கண்டு "அப்பிள்ளாரனே இவர்" என்று பெரியோர்கள் அருளிச்செய்ய, அன்று முதல் அப்பிள்ளாரென்று திருநாமமாயிற்று. பின்பு ஒரு குமாரத்தி யவதரிக்க, அவளுக்குத் தோதாரம்மனென்று திருநாமம் சாத்தினார். பின்பு ஸ்ரீரங்கராஜரும் அப்பிள்ளாருக்குத் திருமந்த்ரார்த்தங்களை ப்ரஸாதித்தருளி திருநாட்டுக்கெழுந்தருளினார்.

ஸ்ரீரங்கராஜர் திருநக்ஷத்ரம் பங்குனி ரோஹிணி.

பின்பு கிடாம்பி அப்பிள்ளாரும் [2]ஶப்த தர்க்க மீமாம்ஸாதி ஸகல ஶாஸ்த்ரங்களையும் அதிகரித்தவராகையாலே வேதாந்தாந்வயாபேக்ஷையுடனே எழுந்தருளியிருந்தார்.

## நடாதூரம்மாள், கிடாம்பி அப்பிள்ளார் வைபவங்கள்

பின்பு, நடாதூரம்மாளும் எங்களாழ்வான் அநுக்ரஹ விஶேஷத்தாலே [3]அதிப்ரபுத்தராய்த் தத்வஸாரம் முதலான க்ரந்தங்களைச் செய்தருளி, ஸ்ரீபாஷ்யம், ஆறாயிரப்படி முதலான திவ்யார்த்தங்களையும் ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்கிற காலத்திலே தம்மிடத்தில் ஸ்ரீபாஷ்யாதிகளை அதிகரிக்கைக்காக அப்பிள்ளார் முதலான சில முதலிகள் வந்தாஶ்ரயிக்க, அந்தக் கிடாம்பி அப்பிள்ளாருக்கும் ஸுதர்ஶநாசார்யருக்கும், நடுவிலாழ்வானுக்கும் தம் ஸ்ரீபாஷ்யம், ஆறுயிரப்படி முதலானவைகளை ப்ரஸாதித்துக்கொண்டு பேரருளாளன் ஸந்நிதியில் கச்சிவாய்த்தான் மண்டபத்தினருகே நித்யமாக ஸ்ரீபாஷ்யாதி ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்க, அப்போது வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலானவர்கள் அம்மாள் திருவடிகளிலே ஆஶ்ரயித்து ஸ்ரீபாஷ்யம் முதலானவைகளை அதிகரித்தார்கள். பின்பு, ஒருநாள் நித்யமாக இவ்விடத்திலேயே காலக்ஷேபம் பண்ணுவதற்கு அதிஶயம் உண்டோ? என்று சிலர் கேட்க, அம்மாளும்,

---

1. கல்வியில் கரைகண்டவராய் 2. வ்யாகரணம். 3. மிக்க அறிவு படைத்தவராய்.

"பரம் தத்த்வம் ஸ்ரீமாநஹமபி ச பேதோ மம மதம்
ப்ரபத்திஸ்துபாயஶ் சரமஸமயே ந ஸ்ம்ருதிரபி |
ஶரீராந்தே மோக்ஷா குருரபி மஹாபூர்ண இதி தா-
நவாதீதர்த்தாந் ஷட் வரத இஹ பூர்ணய து புரா ||"

என்கிற ஶ்லோகத்தை யருளிச் செய்தார்.

பின்பு ஸுதர்ஶநாசார்யரும் அம்மாள் ஸ்ரீபாஷ்யோபந்யாஸத்தைப் பட்டோலையிலேறி யருளப்பண்ணினார். அத்தை அம்மாளும் கடாக்ஷித்து இது ஶ்ருதப்ரகாஶிகை யென்றும் இத்தைச் சோதித்து ப்ரவர்த்திடபிக்கக் கடவீரென்றும் அருளிச் செய்து அப்பிள்ளார் முதலான முதலிகளோடே ஸித்தாந்தப்ரவசநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

## ஸ்ரீமத் வேதாந்ததேஶிகாவதார ப்ரகாரம்

பின்பு இப்படி ப்ரஸித்தரான நடாதூரம்மாள் திருவடிகளிலே ஆஶ்ரயித்து ஸ்ரீபாஷ்யாதிகளையும் [1]அதிகரித்துப் பரமைகாந்தி நிஷ்டையை யுடையவராயும், உடையவருடைய பரிபூர்ண கடாக்ஷ விஶேஷம் திருக்குருகைப்பிரான் பிள்ளான் முகமாயும் கிடாம்பி ஆச்சான் முகமாயும் இரண்டு வழியாய் ப்ரவஹித்துவந்து, அப்பிள்ளாராகிற மஹாதடாகத்தில் மடுத்து, ஸமஸ்தமான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் [2]புஜித்து வாழும்படி பலங்களை உண்டுபண்ணுகிற ஒரு பெருங் கழனியில் பாய்ந்து, உடையவர் கடாக்ஷம் [3]ஸார்த்தமாகுமென்று பெரியோர்களனைவரும் மகிழும்படி வைபவத்தை உடையவராயுமிருந்துள்ள அப்பிள்ளார் பக்கல்,

"க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி: |
தஸ்மாத் காஞ்சீதி விக்யாதா புரீ புண்யவிவர்திநீ ||"

என்றும் "நாரணனுக்கிடந்தான் தடஞ்சூழ்ந்தழகாய கச்சி" என்றும் சொல்லுகிறபடியே அயோத்யாதிகளிலும் ப்ரஸித்த க்ஷேத்ரமான பெருமாள் கோயிலில் திருத்தண்கா என்கிற திவ்யதேஶத்தில் தீபப்ரகாஶர் ஸந்நிதி ஸமீபத்தில் நித்யவாஸம் பண்ணிக்கொண்டிருக்கிறவராயும், ஸிம்ஹாஸநாதிபதியாயும், தூப்புல் குலமணி

1. கற்றுணர்ந்து 2. உண்டு 3. பயனுள்ளதாக.

யாயுமிருந்துள்ள அநந்த [1]ஸோமயாஜியார் குமாரரான புண்டரீகாக்ஷ தீக்ஷிதர் எழுந்தருளித் 'தேவரீர் உடன்பிறந்தவளான தோதாரம்மனை ஸகல வேத வேதாங்க ஸமர்த்தராயும் நம்முடைய குமாரருமான அநந்தஸூரிக்குக் கந்யாதாநம் பண்ணவேணும்' என்று ப்ரார்த்திக்க, அப்பிள்ளாரும் அப்படியே திருவுள்ளம்பற்றி விவாஹம் பண்ணிக்கொடுக்க, அநந்தஸூரியும் "தயா ஸ ராஜர்ஷி ஸுதோபிராமயா" என்கிறபடியே [2]ஸஹதர்மசாரிணியான இந்தத் தோதாரம்மனோடே பஞ்சகால பராயணராய்ப் பகவத்பாகவதாசார்யாராதநம் பண்ணிக்கொண்டு ஸுகோத்தரரா யெழுந்தருளியிருந்தார்.

பின்பு,

"வேங்கடாத்ரிஸமம் ஸ்தாநம் ந பூதம் ந பவிஷ்யதி |
மாயாவீ பரமாநந்த: த்யக்த்வா வைகுண்டமுத்தமம் ||

ஸ்வாமி புஷ்கரிணீதீரே ரமயா ஸஹ மோததே |
கலௌ யுகே து ஸம்ப்ராப்தே விஶேஷாத் வேங்கடாசல: ||

ப்ரக்யாதோ ஹ்யதிகம் பூமௌ பவிஷ்யதி ந ஸம்ஶய: |
ஸாந்நித்யமதிகம் தத்ர கரிஷ்யதி ரமாபதி: ||

கலிதோஷபரீதாநாம் நராணாம் பாபகர்மணாம் |
வேங்கடேஶாத் பரோதேவோ நாஸ்த்யந்யச்சரணம் புவி ||"

'திண்கைம் மாதுயர் தீர்த்தவன் திருவேங்கடம்' 'வேதப்பொருளே யென் வேங்கடவா' 'வேதியர் முழுவேதத்தமுதத்தை', 'ஶ்ருதிஶிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே' இத்யாதிகளில் சொல்லுகிற ப்ரஸித்தியுடைய உபயவிபூதி நிர்வாஹகனை திருவேங்கடமுடையான், தம் திருவாழி திருச்சங்குகளை,

"மாபைஷ்ட புத்ர பத்ரந் தே ஶங்கசக்ரௌ ததாமி தே |
தாப்யாம் கச்சபுரீம் திவ்யாம் ஜௌ தே ஶத்ரூந் ஹநிஷ்யத: ||"

என்றருளிச்செய்து தொண்டமான் சக்ரவர்த்திக்குக் கொடுக்கையாலே தான் அழகு அழிந்திருக்க அவைகளைத் தரித்துவித்து எல்லாரும் அநுபவிக்கும்படி தம் ஸ்வரூபாதிகளை ப்ரகாஶிப்பித்த உபகாரத்திற்கு [3]ப்ரத்யுபகாரமாக அந்த ராமாநுஜ ஸித்தாந்

1. ஸோமயாகம் செய்தவர் 2. தர்மங்களைக் கூட இருந்து நடத்துபவள் 3. பதிலுதவி.

த்தைப் [1]பணிப்பித் தருளவேணும் என்று திருவுள்ளம்பற்றி அதுதானும் "யஸ்ய நாதேந தைத்யாநாம் பலஹாநி ர்ஜாயத" என்றும், "ஸ கோஷோ தார்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" என்றும் சொல்லுமாபோலே,

"டாகிந்யஸ்ச பிஸாசாஸ்ச அஸுரா ப்ரஹ்மராக்ஷஸா: |
கச்சந்தி கண்டா கோஷேண"

என்றும் "கண்டாநாதாதிபா வேதா:" என்றும் சொல்லுகிறபடியே ப்ரஸித்தமான திருமணியாழ்வாரை அவதரிப்பித்து, அவரைக் கொண்டு செய்யவேண்டுமென்று திருவுள்ளம் பற்றி அந்த அநந்தா சார்யர் ஸ்வப்நத்தில் "உமக்கு ஸந்தாநம் தருகிறோம் நம்மைத் திருவடிதொழ வாரும்" என்ன, அநந்தாசார்யரும் [2]ப்ரபாதத்தில் இத்தைத் தேவிகளுக்கு அறிவிக்க, தோதாரம்மனும் "அடியேன் ஸ்வப்நத்தில் 'திருமலையேற வந்தால் உமக்கு [3]ஸந்தாநம் தரு கிறோம்' என்று ஒரு ஸுமங்கலி ஸ்த்ரீ சொன்னதாக விண்ணப் பஞ்செய்ய, இருவரும் அத்யாஸ்சர்யப்பட்டுப் பலம் கைபுகுந்த தாக நிஸ்சயித்துத் தாமும் தேவிகளும் திருமலையேற எழுந்தரு ளித் திருவேங்கடமுடையானைத் திருவடிதொழுது அன்று ராத்ரி யில் [4]ஸயித்துக் கொண்டிருக்க, அப்போது ஸ்வப்நத்தில் திருவேங் கடமுடையான் ஒரு பாலகனாய் இருவருக்குந் தோற்றி கோயிலி னின்றும் புறப்பட்டு எதிரே சென்று, "[5]அத்யத்புதமாயிருப்பா னொரு புத்ரனைத்தந்தோம் [6]கைக்கொள்ளும்" என்று ஒரு திருமணி யை ப்ரஸாதிக்க, இருவரும் "லப்த்வா தநமிவாதந:" என்கிற படியே பூர்ண மநோரதராய் அத்தை வாங்கிக்கொண்டு தேவிகள் கையிற்கொடுக்க, அவளும்அத்தை விழுங்கினதாக ஸ்வப்நம் கண்டு விடிவோரை இச்செய்தியை தேவிகளுக்கு அருளிச்செய்ய, அவளும் அப்படியே ஸ்வப்நம் கண்டதாக விண்ணப்பஞ்செய்ய, இருவரும் பூர்ணமநோரதர்களாய்த் தங்கள் [7]அபிமதர்களோடே இவ்வாஸ்சர்யத்தைச் சொல்லிக்கொண்டிருக்கும்போது, திரு வேங்கடமுடையான் திருவாராதந ஸமயத்தில் திருமணியாழ்வார் இல்லாமையாலே கோயிலதிகாரிக ளெல்லாருங்கூடி அர்ச்சகரிடத் தில் [8]அதிஸங்கையாலே ஸிக்ஷைபண்ணுவதாக இருக்க, அந்தக்

1. ரக்ஷித்து 2. விடியற்காலையில் 3. குழந்தை 4. படுத்திருக்க 5. மிக ஆச்சரியமூட்டக்கூடிய 6. பெற்றுக் கொள்ளும் 7. வேண்டியவர்கள் 8. ஸந்தேகம்

கூட்டத்தில் சிலர் அந்தத்தம்பதிகளுடைய [1]ஸ்வப்நவ்ருத்தத்தைச் சொல்ல, அதிகாரிகளும் அதில் [2]ப்ரத்யயங்கொள்ளாமலிருக்க, திருமலைஜீயரும் அக்கூட்டத்தில் சடக்கென வந்து தமக்கு இப்படித் திருமணியாழ்வாரைத் தம்பதிகளுக்குக்கொடுத்ததாக ஸ்வப்நம் காட்டினபடியைச் சொல்ல, அப்போது அந்தத்தம்பதிகளை அழைத்துக்கேட்க, அவர்களும் அப்படியே சொல்ல எல்லாரும் ஆஶ்சர்யப்பட்டுத் திருவேங்கடமுடையான் திவ்யசேஷ்டிதத்தாலுண்டான தம்பதிகளுடைய பாக்யவிஶேஷத்தைக் கொண்டாடிக்கொண்டிருக்க, அநந்தாசார்யரும் தேவிகளுடனே திருவேங்கடமுடையான் திருவடிதொழுது விடைகொண்டு பெருமாள்கோயிலேற எழுந்தருளினர்.

---

# ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் வைபவம்

நபஸ்ய மாஸி ஶ்ரோணாயா மநந்தார்ய குருத்பவம் |
ஸ்ரீவேங்கடேஶ கண்டாம்ஶம் வேதாந்தகுருமாஶ்ரயே ||

பின்பு அந்த ஸ்வப்நதிநம் முதலாகத் தோதாரம்மனும் திருவயிறு வாய்த்து நெடுங்காலம் கர்பத்தைத் தரித்துக்கொண்டிருந்தாள். பின்பு ப்ருஶ்நிகர்பரைப் போலவும்,

"அயம் குக்ஷௌ ஸமுத்பந்ந: ஶக்தேர்கர்பஸ்ஸுதஸ்ய தே |
ஸமா த்வாதஶ தஸ்யேஹ வேதாநப்யஸதோ கதா: || "

என்கிறபடியே பராஶர பகவானைப்போலவும் லோகவைலக்ஷண்யம் தோற்றும்படி பன்னிரண்டுவர்ஷம் கர்பதாரணம் பண்ணுவித்துக் கலியுகத்தில் சாஉஎக - ஆவதான ஶுக்லவர்ஷத்தில் புரட்டாசி மாஸத்தில் ஶுக்லதஶமீ புதன்கிழமை கூடின திருவோண நக்ஷத்ரத்தில் விஶ்வாமித்ரகுல திலகரான அநந்தஸூரிகளுக்குத் தோதாரம்மனிடத்தில் திருவேங்கடமுடையான் தம் திருமணியாழ்வாரைக் குமாரராக அவதரிப்பித்தான்.

இவருடைய அவதாரத்தைக் குறித்து ப்ரதிவாதிபயங்கரம் அண்ணன் பெரியபெருமாள் முன்பே ப்ரமாணமாக அறுதியிட்ட

---

1. கனவில் நடந்ததை 2. நம்பாமலிருக்க.



அவதாரஸ்தலமான ஸ்ரீ காஞ்சீபுரம் துப்புலில் ஸேவைதரும்

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்

(ஸ்ரீராமாநுஜதர்ஶந ப்ரகாஶந துரந்தரர்)

விஷ்ணு கண்டாவதாரம், வேங்கடநாதன், கவிதார்க்கிக ஸிம்ஹம், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர், தமிழ் மறையோன், அருள்தரும் ஆரணதேசிகன், ஞான வைராக்ய பூஷணம், ஆசார்ய ஸார்வ பௌமர், லோகாசார்யன் என்று போற்றப்படுபவர்.

ஸப்ததிரத்நமாலிகையிலும் தாம் அருளிச்செய்த ஸங்கல்பஸூர்யோதயத்திலும் ஆஸுர ப்ரக்ருதிகளும் [1]ஸத்வோந்மேஷமுண்டான போது "தம் மந்யே ராகவம் வீரம் நாராயண மநாமயம்" என்கிற கணக்காய் [2]பரோக்ஷ ப்ரஸம்ஸை பண்ணுகிற க்ரந்தங்களிலும் பரக்கக் கண்டுகொள்வது.

"பாத்ரபதமாஸகத விஷ்ணு விமலர்க்ஷே
வேங்கடமஹீத்ரபதி தீர்த்ததிநபூதே |
ப்ராதுரபவஜ் ஜகதி தைத்யரிபுகண்டா
ஹந்த கவிதார்கிக ம்ருகேந்த்ர குருமூர்த்யா ||"

என்று ஸப்ததிரத்நமாலிகையில் அண்ணன் அருளிச்செய்தார்.

"வித்ராஸிநீ விபுதவைரிவரூதிநீநாம்
பத்மாஸநேந பரிசாரவிதௌ ப்ரயுக்தா
உத்ப்ரேக்ஷ்யதே புதஜநைருபபத்திபூம்நா
கண்டா ஹரேஸ் ஸமஜநிஷ்ட யதாத்மநேதி ||"

என்று தாமே ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் அருளிச்செய்தார்.

"கண்டாம்ஸ ஏவாகமஸேகரார்யோ
நோ சேத் ததுக்தம் நிகமாந்தபாவம் |
மந்த்ரார்த்தமப்யத்ர வதந்தமேநம்
கதம் ஸ ரங்கீ பஹுமாநயேத் தம் ||"

என்று எறும்பி அப்பாவாலே ஒரு ஸமயத்தில் சொல்லப்பட்டது.

பின்பு அப்படி அவதரித்த குமாரருக்கு அநந்தாசார்யரும் ஜாதகர்மம் செய்தருளிப் பத்து நாளும் கடந்த விரண்டாநாளைத் திசையுஞ் சயமரங் கோடித்துத் திருவேங்கடமுடையானுடைய தீர்த்தோத்ஸவத்தில் அவதரிக்கையாலே "திருவேங்கடமுடையான்" என்று திருநாமம் சாத்தி அந்நப்ராஸநத்தையும் அப்தபூர்த்யுத்ஸவத்தையும் செய்தருளிப் பெருந்தேவியாரை முன்னிட்டுப் பேரருளாளரை ஸேவிக்கப் பண்ணுவிக்க, பேரருளாளரும் "நம்மிராமாநுசனைப்போலே தர்ஸந ப்ரவர்த்தகராகக் கடவீர்" என்று அர்ச்சகமுகேந திருவாய் மலர்ந்தருளிக் குளிரக் கடாக்ஷித்துத் தீர்த்தம் முதலானவைகளை ப்ரஸாதித்தருளினார். இவ்வர்த்தத்தை "அன்றே அடைக்கலங் கொண்ட நம் மத்திகிரித் திருமால்" என்று தாமே அருளிச் செய்தார்.

---

1. ஸத்வகுண எழுச்சி 2. மறைமுகப் புகழ்ச்சி.

## அம்மாள், அப்பிள்ளார், தேசிகன் வைபவங்கள்

பின்பு த்ருதீய வர்ஷத்தில் சௌளத்தையும் பஞ்சமவர்ஷத்தில் அக்ஷராரம்பத்தையும் பண்ணுவித்து வாசிப்பித்துக் கொண்டிருக்கிற காலத்தில் அந்தத் தூப்புற் பிள்ளையும் ஒருநாள் தமக்கு [1]மாதுலரான கிடாம்பி அப்பிள்ளாரோடே நடாதூரம்மாள் காலக்ஷேப கோஷ்டியிற் சென்று ஸேவித்து நிற்க, அம்மாளும் அவரைக் குளிரக் கடாக்ஷித்தருள, வடக்குத் திருவீதிப் பிள்ளையும் "அஞ்சுடர் போன்றிவராரர் கொல்? என்ன" என்கிறபடியே அதிதேஜிஷ்டரான இவரைப் பார்த்து "இவர் ஆர்?" என்று கேட்க, அங்குள்ளவர்களும் "அப்பிள்ளார் பாகிநேயரான தூப்புற்பிள்ளை" என்றருளிச் செய்து இவருடைய [2]ஸ்வப்நக்ருத கண்டாதாநாஸ்வாதந த்வாதஶ வர்ஷ கர்பதாரணாக்ஷராப்யாஸ [3]பாடவாதிகளையும் பரக்க அருளிச் செய்ய, அம்மாளும் "காலக்ஷேபத்தில் விட்ட இடம் என்?" என்று முதலிகளைக் கேட்க, முதலிகளும் தூப்புற்பிள்ளை ப்ரபாவசிந்தநத்தால் விஸ்மிதர்களாய் விட்ட இடம் தெரியாமையாலே மௌநித்வத்தை அடைந்து நிற்க, அப்போது பாலரான தூப்புற்பிள்ளையும் "விட்ட இடம் இது அன்றோ?" என்று அப்போது நடந்த உபந்யாஸ வாக்யத்தைப் பரக்க விண்ணப்பஞ் செய்ய, அம்மாளும் [4]விஸ்மயப்பட்டு இவரை எடுத்தணைத்து உச்சி மோந்து, போரஉகந்தருளி புலஸ்த்ய பகவான் பராஶரரை அநுக்ரஹித்தருளினாற்போலே,

> " ப்ரதிஷ்டாபித வேதாந்த: ப்ரதிக்ஷிப்த பஹிர்மத: |
> பூயாஸ் த்ரைவித்யமாந்யஸ் த்வம் பூரிகல்யாண பாஜநம் || "

என்று அநுக்ரஹித்தருளி, "இதுவும் ஓர் அவதார விஶேஷம்" என்றும், "உடையவர் நியமநப்படிக்கு ஸ்ரீபாஷ்யாதிகளை ஸத்பாத்ரத்தில் விநியோகிக்கும்படி பிள்ளான் நியமநம்" என்றும், "எங்களாழ்வான் அடியேனுக்கு நியமித்தருளினபடியாலே, அந்த ஸத்பாத்ரம் ஸ்வப்நகண்டாவ்ருத்தாந்தாதிகளாலே இந்தத் தூப்புற் பிள்ளையே என்று உடையவர் திருவுள்ளக் கருத்தாயிருக்கும்" என்றும், "ஆகையாலே இவரை ஶிக்ஷிக்க நான் பெற்றிலேனே!" என்றும் "நீரே இவருக்கு ஆச்சான் வழியாய் வந்த திருமந்த்ர

1. மாமாவான 2. கனவிலுண்டான 3. திறமை 4. ஆச்சரியப்பட்டு.

மந்த்ரார்த்தங்களையும் பிள்ளான் வழியாய் வந்த ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயங்களையும், உடையவர் திருவுள்ள முகக்கும்படி ஸாமாந்ய ஶாஸ்த்ரங்களுடனே ப்ரஸாதியும்” என்றும் அருளிச்செய்து அப் பிள்ளார் திருக்கையில் கொடுத்தருளினார். ஆகையாலிறே தூப்புற் பிள்ளையும் [1]க்ரந்தோபக்ரமத்தில்,

“ஸ்ரீமத்ப்யாம்ஸ்யாதஸாவித்யநுபதி வரதாசார்ய ராமாநுஜாப்யாம் ஸம்யக் த்ருஷ்டேந”

இத்யாதிகளை அருளிச் செய்தார்.

பின்பு, அம்மாளும் திருநாட்டுக்கெழுந்தருள அப்பிள்ளார் ஸுதர்ஶநபட்டர் வடக்குத் திருவீதிப்பிள்ளை முதலான முதலிகளும் ஔரஸபுத்ரரான தேவராஜப் பெருமாளைக்கொண்டு சரமகைங்கர் யங்களையெல்லாம் பரக்க நடத்திப் போந்தார்கள்.

நடாதூரம்மாள் திருநக்ஷத்ரம் சித்திரை மாஸம் சித்திரை

## கிடாம்பி அப்பிள்ளார் வேதாந்த தேஶிகன் வைபவங்கள்

பின்பு தூப்புற்பிள்ளைக்கு உபநயநம் செய்தருளி அத்யயநம் பண்ணுவிக்கும்போது ஆளவந்தாருக்குப்போலே இவருக்கும் மேதை யிருக்கும்படியைக் கண்டு அநந்தாசார்யரும் உகந்தருளி ஸாங்கமாக அத்யயநத்தையும் பண்ணுவித்தருள,

“ஜடா வர்ண சர்சாத்யநேக ப்ரகார-
த்ரயீ லக்ஷணோச்சாரணே வ்யாஸகல்பஃ |
ததா கல்பஸூத்ர ப்ரயோகா த்யபிஜ்ஞோ
ஜயத்யந்வஹம் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஃ ||”

என்னும்படி தூப்புற்பிள்ளையும் வேதாத்யயநாதிகளில் அதிநிபுண ராய் எழுந்தருளியிருந்தார். பின்பு அப்பிள்ளாரும் தூப்புற்பிள்ளைக்கு ஶப்த தர்க்க மீமாம்ஸாதி ஸாமாந்ய ஶாஸ்த்ரங்களையும் அதிகரிப் பித்துத் திருமந்த்ர மந்த்ரார்த்தங்களையும் ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயங்களையும் ஸமஸ்த விஶேஷார்த்தங்களோடேகூட ப்ர ஸாதித்தருள,

1. க்ரந்த - ஆரம்பத்தில்

" ஜ்யோதிஶ் சந்தஶ் ஶப்தஶாஸ்த்ரப்ரவீண:
காவ்யஶ்ரேணீ ரூபகாலங்க்ருதிஜ்ஞ: |
மீமாம்ஸாயாம் ப்ரஹ்ம கர்மாநுகாயாம்
ஸ்ரஷ்டா ஸாக்ஷாத் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர: ||

ஸாங்க்யே யோகே பாட்டதந்த்ரே குருக்தே
ஶைவே ஜைநே ஶாங்கரே பாஸ்கரே ச |
ஶாஸ்த்ரே பௌத்தே யாதவே கர்விதாநாம்
ப்ரத்யாக்யாதா ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர: ||

பரத்வாஜ ஶாண்டில்ய ஹாரீத முக்ய
ஸ்ம்ருதி ஸ்தோம ஸூக்ஷ்மார்த நிர்ணீதிதக்ஷ: |
புராணுகமாதிஷ் வஸாதாரணஶ்ரீஸ்
ஸுதோ பாதி லோகேஷ் வநந்தார்யஸூரே: || "

என்றும் சொல்லுகிறபடியே ஶ்ருதி ஸ்மிருதீதிஹாஸ புராணுதி ஸாரதர்ஶியாய் ஸாமாந்யஶாஸ்த்ரத்திலும் [1]அத்விதீயராய் விஶேஷ ஶாஸ்த்ரத்திலும் அத்யந்த ஸமர்த்தராய் திருமந்த்ரார்த்தாதிகளில் நாதமுநிகள், ஆளவந்தார், உடையவர், பிள்ளான், ஆச்சான் முதலான முன்னோர்களெல்லாரும் இவரிடத்தில் [2]முக்யாதிஷ்டாநம் பண்ணினார்களென்னும்படி அத்யந்த வைஶத்யமுடையவராய்,

" ஆசார்யத்வோபயுக்தா முநிகணகதிதா
தேஶிகைஸ் ஸ்வேநசோக்தாஸ்
ஸர்வே பத்ரா குணுஸ் ஸ்யுஸ் ஸமுதிதவிபவாஸ்
ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரே
ஶிஷ்யத்வே சோபயுக்தா அபி ச குணகணு:
கூரநாதே யதாஸ்யுர்
நாந்யத்ராசார்யவர்கே கதிசந ஹி குணு:
ப்ராயஶஸ் தத்ர த்ருஷ்டா:"

என்னும்படி ஆத்மகுணபரிபூர்த்தி உடையவராயிருக்கையாலே எல்லாரும் ஆசார்யவரணம் பண்ணும்படி அத்யந்த யோக்யராயும் எழுந்தருளியிருக்கக் கண்டு அப்பிள்ளாரும் தூப்புற்பிள்ளைக்கு வ்ரத ஸமாவர்த்தநாதிகளையும் செய்து வைத்தருளி, " துல்ய ஶீல

1. ஒப்பற்றவராய் 2. அமர்ந்தார்கள்.

வயோவ்ருத்தாம்'' என்கிறபடியே இருந்துள்ள திருமங்கையா ரென்கிற கந்யகையை திருக்கல்யாணம் செய்து வைத்தருளினார்.

" விம்ஶத்யப்தே விஶ்ருத நாநாவிதவித்ய:" என்றும்,

" தர்கேஷு கர்கஶதியோ வயமேவ நாந்யே
காவ்யேஷு கோமலதியோ வயமேவ நாந்யே |
தந்த்ரேஷு நிஶ்சிததியோ வயமேவ நாந்யே
க்ருஷ்ணே நிவேஶித தியோ வயமேவ நாந்யே ||" என்றும்

" பர்யாப்தம் பர்யசைஷம் கண சரணகதா—
மாக்ஷபாதம் ஶிஶிக்ஷே
மீமாம்ஸா மாம்ஸளாத்மா ஸமஜநிஷி முஹுஸ்
ஸாங்க்யயோகௌ ஸமாக்யம் |"

என்றும் தாமே அருளிச் செய்தபடியே,

" அநந்தஸூரி ஸூநவே பிநந்த்யமாந வைபவாத்
திகந்தவாதி ஹம்ஸ ஜைத்ர காலமேக தேஶிகாத் |
உபாத்த ஸர்வ ஶாஸநாய ஹந்த வர்ஷ விம்ஶதௌ
புந:புநர் நமஸ்க்ரியாஸ்து வேங்கடேஶ ஸூரயே ||"

என்று அண்ணனும் அருளிச் செய்தார்.

பின்பு கிடாம்பி அப்பிள்ளாரும் தூப்புற்பிள்ளை ஸாமர்த்யத்தைக் கண்டு அத்தலைக்கு ரக்ஷையாயும், பரமத நிரஸந பூர்வகமாக ஸ்வ மத ஸ்தாபந ஸாமர்த்ய மபிவ்ருத்தமாகுகைக்காகவும், [1]ஸ்ரீ வைநதேய மந்த்ரத்தை உபதேஶித்தருளிச் சில விஶேஷார்த்தங்களையும் ப்ரஸாதித்து, ''ராமாநுஜ ஸித்தாந்த ஸ்தாபகராகக் கடவீர்'' என்று குளிரக் கடாக்ஷித்து அநுக்ரஹித்தருளினார். ஆகையாலிறே,

"இதி யதிராஜ மஹாநஸ பரிமள பரிவாஹ வாஸிதாம் பிபத |
விபுதபரிஷந்நிஷேவ்யாம் வேதாந்தோதயநஸம்ப்ரதாயஸுதாம் ||"

என்றும் "யதிவரனார் மடைப்பள்ளி வந்த மணமெங்கள் வார்த்தையுள் மன்னியதே" என்றும்,

" யோ மாஹாநஸிகோ மஹாந் யதிபதேர்
நீதஶ்ச தத்பௌத்ரஜா-
நாசார்யாநிதி ரங்கதுர்ய மபி தே
ஸ்வல்பாவஶிஷ்டோ பர: |

1. கருட மந்த்ரத்தை

என்றும் தாமே அருளிச்செய்தார். பின்பு பெருமாள் கோயிலில் எழுந்தருளி யிருந்து கொண்டு ஸித்தாந்தப்ரவசநம் பண்ணிக் கொண்டு,

“ஸஶங்க சக்ர லாஞ்சநஸ் ஸதூர்த்வபுண்ட்ரமண்டித:
ஸகண்ட லக்நஸத்துலஸ்யநர்க பத்மமாலிக: |
ஸிதாந்தரீய ஸோத்தரீய யஜ்ஞஸூத்ர ஶோபித:
மமாவிரஸ்து மாநஸே குருஸ் ஸ வேங்கடேஶ்வர: ||”

என்னும்படி நித்யகர்மாநுஷ்டானங்களோடே பகவத்பாகவதாசார்ய கைங்கர்யங்களையும் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார்.

பின்பு அப்பிள்ளாரும் நோவு சாத்திக் கொண்டு தூப்புற் பிள்ளையை அழைத்து “வாரீர்! உம்மாலே ராமாநுஜ ஸித்தாந்தம் [1]தழைக்கும்படி உடையவர் திருவுள்ளமென்று நம் அம்மாள் அருளிச் செய்தபடியால் அவ்வழியால் வந்த உடையவர் திருவடி நிலைகளையும் திருவாழி திருச்சங்குகளையும் உமக்குத் தருகிறோம்” என்று அருளிச் செய்து அவைகளையும் ப்ரஸாதிக்க, தூப்புற்பிள்ளை யும் மிக்க பசியன் இன்னடிசிலைப் பெற்றாற் போலே அவைகளைச் சிரஸாவஹித்துத் தம் திருவாராதநத்தில் வைத்து அப்பிள்ளார் திருவடிகளைத் தம் கண்ணிலொத்திக் கொண்டு பிரஸாவஹித் திருக்க, அப்பிள்ளாரும் போர உகந்தருளி, பிள்ளை முதலானவர் களுக்கும் தீர்த்தம் ப்ரஸாதித்துத் தாமும் ஆசார்யர்கள் திருவடிநிலை தீர்த்தங் கொண்டருளி திருநாட்டுக் கெழுந்தருள, தூப்புற்பிள்ளை முதலானவர்களும் ஔரஸ புத்ரரான பத்மநாபாசார்யரைக் கொண்டு சரம கைங்கர்யங்களை யெல்லாம் நடத்திப் போந்தார்கள்.

அப்பிள்ளார் திருநக்ஷத்ரம் சித்திரை மாஸம் திருவாதிரை.

பின்பு தூப்புற் பிள்ளையும் “காசி முதலாகிய நன்னகரியெல்லாம் கார்மேனியருளாளர் கச்சிக்கொவ்வா” என்கிறபடியே ப்ரஸித்தமான பெருமாள் கோயிலிலே “மாசில் மனந்தெளி முனிவர் வகுத்தவெல் லாம் மாலுகந்தவாசிரியர் வாக்குக் கொவ்வா” என்கிறபடியே ப்ர ஸித்தமான ஆசார்யனருளிச் செய்த ஸம்ப்ரதாயார்த்தத்தைக் கொண்டு ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்கிற காலத் திலே, கலியுகத்தில் - சகூஅஅ - ஆவதான வ்யயவர்ஷம் புரட்டாசி

1. ஓங்கும்படி 2. பாதுகை 3. இனிய உணவை

மாஸம் திருவோண நக்ஷத்ரத்தில் அவதரித்தவரும், வீரவல்லிப் பெருமாள் திருவம்சஸ்தருமான வீரவல்லிப் பேரருளாளய்யன் தூப்புற் பிள்ளைத் திருவடிகளிலே ஆஶ்ரயித்து,

> நம: பதமிதம் பூயாத் தஸ்மை வேங்கடஸூரயே ।
> யத்வாகம்ருதஸேகேந ஸஞ்ஜீவித மிதம் ஜகத் ॥"

என்கிற தனியனையும் விண்ணப்பஞ் செய்தார். இவருடன் வீரவல்லி க்ருஷ்ணமாசாரியர் முதலாக சிலர் ஆஶ்ரயித்து ஶாஸ்த்ராப்யாஸம் பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

## தேசிகன் வைநயதேயனை ப்ரத்யக்ஷீகரித்தல்.

பின்பு தமக்கு அப்பிள்ளார் ப்ரஸாதித்தருளின பெரிய திருவடி நயினார் விஷயமான மந்த்ரத்தை ஆவர்த்தி செய்து ஸித்திபெற வேணுமென்று திருவுள்ளமாய் அது செய்யும் போது அவருக்கும் உகப்பிடமான, அடியவர்க்கு மெய்யனாகிய தெய்வநாயகன் நித்ய வாஸம் பண்ணுகிற மதகரி மருப்பொடு மலைவளரகிலுந்தித் திரை கொணர்ந்தணை செய் செழுந்தி வயல் புகு திருவயிந்திரபுரத்தேற எழுந்தருளுவதாய் ஸ்ரீமதுராந்தகத்தில் ஏரிகாத்த பெருமாளைத் திருவடி தொழுது திருமகிழ் மரத்தடியையும் ஸேவித்துத் திருவஹீந்திர புரத்தில் எழுந்தருளி கருடநதியில் நித்யகைங்கர்யங்களையுஞ் செய்து செங்கமல நாச்சியாரை முன்னிட்டுத் தெய்வநாயகனைத் திருவடி தொழுது தீர்த்தாதிகளையும் நியமநத்தையும் பெற்றுக் கொண்டு ஔஷதாத்ரிஶிகரத்தில் அழகிய சிங்கர் ஸந்நிதியிலே ஸோமஸவநதுல்யமான ஓர் அஶ்வத்தவ்ருக்ஷத்தின்கீழே இருந்துகொண்டு நியதராய் ஸதாசார்யோபதிஷ்டமான ஸ்ரீவைநதேய மந்த்ரத்தை ஆவ்ருத்தி பண்ணிக்கொண்டிருக்க, வேதஸ்வரூபரான பெரிய திருவடி நயினாரும் அத்யந்தம் ப்ரஸந்நராய் ஸ்ரீமந்நாதமுநிகளுக்கு நம்மாழ்வார் திருமந்த்ராதிகளை யோகதஶையிலே உபதேஶித்தருளினாற் போலே தூப்புற்பிள்ளைக்கும் ஸ்ரீமத் பகவத்ராமாநுஜ ஸித்தாந்த ஸம்ருத்த்யர்த்தமாக ஸ்ரீ ஹயக்ரீவமந்த்ரத்தை உபதேஶித்தருள தூப்புற்பிள்ளையும் அத்தை அதிகரித்து,

1. கருடன்



ஸ்ரீவைநதேயன் (கருத்மான்)
ஸ்ரீமந்நிகமாந்தமஹாதேசிகனுக்கு ஸ்ரீ ஹயக்ரீவமந்த்ரத்தை
உபதேசித்தருளியவர்

" நம: பந்நகநத்தாய வைகுண்ட வஶவர்த்திநே |
ஶ்ருதிஸிந்து ஸுதோத்பாத மந்தராய கருத்மதே || "

என்று பெரியதிருவடிநயினார் திருவடி தொழுது,

" தத்பாத பக்திஜ்ஞாநாப்யாம் பலமந்யத் கதாசந |
ந யாசேத் புருஷோ நித்யம் யாசநாந் நஶ்யதி த்ருவம் || "

என்றும் 'ஞானக்கைதா காலக்கழிவு செய்யேலே' என்றும் 'பர பக்தி பரஜ்ஞாந பரமபக்தியுக்த: மாம் ஶுருஷ்வ'' என்றும் சொல்லு கிறபடியே ஷோடஶவர்ண ஸுவர்ணத்தோடொக்கும் பரமைகாந் திக்கும் அவஶ்யாபேக்ஷிதங்களான ப்ரயோஜநங்களையும் கோலாதே பகவந்முகோல்லாஸார்த்தமாக ஸ்ரீஹயக்ரீவ மந்த்ரத்தை ஆவ்ருத்தி செய்துகொண்டு,

" வ்யாக்யாமுத்ராம் கரஸரஸிஜை: புஸ்தகம் ஶங்கசக்ரே
பிப்ரத் பிந்நஸ்படிகருசிரே புண்டரீகே நிஷண்ண: |
அம்லாநஸ்ரீ ரம்ருதவிஶதை ரம்ஶுபி: ப்லாவயந்மா-
மாவிர்பூயா தநகமஹிமா மாநஸே வாகதீஶ: || "

என்று ஸ்ரீஹயக்ரீவ த்யாநமும் பண்ணிக்கொண்டு எழுந்தருளி யிருந்தார்.

### தேசிகன் ஸ்ரீஹயக்ரீவனை ப்ரத்யக்ஷீகரித்தல்

அப்போது

" பன்னுகலைநால்வேதப் பொருளையெல்லாம்
[1]பரிமுகமாயருளிய வெம்பரமன் காண்மின்"

என்கிறபடியே ஸர்வவித்யாதிதைவதமான ஸ்ரீஹயக்ரீவரும் "தப ஸாஸ்மிஸுதோஷித:" என்கிறபடியே அத்யந்தம் ப்ரஸந்நராய் இவர் முன்னே எழுந்தருளி தம்முடைய லாலாமயமான அம்ருதத்தை ப்ரஸாதித்தருளி [2]அந்தர்த்தாநம் பண்ண, இவரும் அவ்வம்ருதபாநம் பண்ண, ஸ்ரீஹயக்ரீவ கடாக்ஷவிஶேஷத்தாலே ஸகல வித்யைகளும் "இமே ஸ்ம பரமோதார கிங்கராஸ் தவ ராகவ" என்கிறபடியே ஒரு

1. குதிரை முகமாய் 2. மறைய.



திருவஹீந்திரபுரம் ஸ்ரீதேவநாதன் ஸந்நிதியில் ஸேவைதரும்
ஸ்ரீ யோக ஹயக்ரீவர்
(ஸ்ரீ ஸ்வாமிதேசிகனால் ஆராதிக்கப்பெற்றவர்)

கூட்டமாய்வந்து நிற்க, "வித்யா ஸமுதிதோ ராமஶ் ஶௌர்யே புவி விக்ரம:" என்கிறபடியே அதிதேஜிஷ்டராய் "தத் ஸர்வம் தர்மவீர் யேணயதாவத்ஸம்ப்ரபஶ்யதி"என்கிறபடியே யாதார்த்யதர்ஶியாய் "குரு ராமகதாம் திவ்யாம்" என்கிறபடியே வேதாந்த ஸ்தாபநம் பண்ணுமென்றுநியமிக்கப்பட்டவராய்"ஏஷ பந்தா மயோத்திஷ்டோ யேந யாந்தி மஹர்ஷய:" என்கிறபடியே "இது வழியாமலவென்றறி வாரெங்கள் தேசிகர்" என்னும்படியே ஸந்மார்க்கதர்ஶியாயும் இருந்துள்ள தூப்புற்பிள்ளைப்ரதமம் ஸ்ரீஹயக்ரீவஸ்தோத்ரத்தையும் செய்தருளிப் பின்பு இம்மந்த்ரோபதேஷ்டாவான பெரிய திருவடி நயினார் விஷயமாகக் கருட பஞ்சாஶத்தையும் செய்தருளி, செங் கமல நாச்சியாரையும் தெய்வநாயகனையும் திருவடிதொழ, அடிய வர்க்கு மெய்யனாகிய தெய்வநாயகனும் போரஉகந்தருளித் தீர்த்தம் முதலானவைகளை ப்ரஸாதித்து, "நம் விஷயமாக ப்ரபந்தங்களைச் செய்யக்கடவீர்" என்று அருளிப்பாடிட்டருள, இவரும் "தந்யோஸ்ம்-யநுக்ருஹீதோஸ்மி" என்று நியமநத்தைச் சிரஸா வஹித்துத் தேவநாயகபஞ்சாஶத்தையும், ப்ராக்ருதபாஷையாலே அச்யுதஶத கத்தையும், செந்தமிழாலே மும்மணிக்கோவை, பந்துப்பா, கழற்பா, அம்மானைப்பா, ஊசல்பா, ஏசல்பா, நவரத்நமாலை ஆக ஒன்பது ப்ரபந்தங்களைச் செய்து முடிவிலேயும் "முந்தை மறை மொய்ய வழி மொழி நீ யென்று முகுந்தனருள் தந்த பயன் பெற்றேன் நானே" என்று பகவந் நியமநத்தைத் தலைக்கட்டினதே பலமாக அநுஸந்திக்க தெய்வநாயகனும் செங்கமலநாச்சியாரும் கேட்டு உகந்தருளி, "நம்மிருவர் ப்ராதாந்யத்தை இப் ப்ரபந்தங்களாலே வெளியிட்ட உமக்குப் பாரிதோஷிகமாக ஸ்ரீஶடகோபனை ப்ரஸாதித் தோம்" என்று ப்ரஸாதித்தருள, இவரும் "பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங் கொண்ட அடியே னுக்கு இப்போது விஶேஷ கடாக்ஷம் செய்தருளின திவ்ய தம்பதி களான தேவரீர்களுடைய திருவுள்ளத்து உகப்பைக்காட்டிலும் பரம பலமுண்டோ?" என்று விண்ணப்பஞ்செய்ய, அந்தத் திவ்ய தம்பதிகளும் "அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்று நியமித் தருள, தூப்புற்பிள்ளையும் அப்படியே ஸித்தாந்தப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்க, ஒருநாள் பரமதவிலாஸங்கள் தம் திருவுள்ளத்தில் தோன்ற, அத்தைப் பரிஹரிக்கும்படி பரமதபங்கத்தைச் செய் தருளினார்.

பின்பு ஒருநாள் அங்குள்ள சக்ரவர்த்தித்திருமகனைத் திருவடி தொழுது ரகுவீரகத்யத்தையும் ஸ்ரீகோபாலனைத் திருவடிதொழுது கோபாலவிம்ஶதியையும் அருளிச்செய்தார்.

பின்பு ஒருநாள் தெய்வநாயகன் நியமநம் பெற்றுத் திருக்கோவலூரில் ஆயனாரைத் திருவடிதொழுது அவர் விஷயமாகத் தேஹளீஶஸ்துதியும் செய்தருளி "மூத்திதரு நகரேழில் முக்கியமாங்கச்சி" என்கிற பெருமாள் கோயிலேற எழுந்தருளித் திருவநந்த ஸரஸ்ஸில் நீராடி ஸேவாக்ரமமாகப் பெருந்தேவியாரை முன்னிட்டுப் பேரருளாளனைத் திருவடி தொழுது, அத்தபூர்த்தியில் ப்ரதமகடாக்ஷம் செய்தருளின க்ருதஜ்ஞதையை முன்னிட்டு உடையவர் கத்யத்தில் அருளிச்செய்த ப்ரபத்யர்த்தத்தைத் தமக்கு அப்பிள்ளார் ப்ரஸாதித்தருளினபடியாலே அப்படியே அங்கபஞ்சக ஸம்பந்நமாக ஆத்மரக்ஷா பரஸமர்ப்பணத்தைப் பேரருளாளன் திருவடிகளிலே செய்தருளி நிர்பரராயிருக்க, பேரருளாளரும் "மத்ஜ்ஞாநதர்ஶநப்ராப்திஷு நிஸ்ஸம்ஶயஸ் ஸுகமாஸ்வ' என்றும் "நம்முடைய விஷயமாக ப்ரபந்தங்களைச் செய்யக் கடவீர்" என்றும் அர்ச்சகமுகேந அருளிச்செய்ய, தூப்புற்பிள்ளையும் "நாயன்தே நாயன்தே" என்று பகவந் நியமநத்தைச் சிரஸாவஹித்துத் தீர்த்தம் முதலானவைகளையும் பெற்று விடைகொண்டு ஆழ்வார்கள் திருவீதி ப்ரதக்ஷிணமாக ஆழ்வாராசார்யர்கள் திருவடி தொழுது திருத்தண்கா என்கிற ஹிமோபவந திவ்ய தேஶத்தில் தம் திருமாளிகையேற எழுந்தருளி அருகே இருந்துள்ள விளக்கொளி எம்பெருமானைத் திருவடி தொழுது நித்யமாக பகவத் பாகவதாசார்ய கைங்கர்யங்களையும் ஸித்தாந்த ப்ரவசநத்தையும் பண்ணிக் கொண்டு பேரருளாளன் திருவடிகளிலே தாம் பண்ணின பரஸமர்ப்பணப்ரகாரத்தை விவரிக்கிற ந்யாஸ தஶகத்தையும், அப்படி பரஸ்வீகாரம் பண்ணின பேரருளாளன் விஷயமாக வரதராஜ பஞ்சாஶத்தையும், செந்தமிழாலே அடைக்கலப்பத்து, அர்த்த பஞ்சகம், ஸ்ரீவைஷ்ணவ திநசர்யை, திருச்சின்னமாலை, பன்னிருநாமம் என்கிற ஐந்து ப்ரபந்தங்களையும் செய்தருளி, முடிவிலும் "தித்திக்கு மெங்கள் திருவத்தியூரரைச் சேர்பவர்க்கே" என்று அருளிச் செய்து இப்படித் தன்னை ஆட்படுத்தி உலகத்தைத் திருத்தும்படி செய்து வைத்த அந்த க்ஷேத்ரத்தினுடைய வைபவத்தை ஸங்க்ரஹித்து ஹஸ்திகிரிமாஹாத்மயம் என்கிற க்ரந்தத்தையும் செய்தருளி, இப்படிக்கு அருகே

இருந்து கடாக்ஷித்தருளின விளக்கொளி எம்பெருமான் விஷயமாக ஶரணாகதி தீபிகையையும், அஷ்ட புஜாஷ்டகத்தையும், யதோக்த காரி ஸ்தோத்ரத்தையும், காமாஸிகாஷ்டகத்தையும் செய்தருளி, அங்குள்ள வெஃகா முதலான எம்பெருமான்களையும் திருவடி தொழுது, திருப்புட்குழியிலும் மரகதவல்லியாரை முன்னிட்டு விஜய ராகவனைத் திருவடி தொழுது, அவர் விஷயமாகப் பரமார்த்த ஸ்துதியையும் செய்தருளி, தம் திருமாளிகையேற எழுந்தருளி, ஸுதர்ஶநாஷ்டகத்தையும், ஷோடஶாயுத ஸ்துதியையும், அருளிச் செய்து, "உத்தமவமர்த்தலம்" என்கிற பாட்டின்படியே சக்ர வர்த்தித் திருமகனும், கண்ணனும் இருவருடைய அவதாரமே என்று சொல்லப்பட்ட பேரருளாளர் விஷயத்தில்,

"ஸம்ஸாராவர்த்த வேக ப்ரஶமநஶுப த்ருக் தேஶிகப்ரேக்ஷிதோஹம்
ஸந்த்யக்தோந்யை ருபாயை ரநுசிதசரிதேஷ்வத்ய ஶாந்தா பிஸந்தி: |
நிஶ்ஶங்கஸ் தத்வத்ருஷ்ட்யா நிரவதிகதயம் ப்ராப்ய ஸம்ரக்ஷகந் த்வாம்
ந்யஸ்ய த்வத்பாத பத்மே வரத நிஜபரம் நிர்பரோ நிர்பயோஸ்மி ||"

என்று அநுஸந்தித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கும் காலத்தில்,

## தேஶிகன் ஸ்ரீஹயக்ரீவ திவ்யமங்கள விக்ரஹம் பெறுதல்

தமக்கு மாதுலராயும் ஆசார்யராயும் இருந்துள்ள கிடாம்பி அப்பிள்ளார் திருமகளாரான புண்டரீகாக்ஷர் தேவிகளுக்குக் கலி யுகத்தில்-சச௦௫-ஆவதான ஶோபக்ருத்வர்ஷம் புரட்டாஶி மாஸம் திருவோண நக்ஷத்ரத்தில் ஒரு குமாரருண்டாக அவருக்கு ஸ்ரீநிவாஸ னென்கிற திருநாமம் சாற்றி ரக்ஷார்த்தமாகத் திருவிலச்சிலையும் ப்ரஸாதித்தருள, இந்தப் புத்ரோத்ஸவ ஸந்தோஷத்தை வடதேஶத் தில் ஶிஷ்யனான ஸ்ரீக்ருஷ்ணராயனுடைய நகரத்தில் எழுந்தருளி யிருக்கிற புண்டரீகாக்ஷரும் கேட்டருளி பெருமாள் கோயிலேற எழுந்தருளும் போது அன்று ராத்ரியில் ஸ்ரீபாஷ்யகாரராலே ப்ரஸா

1. பெருமை 2. சுருக்கி.

திக்கப்பட்டுத் தம் கூடஸ்தரான பிள்ளான் ஆராதித்து வந்த ஸ்ரீஹயக்ரீவரும் "உம்முடைய புத்ரருக்கு ஸ்ரீநிவாஸனென்கிற திருநாமத்தையும் ரக்ஷார்த்தமாகத் திருவிலச்சினையும் ப்ரஸாதித்தருளின தூப்புற் பிள்ளைக் கையில் நம்மை எழுந்தருளப்பண்ணிக் கொடுக்கக் கடவீர்" என்று ஸ்வப்நம் காட்டியருள, புண்டரீகாக்ஷரும் [1]விடிவோரை இவ்வர்த்தத்தை ராயனுக்கு அறிவிக்க, ராயனும் ஸமஸ்த பிருதுகளோடே பெருமாள் கோயிலேற எழுந்தருளப் பண்ணிவைக்க, பெருமாள் கோயிலிலும் ராயகுரு ஆகையாலே ஸமஸ்த ஸ்ரீகார்யதுரந்தரரான புண்டரீகாக்ஷருக்குக் கோயிலில் அநந்த கொத்து பரிஜநங்களும் எதிர்கொண்டுபோக, தூப்புற்பிள்ளையும் தமக்கும் அப்படியே ஸ்வப்நம் காட்டினபடியாலே இவர்களோடே எதிர்கொள்ள, புண்டரீகாக்ஷரும் தூப்புற்பிள்ளையைக் கண்டு தண்டன் ஸமர்ப்பித்து ஸ்வப்ந வ்ருத்தாந்தத்தையும் விண்ணப்பஞ்செய்து ஸ்ரீஹயக்ரீவரையும் எழுந்தருளப் பண்ணிக் கொடுக்க, தூப்புற்பிள்ளையும்,

"லப்த்வா குலதநம் ராஜா லங்காம் ப்ராயாத் விபீஷண:"

என்கிறபடியே தமக்கும் ஸ்வப்நம் காட்டினது பலித்ததென்று மகிழ்ந்துகொண்டு "அப்போது தேவரீர் ப்ரத்யக்ஷமாக [2]லாலாமயமான அம்ருதத்தை ப்ரஸாதித்தது இப்போது இருவருக்கும் ஸ்வப்நம் காட்டியருளி திவ்யமங்கள விக்ரஹரூபேண எழுந்தருளித்து" என்று விண்ணப்பஞ் செய்து,

"ப்ரஹ்மாத்யாஸ் ஸகலா தேவா யம் ந ஸ்மர்துமபீஸ்வரா: |
ஸ ஏஷ பகவாநத்ய மாந் தாரயிது மாகத: ||"

என்று அநுஸந்தித்து ஸ்ரீஹயக்ரீவ ஸ்தோத்ரத்தாலே திருவடி தொழுது தமக்குக் குலக்ரமமாக தாராதநமானப்பேரருளாளனோடே ஸ்வப்ந லப்தரான ஸ்ரீஹயக்ரீவரையும் நித்யமாக ஆராதித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

பின்பு ஒருநாள் திருமலையாத்ரையாகப் பெருங்கூட்டங்கள் போகக்கண்டு தூப்புற்பிள்ளையும் "கோனேரி வாழுங் குருகாய்ப் பிறப்பேனே" என்று ஆசைப்படும்படியையும் ஸ்வப்ந கண்டா வ்ருத்தாந்தத்தாலே தம்முடைய அவதாரத்திற்கு முக்ய ஹேது

1. காலையில் 2. நுரை.

வாயும் இருந்துள்ள திருவேங்கடமுடையானைத் திருவடி தொழுதுவர த்வரித்து கடிகாசலத்தில் அக்காரக்கனி அழகிய சிங்கரைத் திருவடி தொழுது தீர்த்தம் முதலானவைகளைப் பெற்று ஸ்வர்ண முகீ நதியில் நீராடி திருச்சுகனூரில் அலர்மேல் மங்கையையும் திருவடி தொழுது திருமலை அடிவாரத்திலே உடையவராலே திருப்ரதிஷ்டை செய்யப்பட்ட ஆழ்வாராசார்யர்களையும் ஸ்ரீகோவிந்தராஜனையும் திருவடி தொழுது,

"ப்ரபத்யே தம் கிரிம் ப்ராய: ஸ்ரீநிவாஸாநுகம்பயா |
இக்ஷுஸார ஸ்ரவந்த்யேவ யந்மூர்த்யா பர்கராயிதம் || "

என்கிறதனாலும் "கண்ணனடியிணையை யெமக்குக் காட்டும் வெற்பு" என்கிற பாட்டாலும் திருமலையை ஸேவித்துத் திருமலையேறி வழியிலெம்பெருமானாரைத் திருவடி தொழுது திவ்ய நகரத்தையும் திருக்கோபுர நயினாரையும் திவ்ய விமானத்தையும் ஸேவித்துத் திருவீதிப்ரதக்ஷிணமாக எழுந்தருளி ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி,

"ரவிஸத்ருஶ தநு ஸ்ரீவேங்கடாசார்ய பாத:
கரகலிதபவித்ரஸ் ஸோத்தரீய ஸ்வபாவ: |
ஸரஸிஜமணிமாலா மூர்த்த்வபுண்ட்ராந் ததாநோ
மம மநஸி விபாதே ஸந்ததம் ஸந்நிதத்தாம் || "

என்கிறபடியே வடிவழகையுடையராய் ஞானப்பிரானைத் திருவடி தொழுது ப்ரதக்ஷிணமாகக் கோயிலிலே எழுந்தருளி,

"ப்ரதக்ஷிண ப்ரணாமாம்ஶ்ச யுக்மாநேவ ஸமாசரேத்"

என்கிறபடியே [2]யுக்மமாயிருக்கும்படி தண்டன் ஸமர்ப்பித்து லக்ஷ்ம்யம்ஶமான சம்பகவ்ருக்ஷம் முதலானவைகளை ஸேவித்துக் கொண்டு ஸ்வாமி புஷ்கரிணீ ப்ரதக்ஷிணமாக உள்ளே எழுந்தருளி அங்கு ஸேவாக்ரமமாக,

"பஶ்யேம லக்ஷ்மணமுநே: ப்ரதிபந்நஹஸ்தா-
முந்நித்ரபத்ம ஸுபகா முபதேஶமுத்ராம் |

என்று எம்பெருமானாரைத் திருவடி தொழுது உள்ளே புகுந்து "படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே" என்கிற குலசேகரன் படியருகே நின்று "அகலகில்லேனிறையுமென் றலர்மேன்மங்கை

1. வலமாக 2. இரட்டையாக.

-யுறைமார்பா'' என்கிற பாட்டை அநுஸந்தித்துத் திருவடி தொழுது திவ்யமங்கள விக்ரஹத்தையும் திவ்யமஹிஷீ பூஷணாயுதங்களையும் ஸேவித்துத் திவ்ய கல்யாண குணங்களை அநுஸந்தித்து நிற்க, திருவேங்கடமுடையானும் போர உகந்தருளி தீர்த்தம் முதலானவைகளை ப்ரஸாதித்து ''நம் விஷயமாக ஸ்தோத்ரத்தைச் செய்யும்'' என்று அர்ச்சகமுகேந அருளிச் செய்ய, தூப்புற் பிள்ளையும் ''நாயன்தே'' என்று நியமநத்தைச் சிரஸாவஹித்து இப்படி ஏழையரிடத்தில் இரக்கம் செய்தருளின தயாகுண விஷயமாக ஒரு ஶதகத்தை விண்ணப்பஞ் செய்யக்கோலி அதில் ப்ரதம தஶகத்தில் [1]மோக்ஷப்ரதத்வத்தையும், த்விதீயதஶகத்தில்[2] ஸர்வஜ்ஞத்வாதிகளையும், த்ருதீயதஶகத்தில் [3]விரோதி நிவர்த்தகத்வத்தையும், சதுர்த்த தஶகத்தில் [4]ப்ராபகத்வத்தையும், பஞ்சமதஶகத்தில்[5]ப்ராப்யத்வத்தையும், ஷஷ்ட தஶகத்தில் பகவத் ப்ராப்திக்கு [6]ப்ரபத்தியொழிய உபாயாந்தரஶூந்யத்வத்தையும் அறுதி இட்டு, ஸப்தம தஶகத்தில் [7]ஸௌஶீல்ய குணவஶ்யராய், அஷ்டம தஶகத்தில் அவன் [8]பரத்வத்தை அநுஸந்தித்து, நவமதஶகத்தில் அவன் [9]அவதார க்ரமத்தையும் அநுஸந்தித்து, தஶமதஶகத்தில் [10]அபேக்ஷிதப்ராப்தியையும் ப்ரதிபாதித்து, ஆக இந்த ஶதகத்தை ஶரணாகதி மந்த்ரமான த்வயத்திற்கு விவரண ரூபமாகத் தலைக்கட்டினார். இத்தைக் கேட்டருளின திருவேங்கடமுடையானும் தாம் செய்த க்ருஷி பலித்ததென்று போர உகந்து குளிரக் கடாக்ஷித்தருள, தூப்புற் பிள்ளையும் க்ருதார்த்தராய் அங்குள்ளவர்களுக்கும் விஶேஷார்த்தங்களை ப்ரஸாதித்துக் கொண்டு சிலநாள் எழுந்தருளியிருந்து,

''ப்ரஶமிதகலிதோஷாம் ப்ராஜ்ய போகாநுபந்தாம்
ஸமுசித குணஜாதாம் ஸம்யகாசார யுக்தாம் |
ஶ்ரிதஜநபஹுமாந்யாம் ஶ்ரேயஸீம் வேங்கடாத்ரௌ
ஶ்ரியமுபசிநு நித்யம் ஶ்ரீநிவாஸ த்வமேவ ||''

---

1. மோக்ஷத்தையளிப்பது 2. எல்லாமறிந்தவனென்பது 3. விரோதிகளையழிப்பது 4. அடைவிப்பவைகளையும் 5. அடையத் தகுந்தவைகளையும் 6. பிரபத்தியே உபாயம் மற்ற உபாயமில்லை என்பதையும் நிச்சயித்தல் 7. ஸௌசீல்ய குணவச்யர் என்பதையும் 8. அவனே பரன் என்பதையும் 9. அவதார வகையையும் 10. விரும்பியதையடைவதையும்

என்கிற ஶ்லோகத்தாலே இச் செல்வம் நித்யமாகச் செல்ல வேணு மென்று ப்ரபத்தி ரூபமான மங்களாஶாஸநம் செய்தருளினர்.

பின்பு தூப்புற் பிள்ளையும் வடமதுரை முதலானத் திவ்ய தேஶங்களில் எம்பெருமான்களைத் திருவடி தொழுது, அங்குள்ளார்களைத் திருத்தி அவர்களுக்கும் ஸம்ப்ரதாயார்த்தங்களை யெல்லாம் ப்ரஸாதித்துக் கொண்டு. ஒருநாள் மார்க்கவஶமாகத் துங்கபத்ரைக் கரையில் ஒரு நகர ஸமீபத்தில் ஒரு பகவத் ஸந்நிதியில் எழுந்தருளியிருக்க, அப்போது பால்யமே தொடங்கி ஸஹபாடியான வித்யாரண்யனும் வைராக்யத்தாலே ஸந்ந்யஸித்துக் கங்காயாத்ரை பண்ணுவதாக வந்து தூப்புற் பிள்ளையைக் கண்டு [1]"ஸல்லாபாதிகளைப் பண்ணிக் கொண்டிருக்க, அப்போது அந்த ராஜாவின் பெண்ணை ப்ரஹ்மரக்ஷஸ்ஸு பிடித்து ஒருவராலும் போகாமல் இருக்க, ராஜாவும் "இப்படி யோக்யர்கள் இருவர் வந்திருக்கிறார்கள்" என்று கேட்டு அங்கேறப் போய் ஸேவித்து "இந்த ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸைப் போக்க வேணும்" என்று ப்ரார்த்திக்க, தூப்புற் பிள்ளையும் [2]அநபிமுகராயிருக்க, வித்யாரண்யனும் 'ராஜாவைக் கடாக்ஷித்தருள வேணும்'' என்ன, தூப்புற் பிள்ளையும் "அப்படி செய்வதில்லை" என்றருளிச் செய்து, ப்ருந்தாவநம் முதலான திவ்ய தேஶங்களில் எம்பெருமான்கள் திருவடி தொழுது, திருவயோத்யை வழியாய்க் காஶியில் எழுந்தருளி, கங்கையில் நீராடி,

"இஹ புருஷமஜாநதாம் புராணம்
நியதிவஶேந நிமீலிதாம் தயாளுः ।
உபதிஶதி டதிஸ்ஸ்வயம் பரம் நா-
மூபநிஷதாமபி தாரகம் ரஹஸ்யம் ॥"

என்று அநுஸந்தித்து, புருஷோத்தமம் ஸ்ரீ கூர்மம் முதலான எம்பெருமான்களையும் ஸேவித்து, அஹோபிலத்தில் ஸ்ரீ அழகிய சிங்கரையும் திருவடி தொழுது, திருமலையில் திருவேங்கடமுடையானையும் திருவெவ்வளூரில் ஸ்ரீ வீரராகவனையும் திருவடி தொழுது, திருநின்றவூர், திருவல்லிக்கேணி, திருக்கடன்மல்லை முதலான திவ்ய தேஶங்களில் எம்பெருமான்களைத் திருவடி தொழுது, ஸ்ரீபெரும்பூதூர் ஏற எழுந்தருளி,

---

1 சிறந்த உரையாடல் 2. பாராமுகமாக

"வந்தே தம் யமிநாம் துரந்தரமஹம்
மாநாந்தகார த்ருஹா
பத்தாநாம் பரிபந்தி நாம் நிஜத்ருஶா
ருந்தாந மிந்தாநயா ।
தத்தம் யேந தயா ஸுதாம்புநிதிநா
பீத்வா விஶுத்தம் பய:
காலே ந: கரிஶைலக்ருஷ்ண ஜலத:
காங்க்ஷாதிகம் வர்ஷதி ॥

என்று எம்பெருமானாரைத் திருவடி தொழ, எம்பெருமானாரும் போர உகந்தருளி தீர்த்தம் முதலானவைகளை ப்ரஸாதித்து "நம் அபிமதத்தை நிறைவேற்றக் கடவீர்" என்று அர்ச்சகமுகேந அருளிச் செய்ய, தூப்புற் பிள்ளையும்,

" ஆரண நூல் வழிச் செவ்வை யழித்திடு மைதுகர்க்கோர்,
வாரணமாவர வரகக்கதலிகள் மாய்த்த பிரான்,
ஏரணி கீர்த்தியிராமாநுசமுனி இன்னுரைசேர்,
சீரணி சிந்தையினேஞ் சிந்தியோமினித் தீவினையே" என்றும்,

"ஶ்வஸிதாவதூத பரவாதிவைபவா
நிகமாந்தநீதிஜலதேஸ் தலஸ்ப்ருஶ: ।
ப்ரதிபாதயந்தி கதிமாபவர்கிகீம்
யதிஸார்வபௌம பதஸாத்க்ருதாஶயா: ॥
த்வயா தர்ஶித ஸர்வார்தே த்வந்நிதேஶே வ்யவஸ்திதே ।
கதம் கதகமாநீஷ்யாத் கஶ்சிதந்யோ மயி ஸ்திதே ॥ "

என்றும் விண்ணப்பஞ் செய்ய, எம்பெருமானாரும் திருவுள்ள முகந்து குளிரக் கடாக்ஷித்தருளி விடை கொடுக்க, தூப்புற் பிள்ளையும் "காசி முதலாகிய நன்னகரியெல்லாம் கார்மேனியருளாளர் கச்சிக் கொவ்வா" என்று அருளிச் செய்து பெருமாள் கோயிலில் ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

அப்போது ஒரு மாயி ஸந்ந்யாஸி ப்ரபலனாய் வந்து வாதம் பண்ண, அவனை ஜயிக்க,அவனும் [1]க்ஷுத்ர மந்த்ரவாதியாகையாலே குளத்திலே முழுகித் தண்ணீர் குடிக்க, பிள்ளை திருவயிற்றில் [2]உபாதியுண்டாக, பிள்ளையும் அது க்ஷுத்ரமென்று அறிந்து, ஒரு

1. அற்ப மந்திரங்களை அறிந்தவன் 2. நோய்

களை ப்ரஸாதிக்க, தூப்புற்பிள்ளையும் அவைகளைப் பெற்று உள்ளே புகுந்து சந்த்ரபுஷ்கரிணீ ப்ரதக்ஷிணமாகப் பலிபீடத்தருகே தண்டன் ஸமர்ப்பித்து,

"அஸ்மத்தேசிக மஸ்மதீய..."

என்கிற ச்லோகத்தாலே குருபரம்பராநுஸந்தாநம் பண்ணித் திருமணத் தூணருகே நின்று பெரியபெருமாளையும் அழகிய மணவாளனையும் அமலனாதிபிரான் படியே கண்ணாரக்கண்டு உகந்து திருவடி தொழுது "கறியின்பத் திருவெள்ளம் யாம் முழுகினம்" என்கிறபடியே [1]அவசராய் எழுந்தருளியிருக்க, பெரியபெருமாளும் குளிரக்கடாக்ஷித்தருளி "நம்மிராமாநுஜனைப் போலே பரமதநிரஸந பூர்வகமாக ஸ்வஸித்தாந்த ஸ்தாபநம் பண்ணக் கடவீர்" என்று அர்ச்சகமுகேந அருளிச் செய்து தீர்த்தாதிகளை ப்ரஸாதிக்க, தூப்புற் பிள்ளையும் "நாயின்தே" என்று அவைகளைப் பெற்று பெரிய திருமண்டபத்தில் முதலிகளோடே எழுந்தருளியிருக்க, அந்தக் குத்ருஷ்டி வித்வான்களும் வந்து வாதம் பண்ணத் தொடங்கி ஏழுநாள் நடக்க அந்த அந்தத்திநத்தில் நடக்கிற வாதங்களை ராத்ரியில் பேரருளாளையன் [2]பட்டோலை கொண்டிருக்க, எட்டாந் திநத்தில் அவர்களை ஜயித்து அந்தப் பட்டோலையைக் கடாக்ஷித்து சோதித்து க்ரந்தமாக்கி அதற்கு "சததூஷணி" என்று திருநாமம் சாற்றியருள, பெரிய பெருமாளும் தம்முடைய ஸ்ரிய:பதித்வாதி குணநிரூபகமான ராமாநுஜ ஸித்தாந்தத்தை நிலைநிறுத்தி மித்யாவாதிகளையும் நிராகரித்தபடியாலே உபய வேதாந்தங்களையும் ப்ரவசநம் பண்ணிக்கொண்டு "அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்று நியமித்தருள, ஸுதர்சநபட்டர் முதலான பெரியோர்களும் பெரியபெருமாள் நியமநம் தலைக்கட்டவேண்டுமென்று அருளிச் செய்ய, தூப்புற்பிள்ளையும் அப்படியே வேதாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்க ஒருநாள் ஸ்வப்நத்தில் உடையவர் எழுந்தருளி "திருமந்த்ர மந்த்ரார்த்தங்களையும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயங்களையும் ப்ரவசநம் பண்ணிக்கொண்டு இவ்வர்த்தங்களையெல்லாம் ஸுப்ரதிஷ்டிதமாகப் பெற்றுப் பின்னோர்கள் உஜ்ஜீவிக்கும்படிக்கும் ப்ரபந்தங்களைப் பண்ணக்கடவீர்" என்று நியமித்தருளி, குளிரக் கடாக்ஷித்துத் தம் திருவடிகளைத் தூப்புற் பிள்ளை திருமுடியில் அமர்த்தியருள, பிள்ளை

1. தன்வசமில்லாதவராய் 2. எழுதி வைக்க.

*ஶரீர பதநாவதி ப்ரபு நிஷேவணு பாதநா-*
*தபிந்தந தநஞ்ஜய ப்ரஶமதம் தநம் தந்தநம் |*
*தநஞ்ஜய விவர்தநம் தநமுதூட கோவர்த்தநம்*
*ஸுஸாதந மபாதநம் ஸுமநஸாம் ஸமாராதநம் ||*

*நாஸ்தி பித்ரார்ஜிதம் கிஞ்சிந் ந மயா கிஞ்சி தார்ஜிதம் |*
*அஸ்தி மே ஹஸ்திஶைலாக்ரே வஸ்து பைதாமஹம் தநம் ||"*

என்று [1]வைராக்ய [2]பஞ்சக ஶ்லோகங்களைச் செய்தருளி அனுப்பி யருள, வித்யாரண்யனும் ஈடுபட்டுப் பிள்ளை திருவடிகளிலே [3]ப்ரவணனாயிருந்தான்.

## தேஶிகன் அருளிச்செய்த ஸ்ரீஸ்துதி ப்ரபாவம்

அப்போது அஸூயாளுக்களாலே ப்ரேரிதனான ஒரு ப்ரஹ்ம சாரி விவாஹார்த்தமாகத் தநத்தை ப்ரஸாதித் தருளவேணுமென்று தூப்புற்பிள்ளைத் திருவடிகளிலே தண்டன்ஸமர்ப்பித்து ப்ரார்த்திக்க, தூப்புற்பிள்ளையும் ஸ்ரீஸ்துதியாலே பிராட்டியை ப்ரார்த்திக்க, பிராட்டியும் அந்த ப்ரஹ்மசாரிக்குக் [4]காங்க்ஷாதிகமான தநத்தைக் [5]கநகதாரா ரூபமாக ப்ரஸாதித்தருள, அந்த ப்ரஹ்மசாரியும் ஸம்பூர்ண மநோரதனாய்த் தூப்புற்பிள்ளைத் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து விடைகொண்டு போனான்.

இந்த வ்ருத்தாந்தத்தை வித்யாரண்யன் கேட்டு மிகவும் ப்ரவணனாயிருந்தான் அஸூயாளான அந்தர விரோதிகளும் [6]பக்ந மநோரதர்களானார்கள்.

பின்பு, தென்னாடும் வடநாடுந் தொழ நின்ற திருவரங்கத் திருப் பதியில் குத்ருஷ்டி வித்வான்கள் கூட்டமாக வந்து "இப்போது ராமாநுஜ ஸித்தாந்தத்தை நிர்வஹிக்கும்படி ஶக்தியுள்ளவர்கள் நமக்கு உத்தரம் சொல்லிப் போகக் கடவர்கள், இல்லாவிடின் நம் முடைய ஸித்தாந்தத்தில் சேரக் கடவர்கள்" என்று ப்ரபல நிர்ப் பந்தநம் பண்ணிக் கொண்டிருக்க, அப்போது ஶ்ருதப்ரகாஶிகா சார்யரான ஸுதர்ஶந பட்டரைப் பெரியவாச்சான் பிள்ளை, பிள்ளை

1. பற்றில்லாமை பற்றிய 2. ஐந்து 3. பற்றுடையவனாய் 4. விரும்பியதைவிட அதிகமான 5. பொன்மாரி 6. முறிக்கப்பட்ட எண்ணத்தை யுடையவர்கள்.

லோகாசார்யர் முதலானவர்கள் தண்டன் ஸமர்ப்பித்து, "இப்போது செய்ய வடுப்பது என்?" என்று கேட்க, ஸுதர்ஶந பட்டரும் "இஸ் ஸித்தாந்தத்திற்கு ப்ரவர்த்தகராகும்படி உடையவர் திருவுள்ளக் கருத்தறிந்து நம் அம்மாள் தூப்புற்பிள்ளையை அநுக்ரஹித்தருளின படியாலே, அந்தத் தூப்புற் பிள்ளையும் நம் அம்மாள் அநுக்ரஹத் தாலே அபிவ்ருத்தராய் ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டு பெருமாள் கோயிலிலே எழுந்தருளியிருக்கிறபடியாலே அவரைக் கொண்டே ஸித்தாந்த நிர்வாஹகம் பண்ணிக்கொள்ளவேண்டும்" என்றருளிச் செய்து "பொங்கோதஞ்சூழ்ந்த" என்கிறபடியே செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாருடைய ஸேநாபதியாழ் வான் ஶாஸநமாக,

"ஸ்ரீமச்ச்ரீரங்கநாதஸ்ய விஷ்வக்ஸேநஸ்ய ஶாஸநம் |
தத்பக்தபக்த பக்தாநாம் ஶிரோபூஷணதாங்கதம் ||"

என்று ஒரு [1]திருமுகப்பட்டயத்தை அனுப்பியருள, தூப்புற்பிள்ளை யும் அத்தைச் சிரஸாவஹித்துப் பெருமாள் கோயிலினின்றும் முதலிகளோடே கூட அதித்வரையாய் கோயிலேற வெழுந்தருளி, திருக்காவேரியில் நீராடிக் கரம்பனூருத்தமனை திருவடி தொழுது, வள்வாயலகால் புள்நந்துழாமே பொருநீர் திருவரங்க நடைய திவ்ய தேஶமான திருவரங்கத் திருப்பதியைத் தண்டன் ஸமர்ப் பித்து, "ஆராதவருளமுதம் பொதிந்த கோயில்" என்கிற பாட்டை அநுஸந்தித்து நிற்க, கோயிலநந்தகொத்து பரிஜநங்களும் திருமாலை முதலான வரிசைகளைக் கொண்டு ஸகலவாத்யங்களோடே எதிர் கொண்டுவர, அத்திரளைக் கண்டு தூப்புற்பிள்ளையும் தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, ஸுதர்ஶநபட்டரும் திருமாலை முதலானவைகளை ப்ரஸாதிப்பித்துப் பிள்ளையைக் கைபிடித்துக்கொண்டு "முன்பு எம் பெருமானாருக்கு அருளப்பாடிட்டாற்போலே இப்போது ராமாநுஜ சித்தாந்தத்தை நிர்வஹிக்கும்படி உமக்கு அழகியமணவாளன் அருளப்பாடிட்டருளினார்" என்று அருளிச்செய்ய, பிள்ளையும் "நாயின்தே" என்று அந்த நியமநத்தைச் சிரஸாவஹித்து ப்ரதக்ஷிணமாகக் கோயிலிலே எழுந்தருளி ஸ்ரீரங்கநாச்சியாரைத் திருவடி தொழுது நிற்க, ஸ்ரீரங்கநாச்சியாரும் "ராமாநுஜ ஸித்தாந் தத்தை நிர்வஹிக்கக் கடவீர்" என்று திருமாலை முதலானவை

1. கடிதம்.

களை ப்ரஸாதிக்க, தூப்புற்பிள்ளையும் அவைகளைப் பெற்று உள்ளே புகுந்து சந்த்ரபுஷ்கரிணீ ப்ரதக்ஷிணமாகப் பலிபீடத்தருகே தண்டன் ஸமர்ப்பித்து,

"அஸ்மத்தேசிக மஸ்மதீய..."

என்கிற ச்லோகத்தாலே குருபரம்பராநுஸந்தாநம் பண்ணித் திருமணத் தூணருகே நின்று பெரியபெருமாளையும் அழகிய மணவாளனையும் அமலனாதிபிரான் படியே கண்ணாரக்கண்டு உகந்து திருவடி தொழுது "ஈறிலின்பத் திருவெள்ளம் யாம் மூழ்கினம்" என்கிறபடியே [1]அவசராய் எழுந்தருளியிருக்க, பெரியபெருமாளும் குளிரக்கடாக்ஷித்தருளி "நம்மிராமாநுஜனைப் போலே பரமதநிரஸந பூர்வகமாக ஸ்வஸித்தாந்த ஸ்தாபநம் பண்ணக் கடவீர்" என்று அர்ச்சகமுகேந அருளிச் செய்து தீர்த்தாதிகளை ப்ரஸாதிக்க, தூப்புற் பிள்ளையும் "நாயின்தே" என்று அவைகளைப் பெற்று பெரிய திருமண்டபத்தில் முதலிகளோடே எழுந்தருளியிருக்க, அந்தக் குத்ருஷ்டி வித்வான்களும் வந்து வாதம் பண்ணத் தொடங்கி ஏழுநாள் நடக்க, அந்த அந்தத்திநத்தில் நடக்கிற வாதங்களை ராத்ரியில் பேரருளாளனையன் [2]பட்டோலை கொண்டிருக்க, எட்டாந் திநத்தில் அவர்களை ஜயித்து அந்தப் பட்டோலையைக் கடாக்ஷித்து சோதித்து க்ரந்தமாக்கி அதற்கு "சததூஷணி" என்று திருநாமம் சாற்றியருள, பெரிய பெருமாளும் தம்முடைய ச்ரிய:பதித்வாதி குணநிரூபகமான ராமாநுஜ ஸித்தாந்தத்தை நிலைநிறுத்தி மித்யாவாதிகளையும் நிராகரித்தபடியாலே உபய வேதாந்தங்களையும் ப்ரவசநம் பண்ணிக் கொண்டு "அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்று நியமித்தருள, ஸுதர்சநபட்டர் முதலான பெரியோர்களும் பெரியபெருமாள் நியமநம் தலைக்கட்டவேண்டுமென்று அருளிச் செய்ய, தூப்புற் பிள்ளையும் அப்படியே வேதாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்க ஒருநாள் ஸ்வப்நத்தில் உடையவர் எழுந்தருளி "திருமந்த்ர மந்த்ரார்த்தங்களையும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயங்களையும் ப்ரவசநம் பண்ணிக்கொண்டு இவ்வர்த்தங்களை யெல்லாம் ஸுப்ரதிஷ்டிதமாகப் பெற்றுப் பின்னோர்கள் உஜ்ஜீவிக்கும்படிக்கும் ப்ரபந்தங்களைப் பண்ணக் கடவீர்" என்று நியமித்தருளி, குளிரக் கடாக்ஷித்துத் தம் திருவடிகளைத் தூப்புற் பிள்ளை திருமுடியில் அமர்த்தியருள, பிள்ளை

1. தன்வசமில்லாதவராய் 2. எழுதி வைக்க.

யும் விடிவோரை ஸ்வப்நத்தை நினைத்து [1]விஸ்மிதராய் உடையவர் நியமநப்படிக்கு ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்க, ஒருநாள் பெரியபெருமாளும் அந்த ஸ்ரீபாஷ்ய ப்ரவசநத்தைக்கண்டு உகந்து அருளப்பாடிட்டு "அநிதரஸாதாரணமாயும் நாமொருவர்க்கே ஸாதாரணமாயும் இருந்துள்ள 'வேதாந்தாசார்யர்' என்கிற திருநாமத்தை உமக்கு ப்ரஸாதித்தோம்" என்று அர்ச்சகமுகேந அருளிச் செய்து திருமாலை திருப்பரிவட்டம் முதலான வரிசைகளையும் ப்ரஸாதித்தருள, தூப்புற் பிள்ளையும் அவ்வரிசைகளையும் பெற்று நிற்க, ஸுதர்ஶநபட்டர் பெரியவாச்சான் பிள்ளை முதலானோரும் இதுவே ஒக்கும் என்று அருளிச் செய்ய, வேதாந்தகேசிகனும் அத்திரளோடே ஸ்ரீரங்கநாச்சியாரைத் திருவடி தொழ, ஸ்ரீரங்க நாச்சியாரும் இவருடைய ஸித்தாந்த நிர்வாஹத்தையும் பெருமாள் ப்ரஸாதித்தருளின திருநாமத்தையும் போர உகந்தருளி [2]"ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்" என்கிற திருநாமத்தைத் தாமும் ப்ரஸாதித்தருள, அந்தத் திருநாமத்தையும் ஸுதர்ஶநபட்டர் முதலானோர் உகந்தருள, வேதாந்ததேசிகனும் "அங்கயல் பாய் வயற் றென்னரங்கம்" என்கிறபடியே உடையவர் கடாக்ஷம் பெற்றுப் பின்பு திவ்ய தம்பதிகளுடைய கடாக்ஷத்தையும் பெற்று அவர்கள் நியமநப் படிக்கே ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்க, அப்போது அங்குள்ளார்களும் தேசாந்தரஸ்தர்களும் மதாந்தரஸ்தர்களும் வேதாந்ததேசிகனுடைய ப்ரபாவத்தைப் பார்த்து, "இது லோகோஜ்ஜீவநார்த்தமான ஓரவதார விசேஷம்" என்று தெளிந்து அவர் திருவடிகளிலே ஆஶ்ரயித்தார்கள். இவ்வர்த்தங்களை "ஸ்ரீரங்கராஜ திவ்யாஜ்ஞாலப்த வேதாந்தாசார்யபத:" இத்யாதிகளாலே தாமே அருளிச் செய்ததுமன்றிக்கே,

"ஜீவநம் ஜகதாம் ஜீயாத் கிமப்யபகத ஸ்ப்ருஹம் |
ஸ்வதந்த்ரம் ஸர்வதந்த்ரேஷு வேங்கடேஶாஹ்வயம் மஹ: ||"

ஸ்ரீபாஷ்யம் விரசய்ய ஸம்யமிவரோ ஜித்வா ஸ்வயம் வாதிநோ
பாஹ்யாம்ஶ்சாபி குத்ருஷ்டிகாந்புவி புந: பாஷ்யப்ரதிஷ்டாஶயா |
ஸ்ரீமத் வேங்கடநாத தேஶிக ஶிரோரத்நாத்மநாவிர்பபா-
வித்யேவஞ்ச வதந்தி ஹந்த க்ருதிநஸ்த்ரைகாலிக ஜ்ஞாநிந: ||

1. ஆச்சரியப்பட்டவராய் 2. எல்லா சாஸ்திரங்களிலும் கலைகளிலும் சுதந்திரமான திறமையுடையவர்.



ஸ்ரீரங்கத்தில் திவ்ய ஸேவை தரும்

ஸ்ரீரங்கநாச்சியார்

(ஸ்ரீதேசிகனுக்கு "ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்' என்னும் திருநாமத்தை ப்ரஸாதித்தருளினார்)



ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் திவ்ய ஸேவை தரும்

ஸ்ரீரங்கநாதன்

(ஸ்ரீதேசிகனுக்கு 'வேதாந்தாசார்யர்' என்னும் திருநாமத்தை ப்ரஸாதித்தருளினர்)

இஹ ரங்கபதி ப்ரஸாதலப்தோ-
பயவேதாந்த துரந்தரத்வகீர்தி: |
அபி தத்ஸஹதர்மிணீக்ருபாத்தா-
கிலதந்த்ரப்ரபுதாக ஏஷ ஸூரி: ||"

என்று ப்ரதிவாதி பயங்கரம் அண்ணனும் பெரியபெருமாள் முன்பே ப்ரமாணமாக அருளிச் செய்தார்.

பின்பு, வேதாந்த தேசிகனும் பெரியபெருமாள் விஷயமாகப் பகவத்த்யாந ஸோபாநத்தையும், பூஸ்துதி நீளாஸ்துதிகளையும், திருமங்கையாழ்வாரைக் கடாக்ஷித்துக் கொண்டிருக்கிற தசாவதாரப் பெருமாள்கள் விஷயமாகத் தசாவதார ஸ்தோத்ரத்தையும் செய்தருளி, எம்பெருமானாருடைய சித்திரைத் திருவாதிரைத் திருநாளில் எம்பெருமானாருடைய திவ்ய மங்கள விக்ரஹத்திலும் திவ்யகுண [1]சேஷ்டிதங்களிலும் ஈடுபட்டுப் பரவசராயிருக்க, அங்குள்ள பெரியோர்களும் "இப்படிக்கொத்த அநுபவம் அடியோங்கள் நெஞ்சிலும் பொருந்தும்படி ஒரு ஸ்தோத்ரத்தை அருளிச் செய்ய வேணும்" என்று ப்ரார்த்திக்க, உடையவரும் யதிராஜ ஸப்ததியைச் செய்யும்படி அருளப்பாடிட்டருள, வேதாந்த தேசிகனும் அப்படியே யதிராஜஸப்ததியைச் செய்தருளி விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் போர உகந்தருளி தீர்த்தம் முதலானவைகளை ப்ரஸாதிக்க, வேதாந்த தேசிகனும் அவைகளைப் பெற்று உடையவர் நியமநப்படிக்குப் பரமத நிரஸந பூர்வக ஸ்வமதஸ்தாபகங்களான தத்வ முக்தாகலாபத்தையும், அதற்கு வ்யாக்யாநமான ஸர்வார்த்த ஸித்தியையும், ந்யாயஸித்தாஞ்ஜநம், ந்யாயபரிசுத்தி, ஸேச்வரமீமாம்ஸை, மீமாம்ஸாபாதுகை, ஸ்ரீபாஷ்ய விவரணமான தத்வடீகை, அதிகரணதர்பணம், அதிகரணஸாராவளி, ஸ்ரீகீதா பாஷ்ய விவரணமான தாத்பர்ய சந்த்ரிகை, ஈசாவாஸ்யோபநிஷத் வ்யாக்யாநம், ஹரிதிந திலகம், பூகோள நிர்ணயம், தத்வ்யாக்யாநம் — இந்த க்ரந்தங்களைச் செய்தருளி, உடையவர் திருவுள்ளக் கருத்தை ப்ரகாசிப்பித்துக் கொண்டிருக்க, ஸுதர்சந பட்டர் முதலானோர் கவிதையிலும், சாஸ்த்ரங்களிலும் இவருக்குள்ள அதிசயத்தைப் பார்த்துக் "கவிதார்க்கிகஸிம்ஹர்" என்று அருளிச் செய்தார்கள்.

1. செயல்கள்.

ஒரு நாள் பெரியவாச்சான்பிள்ளை உபாதாநகாலத்தில் ந்யாஸ வித்யா விஷயத்தில் சில அர்த்தங்களை ஒருபடியாக அருளிச் செய்துகொண்டிருந்து இதனுடைய நிஷ்கர்ஷத்தைச் சொல்லு மென்று கேட்க, வேதாந்த தேசிகனும் ந்யாஸ விம்சதியையும், ந்யாஸ திலகத்தையும் செய்தருளிக்கொடுக்க, பெரியவாச்சான் பிள்ளையும் அத்தைக்கடாக்ஷித்து " 'வநிதேயருள்செய்வர்' இத்யாதி களான அருளிச்செயல்கள் பாதிதங்களாகாதோ?" என்று கேட்க, வேதாந்த தேசிகனும் சரமஸ்லோகத்தில் விசேஷார்த்தத்தையும், அவ்வர்த்தங்களை ப்ரதிபாதிக்கிற "வேதநாவர் விரும்புந் திருக் கண்ணபுரத்தாதியானை யடைந்தார்க் கல்லலில்லையே" என்றும், "திருமாலிருஞ்சோலைமலை யென்றேனென்ன, திருமால் வந்தென் னெஞ்சு நிறையப்புகுந்தான்" என்றும், "சன்ம சன்மாந்தரங் காத் தடியார்களைக் கொண்டுபோய்" என்றும், "கலியுகமொன் றுமன் றிக்கே தன்னடியார்க்கருள் செய்யும்" என்றும், "அடுக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மி னென்றருள்கொடுக்கும்" என்றும், "இத்தனை யடியாரானார்க்கிரங்கும் நம்மரங்கனய பித்தனே" என்றும், உபநிஷத் தான திருப்பாவையிலும் "தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது, வாயினாற்பாடி மனத்தினாற் சிந்திக்க, போயபிழையும் புகுதருவானின்றனவும், தீயினிற்றூசாகும்" என்றும் சொல்லுகிற பாட்டுக்களையும், ஆழ்வார் அநுபவத்தையும், நாதமுநிகள், ஆளவந்தார், உடையவர், பிள்ளான், அம்மாள், அப்பிள்ளார் இவர் களுடைய அநுஷ்டாநத்தையும் [1]ஆவாபோத்வாப புரஸ்ஸரமாக அருளிச்செய்ய, பெரியவாச்சான்பிள்ளையும் அத்தைக் கேட்டு உகந்து உடையவர் பரிபூர்ண கடாக்ஷத்திற்குப் பாத்ரரான உம்மை [2]அதிசயிப்பாரும் உண்டோ? என்று அருளிச்செய்து ப்ரபத்தி க்ரமத்தையும் சொல்லீர் என்ன, வேதாந்ததேசிகனும் தாம் முன்பு செய்தருளின ந்யாஸதசகத்தைக் கொடுக்க, அத்தையும் பார்த்து உகந்தருள, வேதாந்த தேசிகனும் ஸச்சரித்ரரக்ஷை, ஸ்ரீபாஞ்ச ராத்ரரக்ஷை, ஆளவந்தாரருளிச்செய்த ஸ்ரீகீதார்த்தஸங்க்ரஹத்திற்கு வ்யாக்யாநமான கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை, நிக்ஷேப ரக்ஷை, கத்யத்ரயசதுச்ஸ்லோகீ, ஸ்தோத்ரரத்ந பாஷ்யமான ரஹஸ்யரக்ஷை இந்த க்ரந்தங்களையும் செய்தருளி ஸித்தாந்த ப்ரவசநம் செய்து

1. சேர்த்தும் குறைத்தும் 2. மீறுபவரும்.

கொண்டு எழுந்தருளியிருந்தார். இவருடைய திருநாம ப்ரபாவத்தை ரஹஸ்யரக்ஷையினுடைய முடிவிலே,

"ஸ்வகமிதி ஹரிதத்தம் யாமுநஸ்தோத்ர வ்ருத்த்யா
வ்யவ்ருணுத நிகமாந்தாசார்யகம் வேங்கடேஶ: |
அகணி ஸதஸி ஸத்பிர் டஸ் ஸமாக்யாஸஹஸ்ரை:
கவிகதக ம்ருகேந்த்ரஸ் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர: ||"

என்று தாமே அருளிச் செய்தார்.

அப்போது, விஜயநகரத்தில் தத்த்வவாதியான அக்ஷோப்ய முநிக்கும் மாயாவாதியான வித்யாரண்யனுக்கும் வேதாந்தத்தில் [1]வாதம் [2]ப்ரவ்ருத்தமாக, இருவருடைய அபிப்ராயத்தையும் ராஜ பத்ரிகாமூலமாக வேதாந்த தேஶிகன் ஸந்நிதிக்கு அனுப்பித்து [3]யாதார்த்யத்தை அறிந்துகொள்ளவேணுமென்று அனுப்பிக்க, வேதாந்த தேஶிகனும்,

" அஸிநா தத்வமஸிநா பரஜீவப்ரபேதிநா |
வித்யாரண்ய மஹாரண்ய மக்ஷோப்யமுநிரச்சிநத் ||"

என்று எழுதி அனுப்பியருள, ராஜாவும் வேதாந்த தேஶிகன் திருவடிகளிலே ப்ரவணனாயிருக்க, வித்யாரண்யனும் அத்தை ஸஹியாமல் ஶததூஷணியைத் தூஷிக்கிறேனென்று சொல்லி யனுப்ப, தேஶிகனும் ஶததூஷணியை அனுப்பியருள, வித்யா ரண்யனும் பார்த்து ஒரு சகாரத்தின் மேலே குத்திட்டு வரவிட, அத்தைத் தேஶிகனும் கடாக்ஷித்துச் சகார ஸமர்த்தநமென்று ஒரு க்ரந்தம் செய்தருளி அந்தக் குத்தின் மேல் ஒரு குத்திட்டு அனுப்பி யருள, வித்யாரண்யனும் பார்த்து, விஷ்ணு கண்டாவதாரரை நான் ஜயிக்க வல்லேனோ? என்று ஈடுபட்டு ப்ரவணனாயிருக்க, ராஜாவும் வேதாந்த தேஶிகனிடத்தில் அத்யந்தம் பக்தனாயிருந்தான்.

பின்பு, வேதாந்தாசார்யர் என்றும், ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரர் என்றும், கவிதார்க்கிகஸிம்ஹர் என்றும் ப்ரஸித்தமான வைபவத் தைக் கேட்டு க்ருஷ்ணமிஶ்ரன் என்கிற ஒரு வித்வான் வாதம் பண்ணவேணுமென்று வந்தழைக்க, வேதாந்த தேஶிகனும் மூன்று நாள் வாதம் பண்ணி அவனை ஜயித்தருள, க்ருஷ்ணமிஶ்ரனும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரிடத்தில் பக்தனாய்த் தான் பண்ணின

1. சர்ச்சை 2. தொடங்க 3. உண்மையை

ப்ரபோத சந்த்ரோதயத்தைப் பார்க்கவேண்டும் என்ன, தேசிகனும் "நாம் செய்த ஸங்கல்பஸூர்யோதயத்தை நீரும் பார்க்கக் கடவீர்" என்று அருளிச்செய்ய, டிடிமோரை க்ருஷ்ணமிஸ்ரனும் ப்ரபோதசந்த்ரோதயத்தைக் கொண்டுவர, நம் தேசிகனும் அன்று ராத்ரியிலே ஸங்கல்பஸூர்யோதயத்தைச் செய்தருளி விடிவோரை நித்ய கைங்கர்யங்களையும் அநுஷ்டித்து ஸங்கல்பஸூர்யோதயத்தையும் அவன் கையில் கொடுக்க, அவனும் பார்த்து அதோமுகனாய் இருக்க, ஸுதர்சநபட்டர் முதலான பெரியோர்களும் இந்த இரண்டு க்ரந்தங்களையும் கடாக்ஷித்தருளி, அவன் க்ரந்தத்தைப் பாராமல் அத்தைக் கண்டிக்கும்படியான க்ரந்தத்தைப் பண்ணுகைக்கு ஓரவதார விசேஷத்தாலே யன்றோ? என்று பேசருளி இவருக்கே கவிதார்க்கிகஸிம்ஹரென்கிற திருநாமம் [1]அந்வர்த்தம் என்று அருளிச் செய்தார்கள்.

பின்பு, க்ருஷ்ணமிஸ்ரனும் பக்தனாய்த் தேசிகன் திருவடிகளிலே பணிந்து நின்றனென்று கேட்டுட் டிண்டிமகவியும் ராமாப்யுதயம் என்கிற காவ்யத்தைப் பண்ணித் தேசிகன் ஸந்நிதியில் கொடுக்க, தேசிகனும் யாதவாப்யுதயத்தையும் ஹம்ஸஸந்தேசத்தையும் சேர்த்தருளி டிண்டிமகவி கையில் கொடுக்க, அவனும் அத்தைப்பார்த்து "கவிதார்க்கிகஸிம்ஹரென்கிற பிருது உமக்கே தகும்" என்று தண்டன் ஸமர்ப்பித்து,

"த்வி சதுஷ்பத பரிவர்தந கர்வித
கரிசரப கண்டபேருண்ட: |
கண்ட ந கண்டந கவிரிஹ
டிண்டிம கவி சண்ட டிண்டிமோ ஜயது ||"

என்கிற ச்லோகத்தையும் விண்ணப்பஞ் செய்தான்.

பின்பு வேதாந்த தேசிகனும் திருக்குடந்தை முதலான திவ்ய தேசங்களில் எம்பெருமான் திருவடிதொழுது திருவணையாடி ஸ்ரீவில்லிபுத்தூரில் வடபெருங்கோயிலுடையானையும் சூடிக்கொடுத்த நாச்சியாரையும் திருவடி தொழுது நிற்க, சூடிக்கொடுத்த நாச்சியாரும் "நாம் செய்தருளின உபநிஷத்தான திருப்பாவையில் விசேஷார்த்தங்களை யெல்லாம் ந்யாஸவிம்சதி முதலான சரணாகதி ப்ரதிபாதக க்ரந்தங்களாலே ப்ரகாசிப்பித்தருளினீரே" என்று

1. பொருளுள்ளது.

போர உகந்தருளி திருமாலை முதலானவைகளை ப்ரஸாதிக்க, தேசி கனும் அவைகளைப் பெற்று உள்மகிழ்ந்து,

"ஸ்ரீவிஷ்ணுசித்த குலநந்தந கல்பவல்லீம்"

என்று தொடங்கி கோதாஸ்துதியை விண்ணப்பஞ் செய்ய, நாச்சி யாரும் கேட்டு உகந்து குளிரக் கடாக்ஷித்தருள, பின்பு திருநகரியேற எழுந்தருளி,

"நிரஞ்ஜநமயஞ்ஜந: கிம் இ நேத்ர முந்நித்ரயந்
நமஸ்யதி ஶடத்விஷே நரகவைரி ஜீவாதவே |
அகஸ்த்யகிரி நிம்நகா ஶுபகவீசிகா ஸோதர-
ஸ்வலக்ஷணஸரஸ்வதீ ஸுரபிகேஸரஶ்லாகிநே ||"

என்று ஆழ்வாரைத் திருவடி தொழுது நிற்க, ஆழ்வாரும் "ஸ்வரூ போபாய புருஷார்த்தங்களை விஶதமாகக் காட்டுகிற திருமந்த் ரார்த்தமான நம் திருவாய்மொழியிலுள்ள விஶேஷார்த்தங்களை யெல்லாம் நிக்ஷேபரக்ஷை, ரஹஸ்யரக்ஷை முதலானவைகளாலே ப்ரகாஶிப்பித்த உமக்குப் [1]பாரிதோஷிகமாக ஒன்றும் அமையாது" என்று போர உகந்தருளி "நம் திருவாய்மொழிக்கு நாம் உகந் தருளின வ்யாக்யானமான ஆறுயிரப்படிக்கு வ்யாக்யாநரூபமாகச் சில க்ரந்தங்களைச் செய்யக் கடவீர்" என்று அர்ச்சகமுகேந அருளிச் செய்து திருமாலை முதலானவைகளையும் ப்ரஸாதிக்க, வேதாந்த தேஶிகனும் ஆழ்வார் நியமநத்தைச் சிரஸாவஹித்து வரிசைகளையும் பெற்றுப் பொலிந்துநின்றபிரான் முதலான எம்பெருமான்களையும் திருவடி தொழுது திருவண் பரிசாரம் முதலாகத் திவ்யதேஶங்களி லும் எம்பெருமான் திருவடி தொழுது கோயிலேற வெழுந்தருளி மீண்டு திருவெள்ளறை ஸ்ரீமுஷ்ணம் முதலாகத் திவ்யதேஶ யாத்ரை பண்ணிப் பெருமாள்கோயிலேற எழுந்தருளி பெருந்தேவி யாரையும் பேரருளாளனையும் திருவடி தொழுது முதலிகளோடே வேதாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்கிற காலத்திலே,

ஒரு மஹா ஸமர்த்தனான பாம்பாட்டி வந்து சில துஷ்டர் களுடைய துர்ப்போதநத்தாலே அட்டஹாஸம் பண்ணிக் கொண்டு இந்த மந்த்ரவாதத்தில் என்னை ஜயித்தீராகில் ஸர்வதந்த்ர

1. பரிசாக

ஸ்வதந்த்ரர் என்கிற பிருது உமக்குத் தகுமென்ன. தேஶிகனும் [1]அஸமானனோடே [2]ஸம்வதிக்க வேண்டுவதே என்று வெறுத்திருக்க, அவனை ஜயிக்கும்படி முதலிகள் ப்ரார்த்திக்க, தேஶிகனும் தம்முடைய முன்பே ஏழுகீற்றை யெழுதி, பாம்பாண்டியைப் பார்த்து இனி வேண்டினபடி செய்யக்கடவை யென்றருளிச் செய்ய, அந்தப் பாம்பாண்டியும் மஹாஸர்ப்பங்களை யேவ, அவைகளும் சில கீற்றுக்களைக் கடக்கமாட்டாமலிருக்க, பின்னையும் சில மஹாநாகங்களை யேவ, அவைகளும் இரண்டு மூன்று கீற்றுக்குள்ளேயே இருக்க, பின்னையும் க்ருத்தனாய் ஶங்கபால னென்கிற மஹாநாகத்தையேவ அதுவும் ஏழு கீற்றையும் கடந்து கிட்டிவர, தேஶிகனும் கருட தண்டகத்தை அருளிச் செய்ய, பெரியதிருவடி நயினாரும் அந்த மஹாநாகத்தை எடுத்துக் கொண்டு போக, பாம்பாண்டியும் தேஶிகன் திருவடிகளிலே விழுந்து அந்த மஹாநாகத்தைக் கொடுக்க வேண்டும் என்று ஶரணாகதி பண்ண, தேஶிகனும் முன்பு செய்தருளின கருட பஞ்சாஶத்தை அநுஸந்தித்து ப்ரார்த்திக்க, பெரிய திருவடி நயினாரும் அந்த மஹாநாகத்தைக் கொணர்ந்து விட, பாம்பாண்டியும் விஸ்மிதனாய்ப் போக, தேஶிகனும் எண்ணெய்க் காப்புச் சாத்திக்கொள்கிற ஸமயத்தில் முன்பு மாயி ஸந்த்யாஸி செய்தாற் போலே பாம்பாண்டியும் ஒரு குளத்திலே முழுகித் தண்ணீரைக் குடிக்க, க்ஷுத்ர விஶேஷத்தாலே தேஶிகன் திருவயிறு வெடித்துப் போகும்படி [3]உபாதியுண்டாக, அந்த க்ஷுத்ரத்தை அறிந்து தேஶிகனும் முன்புபோலே ஒரு ஸ்தம்பத்தில் கீறி விட்டு அத்தாலே அந்த ஜலங்களை யெல்லாம் பெருக்க, அத்தைக் கேட்டுப் பாம்பாண்டியும் தேஶிகன் திருவடிகளிலே விழுந்து க்ஷாமணம் பண்ணிக்கொண்டு போனான்.

பின்பு வேதாந்த தேஶிகனும் ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக் கொண்டு,

"வரத விரசய த்வம் வாரிதாஶேஷதோஷாம்
புந ருபசிதபுண்யாம் பூஷிதாம் புண்யகோட்யா |
ஸித முதித மநோபிஸ் தாவகைர் நித்யஸேவ்யாம்
ஹத ரிபு ஜநயோகாம் ஹஸ்தி தாம்நஸ் ஸம்ருத்திம்" ||

என்று மங்களாஶாஸநம் செய்தருளிச் சில காலம் எழுந்தருளியிருந்து திருமலை முதலான திவ்யதேஶங்களிலும் மங்களாஶாஸநம் பண்ணி,

1. சமமில்லாத 2. வாதம் செய்ய 3. நோய்.

எம்பெருமானுரையும் திருவடி தொழுது கோயிலேற எழுந்தருளும் போது திருக்கோவலூராருகே மஹாரண்யத்தில் ஒருநாள் தளிகை முதலானவைகளுக்கு விரோதம் உண்டாய் ஸ்ரீ ஹயக்ரீவருக்குத் தீர்த்தத்தைக் கண்டருளப் பண்ணி உபவாஸத்துடனே ஒரு த்ரை வர்ணிக ஸ்ரீவைஷ்ணவனுடைய க்ருஹத்திலே ஒரு ராத்ரி தங்கியிருக்க, அந்த த்ரைவர்ணிகனும் அர்த ராத்ரியிலே தேஸிகனை யெழுப்பி "ஒரு வெள்ளைக் குதிரை எங்கள் கடலையை யெல்லாம் தின்கிறது; அத்தைத் தின்னாமலிருக்கும்படி கட்டவேணும்" என்ன, தேஸிகனும் அவனைப் பாலமுது கொண்டுவரும்படி நியமிக்க, அவனும் கொண்டு வந்து கொடுக்க, அத்தை ஸ்ரீ ஹயக்ரீவனுக்குக் கண்டருளப் பண்ணித் தாமும் முதலிகளும் [1]ஸ்வீகரித்து "இனி உன் கடலையைத் தின்னாது" என்றருளிச் செய்ய, த்ரைவர்ணிகனும் ஸ்வாமி திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து "ஆரோ என்றிருந்தேன்! இப்படிக்கொத்த பாக்யம் அடியேனுக்கு லபித்ததே" என்று உள் மகிழ்ந்து மறுநாளில் ஸ்ரீ ஹயக்ரீவருக்கு விஶேஷாராதநம் பண்ணுவித்தான்.

பின்பு வேதாந்த தேஸிகனும் திருக்கோவலூராயனுரைத் திருவடிதொழுது திருவஹீந்திரபுரத்திற் சிலநாள் ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்க, அங்குச் சில துஷ்டர்கள் பாம் பாண்டியைப் போதித்தாற்போலே ஒரு கொத்தனை யேவிக் கிணறு கட்டும்படி பண்ணுவிக்கச்சொல்ல, அந்தக் கொத்தனும் தேஸிகன் முன்பே வந்து "செவ்வையாய் ஒரு கிணற்றைக் கட்டினீராகில் உம்மை ஒருவரும் ஜயிக்கமாட்டார்கள், இல்லாவிடில் உமக்கிந்த பிருது தகாது" என்று சொல்ல, தேஸிகனும் இதபரிஹாரியமில்லா விடிலும் துர்போதநத்தாலே இவன்வந்து இப்படிச் சொல்லுகிறு னுகையால் இத்தைச் செய்து இவனை நிரஸித்தால் இனி ஒரு துஷ்டருக்கும் அவகாஸமுண்டாகாதென்றும், துர்போதகர்களுக்கும் சொன்னத்தைச் செய்யும் வல்லமை இவருக்கே உண்டென்று அறி விப்பிக்கைக்காகவும் தாமே தம் திருமாளிகையில் ஸ்ரீ ஹயக்ரீவருக் கென்று ஒரு கிணற்றை அந்தக் கொத்தன் கொடுத்த கற்களாலே கட்டிக்காட்ட, கொத்தனும் பக்நனாய்த் திருவடிகளிலே விழுந்து துர்ப்போதநத்தாலே கெட்டுப்போன அடியேனை அடிமை கொள்ள

1. ஏற்று

வேணும் என்று விண்ணப்பஞ் செய்ய, தேசிகனும் அவனுக்குத் திருவிலச்சினையும் ப்ரஸாதித்தருளி இனி சாஸ்த்ரவிஷயம் தவிர மற்ற விஷயங்களில் வந்த துஷ்டர்களை சிக்ஷித்து அடிமைப் படும்படி பண்ணக்கடவ என்று நியமித்தருளிச் சிலநாள் கழிந்தவாறே தெய்வநாயகன் நியமநம் பெற்று விடைகொண்டு வீரநாராயண புரத்தில்,

“ நாதேந முநிநா தேந பவேயம் நாதவாநஹம் |
யஸ்ய நைகமிகந் தத்வம் ஹஸ்தாமலகதாங் கதம் || ”

என்று ஸ்ரீமந்நாதமுநிகளைத் திருவடிதொழுது நிற்க, நாதமுநிகளும் நாம் யோகதசையில் ஆழ்வாரை ஸாக்ஷாத்கரித்துப் பெற்ற திருமந்த்ர மந்த்ரார்த்தங்களையும் திருமந்த்ரார்த்தங்களான வேதாந்தங்களையும் ஸதாசார்ய ஸம்ப்ரதாயத்தாலே நீரும் பெற்று அந்த விசேஷார்த்தங்களையும் இப்போது ப்ரவசநம் பண்ணிக்கொண்டு பின்னோர்களும் உஜ்ஜீவிக்கும்படிக்கு க்ரந்தங்களைச் செய்து மஹோபகாரம் பண்ணினீர்” என்று போர உகந்தருளி “நம்மாழ்வார் நியமநத்தைத் தலைக் கட்டக்கடவீர்” என்று அர்ச்சகமுகேந அருளிச்செய்து திருமாலை முதலானவைகளையும் ப்ரஸாதித்தருள, தேசிகனும் அந்த வரிசைகளைப் பெற்று,

“ அத்ர பாத்ர சாபி நித்யம் யதீயசரணௌ சரணம் மதீயம்”

என்று அநுஸந்தித்துக் கண்ணனையுந் திருவடி தொழுது விடைகொண்டு தேராரும் நெடுவீதித் திருவாலிநகராளும் எம்பெருமானையும் திருமங்கையாழ்வாரையும் திருவடிதொழுது நிற்க, திருமங்கையாழ்வாரும் “திருமந்த்ரத்தில் நமச்சப்தார்த்தமான த்வயத்தில் சரணாகதியை ப்ரகாசிப்பிக்கிற விசேஷார்த்தங்களை யெல்லாம் ப்ரபந்தங்களாலே வெளியிட்ட நம்மைக் காட்டிலும் அவ்வர்த்தங்களை யெல்லாம் கத்ய ருபேண அருளிச்செய்த உடையவருடைய திருவுள்ளப்படிக்கு அவர் நியமநத்தாலே பல க்ரந்தங்களைச் செய்து உலகத்தையும் திருத்தி சரணாகதி சாஸ்த்ரத்தை ப்ரகாசிப்பித்த உமக்குத் தகுந்த பாரிதோஷிகம் ஒன்றுமில்லை” என்று போர உகந்தருளி திருமாலை முதலானவைகளையும் ப்ரஸாதிக்க, தேசிகனும் அவைகளைப் பெற்று க்ருதார்த்தராய் விடைகொண்டு கோயிலேற எழுந்தருளி ஸ்ரீரங்கநாச்சியாரையும் பெரியபெருமாளையும்

திருவடிதொழுது பெருங்கூட்டத்து முதலிகளோடே ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்கிற நாளையிலே தேசாந்தரத்தில் அநேக ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்த வைபவத்தைக் கண்டும் கேட்டும் வந்து ஆஸ்ரயித்து ஸ்ரீபாஷ்யாதிகளை அதிகரித்தார்கள்.

சில மிதஜ்ஞ ஸாதுக்கள் தங்களுக்கு ஸுலபமாய் அறியும்படி தத்வ ஹித புருஷார்த்தங்களை ஸங்க்ரஹித்து ப்ரஸாதித்தருள வேணும் என்று ப்ரார்த்திக்க, தேசிகனும் அப்படியே திருவுள்ளம் பற்றிப் புருஷார்த்தத்தை அடைகைக்கு உபாயம் வேண்டுகையாலும், உபாயத்தை அறிகைக்குத் தத்வஜ்ஞாநம் வேண்டுகையாலும், தத்வஜ்ஞாநம் உண்டாகைக்கு ஸதாசார்யன் வேண்டுகையாலும், ஸதாசார்யனென்று அறிகைக்கு சாஸ்த்ரமூலத்வ ஸம்ப்ரதிபத்தியுண்டான ஸம்ப்ரதாயசுத்தி அறியவேண்டுகையாலும்,

"ஆபாத சூடமநபாயிநி தர்சநேஸ்மிந்"

என்கிறபடியே கோதற்ற ஸம்ப்ரதாய ப்ரகாசகமாக ஸம்ப்ரதாய பரிசுத்தி யென்கிற ரஹஸ்யத்தை முன்பு செய்தருளி, பின்பு க்ரமமாக ரஹஸ்யங்களைச் செய்யக் கோலித் தத்வபதவி, ரஹஸ்யபதவி, தத்வ நவநீதம், தத்வமாத்ருகை, ரஹஸ்ய நவநீதம், ரஹஸ்ய மாத்ருகை தத்வரத்நாவலீ, தத்வரத்நாவலீ ப்ரதிபாத்ய ஸங்க்ரஹம், ரஹஸ்யரத்நாவலி, ரஹஸ்ய ரத்நாவலீ ஹ்ருதயம், தத்வத்ரயசுளகம், சாரஸங்க்ஷேபம், ஸாரஸாரம், அபயப்ரதாநஸாரம், தத்வசிகாமணி, ரஹஸ்ய சிகாமணி, அஞ்ஜலி வைபவம், ப்ரதாநசதகம், உபகார ஸங்க்ரஹம், ஸாரஸங்க்ரஹம், பரமபத ஸோபநம் ஆகிய இந்த ரஹஸ்யங்களைச் செய்தருளி அவர்களுக்கு ப்ரஸாதித்தருளி உடையவர் திருவுள்ளக் கருத்தைப் பல ப்ரபந்தங்களாலும் வெளியிட்டுக் கொண்டு ராமாநுஜஸித்தாந்தம் இவராலே ஸுப்ரதிஷ்டமாயிற்று என்று ஸத்துக்களாலே கொண்டாடப்பட்டு ஜ்ஞாந பக்தி வைராக்யங்கள் இப்படி ஒரு வடிவு கொண்டிருக்கிறதென்று எல்லாரும் அறியும்படி அபிகமநோபாதாநேஜ்யா ஸ்வாத்யாய யோக ரூப பகவத் கைங்கர்யங்களையும் பாகவதாசார்யகைங்கர்யங்களையும் க்ரமமாக அநுஷ்டித்துக் கொண்டு இவை ஸுப்ரதிஷ்டிதமாகும்படி பரமதநிரஸந புரஸ்ஸரமாக ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக் கொண்டு எழுந்தருளியிருந்தார். இவ்வர்த்தங்களை,

"ஸர்வார்தஸித்திஶ் ஶததூஷணீ ச
த்வே கேட ஶஸ்த்ரே கதகாக்ரகாநாம் |
ஆத்யேந தத்ர க்ரியதே ஸ்வரக்ஷா
ப்ரத்யர்திபங்க: கலஹேநந்யதஸ் ஸ்யாத் ||

அநந்யஸாதாரண சாதுரீ ச
காவ்யாதிஷு ப்ரஹ்மவிதக்ரணீத்வம் |
ததாஷ்டபாஷா கவிதாபடுத்வம்
ஸங்கல்ப ஸூர்யோதய த்ருஶ்யமஸ்ய ||

அஹஹ ஶங்கர யாதவ பாஸ்கர-
க்ரதித துர்மத துர்மதவாதிநாம் |
கலகல: கவிதார்கிககேஸரி-
ப்ரதித தூஷணிகாஶ்ரவணாவதி: ||

யதுக்தயோ யதிபதி தந்த்ர தீபிகா:
ஶ்லக்ஷ்ணாஸ்ஸரஸதமாஸ்ஸதாம் மதா: |
ஸுமத்ஸரை ரபி ஸததம் பரோக்ஷத:
ப்ரஶம்ஸிதா: பரிகலயேத் ஸ நஶ் ஶ்ரியம் ||

தாந்திஶ்ஶாந்திஶ் ஶுசித்வம் விஷயவிஜயிதா
தீரதா நிஸ்ஸ்ப்ருஹத்வம்
ஶேஷத்வம் ஸ்ரீஶதத்தா ஸஜநவிஷயகம்
பாரதந்த்ர்யஞ் ச தத்ர |
அக்ஷேபத்வம் படுத்வம் ம்ருதுஸமவஶிதா
நிர்பரத்வாநஸூயே
யஸ்மிந்நாஜாநஸித்தம் ஸ கலு விஜயதே
வேங்கடாசார்யவர்ய: ||

யதீயசரிதம் ஸதாம் ஸுசரிதவ்யவஸ்தாபகம்
யதீயவசநம் பரம் ஸகலஸம்ஶயோந்மூலநம் |
யதீயகருணாகதிஸ் ஸகலதர்மஶூந்யாத்மநாம்
ஸ நஶ் ஶரணமஸ்த்வஸௌ ஸகலதந்த்ர நிர்வாஹக: ||"

என்று ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் அருளிச்செய்தார்.

பின்பு வேதாந்த தேஶிகன் திருவடிகளிலே "ஆத்யம் யதீந்த்ரஶிஷ்யாணாம்" என்கிற கூரத்தாழ்வானைப் போலே முதலிலே ஆஶ்ரயித்து ஸகலஶாஸ்த்ரங்களையும் அதிகரித்து அதிமர்த்தராய்



திருவஹீந்திரபுரம் திவ்யதேசத்தில் ஸேவைதரும்

ஸ்ரீ ஹேமாப்ஜநாயகித்தாயார்

(ஸ்ரீசெங்கமலவல்லிநாச்சியார்)



திருவஹீந்திரபுரம் திவ்யதேசத்தில் ஸேவைதரும்
**ஸ்ரீ தேவநாதன்**
(அடியவர்க்கு மெய்யன்)

"ஹஸ்தீஶம் லோகவிக்யாதம் கௌண்டிந்யம் விதுஷாம் வரம் |
ராமாநுஜார்யஸித்தாந்த ஸ்தாபநாசார்ய மாஶ்ரயே ||"

என்னும்படி இருந்துள்ள வீரவல்லிப் பேரருளாளையன் அதிவிரக்தராய் ஸந்ந்யஸிக்கவேணும் என்று ப்ரார்த்திக்க, வேதாந்த தேஶிகனும் ப்ரேஷண மந்த்ரோபதேஶ புரஸ்ஸரமாக ஸந்ந்யஸிப்பித்துப் பேரருளாளஜீயர் என்று திருநாமம் ப்ரஸாதித்தருளினர். வீரவல்லி க்ருஷ்ணமாசார்யருக்கும் ஸந்ந்யாஸம் ப்ரஸாதித்து வெண்ணெய்க் கூத்தஜீயர் என்றும், கொமாண்டூரப்பைக்கும் ஸந்ந்யாஸம் ப்ரஸாதித்து ப்ராபாகர ஜீயர் என்றும் திருநாமம் ப்ரஸாதித்தருளினர்.

பின்பு பேரருளாளஜீயர் முதலான ஜீயர்களாயும், க்ருஹஸ்தர்களாயுமிருந்துள்ள முதலிகளுக்கு வேதாந்தங்களையும் ரஹஸ்யங்களையும் ப்ரஸாதித்துக் கொண்டிருக்கும்போது இவருடைய ஆசார்யத்வ பூர்த்தியைக்கண்டு, "ஸ்ரீபாஷ்யம் விரசய்ய ஸம்யமிவர:" என்கிறபடியே, உடையவரவதாரமன்றோ இவர்? என்றறிந்து பிள்ளைலோகாசார்யரும் ஸ்ரீபாஷ்யத்தை அதிகரித்து ரஹஸ்யார்த்தங்களையும் பல்காலங் கேட்டு அந்த ப்ரபாவத்தை,

" சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்
ஓரொன்றுதானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு"

என்று அருளிச்செய்தார். இப்படி [1]அநவரத பாஷ்ய ப்ரவசநத்தை "த்ரிம்ஶத்வாரம் ஶ்ராவித ஶாரீரக பாஷ்ய:" என்று தாமே அருளிச் செய்தார். இப்படிக்கு வேதாந்தாசார்யராயும் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராயும் கவிதார்க்கிகஸிம்ஹராயும் கொண்டாடும்படி யிருக்கையாலே யன்றோ பிள்ளைலோகாசார்யர் ஸ்ரீபாஷ்யத்தை அதிகரித்தார்! அப்படியிருக்க, இவருக்கு ஒரு குறை வுண்டாக்க வேண்டும் என்று அழகிய மணவாளப் பெருமாள் நயினர் முதலான சில [2]அஸூயர்கள் நம் தேஶிகனை வாதத்துக்கழைக்க, தேஶிகனும்

" யதீஶ்வர ஸரஸ்வதீ ஸுரபிதாஶயாநாம் ஸதாம்
வஹாமி சரணாம்புஜம் ப்ரணதிஶாலிநா மௌளிநா ||"

1. இடைவிடாது 2. பொறாமையுள்ளவர்கள்.

என்றும், ஸ்ரீவைஷ்ணவர்களோடே வாதம் பண்ணுவதில்லையென்றும் அருளிச்செய்து வாராமலிருக்க, அஸாமர்த்யத்தாலே வாராமல் இருக்கிறார் என்று தேசிகன் திருமாளிகை வாசலில் தங்கள் பாதரக்ஷைகளைக் கட்டி அருகே பார்த்துக் கொண்டிருக்க, தேசிகனும் கார்யவசத்தாலே புறப்படும்போது அந்தப் பாதரக்ஷைகள் தம் ஶிரஸிலே பட, தேசிகனும்,

"கர்மாவலம்பகா: கேசித் கேசிஜ்ஜ்ஞாநாவலம்பகா: |
வயந்து ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பகா: ||"

என்று அநுஸந்தித்தருளி நிர்மலராயிருக்க, அவர்களும் இந்த ஆஜாநஸித்தமான ஆத்மகுணத்தில் ஈடுபட்டு அபராத க்ஷாமணம் பண்ணிக்கொண்டார்கள்.

பின்பு ஒருநாள் பிதாவான அநந்தஸூரிகளுடைய திருவத்யயநத்தில், உடையவருக்கு விஷஸஹிதமான பிக்ஷையிட்டாற் போலவும் சக்ரவர்த்தித் திருமகனுக்குக் கூனி தீங்கு நினைத்தாற் போலவும் கண்ணனுக்குக் கம்ஸன் தீங்கு நினைத்தாற் போலவும் தேசிகனுடைய வைபவம் ப்ரஸித்தமாகும்படிச் சில அஸூயர்கள் தீங்கு உண்டாக்கவேண்டுமென்று துராலோசனைபண்ணி நிமந்த்ரித ஸ்ரீவைஷ்ணவர்களைச் சில த்ரவ்யங்களைக் கொடுத்தும் அதற்கு அங்கீகாரமில்லாமலிருக்க, ப்ரமமுண்டாகும்படி சில மாயப் பொடிகளைத் தூவி அவர்கள் புஜிக்கும்படிக்கும் பண்ணுவித்துப் பேரருளாளசீயர் முதலான பெருங்கூட்டத்து முதலிகளுக்குத் தேஹோபாதிகளும் ப்ரமமும் உண்டாகும்படிக்கும் பண்ணுவித்து அருகே இருந்து, என் செய்கிறார்? என்று பார்த்துக்கொண்டிருக்க, வேதாந்ததேசிகனும்,

"பயம் பயாநாமபஹாரிணி ஸ்திதே
மநஸ்யநந்தே மம குத்ர திஷ்டதி |"

என்றும்,

"ஸ த்வாஸக்தமதி: க்ருஷ்ணே தஶ்யமாநோ மஹோரகை:"
ந விவேதாத்மநோ காத்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாத ஸம்ஸ்தித:"

என்றும் சொல்லுகிற ப்ரஹ்லாதாழ்வானுடைய [1]அத்யவஸாய

1. உறுதி.

விஶேஷத்தையுடையவராகையாலும் ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே மஹாமந்த்ரம் கைபுகுந்திருக்கையால் க்ஷுத்ரமந்த்ரங்களுக்கு ஒருகாலும் ப்ரவேஶம் கொடாமலிருக்கும்படி பண்ணின ஸ்ரீ ஹயக்ரீவ ப்ரஸாதத்தாலும் எப்போதும் தெளிந்தவராயிருக்கையாலே "மத்யாஹ்நமயத்தில் ஶ்ராத்தவிக்நம் பண்ணவைத்து எம்பெருமான் ஶோதிக்க நினைத்தான்" என்று அறிந்து தாமும் நீராடி, நித்ய கைங்கர்யங்களையும் செய்து குலாராதநமான பேரருளாளனையும் ஶிவப்நலப்தரான ஸ்ரீ ஹயக்ரீவரையும் விஶேஷாராதநம் கொண்டருளப்பண்ணுவித்து ஶ்ராத்த ஹோமாதிகளையும் செய்தருளி இலைத் தளிகையில் இன்னடிசில் கறியமுது திருப்பண்ணியாரம் முதலானவைகளையும் பரிமாறிக் கூர்ச்சாவாஹிதர்களான தேவபித்ரு விஷ்ணுக்களுக்குத் தாநாதிகளைப் பண்ணி தேவ பித்ரு வைஷ்ணவ ஸூக்தங்களையும் ஜபித்துக்கொண்டிருந்த பின்பு. இலைத் தளிகைகளை மாற்றும்போது இன்னடிசில் முதலானவைகளை [1]ஸாவஶேஷங்களாக அமுதுசெய்திருக்கக் கண்டு, பகவதநுக்ரஹத்தை ஸந்தோஷித்துக் கூர்ச்சாவாஹித தேவ பித்ரு விஷ்ணூத்வாஸநத்தையும் பிண்டதாநங்களோடே ஶ்ராத்த ஸமாப்தியையும் பண்ணி தீர்த்தாதிகளை ஸ்வீகரித்துக்கொண்டிருக்க, அருகே பார்த்துக்கொண்டிருந்த அஸூயர்களும் மூன்று ஸ்ரீவைஷ்ணவர்கள் அபூர்வமாய் வந்து மத்யாஹ்நத்தில் எழுந்தருளி எண்ணெய்க் காப்புச் சாத்திக்கொண்டு நீராடி ஶ்ராத்தத்தில் வரிக்கப்பட்டு அமுதுசெய்து உத்வாஸநம் பண்ணினவாறே வாசலிலே அடைக்காயமுது செய்து கோயிலை ப்ரதக்ஷிணமாக எழுந்தருளிப் போகக் கண்டு, தேஶிகன் ஸந்நிதியில் வந்து இப்படி மூன்று திருநாமங்கள் எழுந்தருளி நடத்திப் போந்தமையை விண்ணப்பஞ் செய்து அவர்களார்? என்று கேட்க, அப்படியோ? கோயிற் றிருமலை பெருமாள் கோயில் எம்பெருமான்கள் விஶேஷ கடாக்ஷம் பண்ணினார்கள் என்று உள்மகிழ்ந்து தாமும் நடத்திப்போந்த வ்ருத்தாந்தத்தையும் அருளிச்செய்ய, அவர்களும் ஆஶ்சர்யப்பட்டு அபசார க்ஷாமணம் பண்ணிக்கொண்டு உள்நடுங்கியிருக்க, அந்த க்ஷுத்ரமும் நிவ்ருத்தமாய் நிமந்த்ரித ஸ்ரீவைஷ்ணவர்களும் உள் நடுங்கி க்ஷாமணம் பண்ணிக்கொள்ள, முதலிகளும் ஸ்வஸ்தர்களாகத்

1. மிகுதியிருக்கும்படி.

தெளிந்து தீர்த்தாதிகளை ஸ்வீகரிக்க, வேதாந்த தேசிகனும் இன்புறு மிவ்விளையாட்டுடையான் எம்பெருமான் என்று விஸ்மித ராய் நித்ய கைங்கர்யங்களையும் ஸித்தாந்தப் ப்ரவசநத்தையும் பண்ணிக்கொண்டெழுந்தருளியிருந்தார்.

பின்பு, ஒருநாள் வேதாந்த தேசிகனும் ஏகாதசியில் பெரிய பெருமாளைத் திருவடிதொழுது நிற்கும்போது சிலர் அர்ச்சகருக்கு த்ரவ்யங்களைக் கொடுத்துத் தீர்த்தாதிகளுடன் [1]முத்காந்நத்தையும் கொடுக்கும்படி செய்விக்க, அர்ச்சகரும் அப்படியே செய்ய, தேசிகனும் தீர்த்தாதிகளை ஸ்வீகரித்து முத்காந்நத்தையும் ஸிரஸா வஹித்து,

" ஸ்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தா முல்லங்க்ய வர்ததே |
ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ: || "

என்று முற்காலத்தில் நியமித்தருளித்து; இப்போது அதற்கு விருத்த மாக இப்படிக்கு நியமித்தருளித்து; என் செய்யக்கடவது? என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் ஓரர்ச்சகனிடத்தில் ஆவேசித்து இப்படிச் செய்த அர்ச்சகரைச் சிக்ஷித்து நாமிப்படிக்கு நியமிக்க வில்லை என்றருளிச் செய்ய, அந்த அர்ச்சகரும் த்ரவ்யலோபத்தாலே செய்தேன் என்று க்ஷாமணம் பண்ணிக்கொள்ள, இத்தை யெல் லாரும் பார்த்து இத்தேசிகன் அநுஷ்டாநமே பெரியபெருமாள் திருவுள்ளம் என்றறிந்து ப்ரவணராய்ப் போந்தார்கள்.

பின்பு ஒருநாள் சிலர் பக்தியாலே [2]அமுதுபடியோடே பணங் களைக் கலந்து உபாதாநமாக ஸமர்ப்பிக்க, அவைகளைத் தேவிகள் ஸோதித்து எடுக்கும்போது, இதென்ன? என்று கேட்க, தேசிகனும் அவைகளைப் புழுக்கள் என்று கோலாலே தள்ளிவிட, அத்தைப் பார்த்து இது அவதாரவிஸேஷமாகையாலே இப்படிக் கிருப்பது என்று போர உகந்தார்கள்.

பின்பு,

" யஸ்ய விக்ரம மாஸாத்ய ராக்ஷஸா நிதநங் கதா: |
தம் மந்யே ராகவம் வீரம் நாராயண மநாமயம் || "

என்று புடையுண்ட காலத்திலறிந்து பின்பு மறந்த ராவணாதிகளைப்

1. பொங்கல் 2. அரிசி.

போலே இருந்துள்ள மதாந்தரஸ்தர்களோடே வாசியற இந்தஸ் ஸித்தாந்தத்திலே ஜ்ஞாதாக்களாயிருக்கிற அழகிய மணவாளப் பெருமாள் நயினார் முதலானாரும் நம் தேசிகன் வைபவத்தை ஸஹியாமல் அழகிய மணவாளன் திருவோலக்கத்தில் இன்று ராத்ரி யில் ஆயிரம் ச்லோகம் பண்ணினவர்களுக்கே கவிதார்க்கிகஸிம்ஹ ரென்கிற பிருது சொல்லக்கடவது என்று தேசிகரை நோக்கிச் சொல்ல, அழகிய மணவாளனும் ஓரர்ச்சகனிடத்தில் ஆவேசித்து "இன்று ராத்ரியில் ஆயிரம் ச்லோகம் பண்ணினவரைக் கவிதார்க் கிகஸிம்ஹரென்று சொல்லக்கடவது" என்று இருவருக்கும் நியமித் தருள, அழகிய மணவாளப் பெருமாள் நயினாரும், பதகமலஸஹஸ்ரம் பண்ணுகிறோம் என்று சொல்லிப் போய் முன்னூறு ச்லோகம் பண்ண, போது விடிந்தது; தேசிகனும், 'பாதுகாஸஹஸ்ரம் விண்ணப்பஞ் செய்கிறேன்' என்று திருமாளிகையில் எழுந்தருளி ப்ரதமயாமத்தில் நித்ய கைங்கர்யங்களையும் செய்தருளி த்விதீய யாமத்தில் பாதுகாஸஹஸ்ரத்தைத் தலைக்கட்டி, த்ருதீயயாமத்தில் திருக்கண் வளர்ந்தருளி, சதுர்த்தயாமம் முதலாக நித்யகைங்கர்யங் களையும் செய்து அழகிய மணவாளனைத் திருவடி தொழுது திரு வோலக்கத்தில் நிற்க, அழகிய மணவாளப் பெருமாள் நயினாரும் வந்து நிற்க, ஆயிரம் ச்லோகங்களையும் விண்ணப்பஞ் செய்யும்படி இருவருக்கும் அருளப்பாடிட்டருள, தேசிகனும் பாதுகாஸஹஸ் ரத்தை விண்ணப்பஞ்செய்ய, அழகிய மணவாளப் பெருமாள் நயினாரும் ஆயிரம் [1]தலைக்கட்டாமையாலே அதோமுகராயிருக்க, பெருமாளும் "கவிதார்க்கிகஸிம்ஹர்" என்று அருளப்பாடிட்டருளி வரிசைகளையும் ப்ரஸாதிக்க, தேசிகனும் அவ்வரிசைகளைப் பெற்று உள்மகிழ்ந்தும் நயினார் திருவுள்ளமுகக்கும்படி,

> " ஸூதே ஸூகரயுவதிஸ் ஸுதஶத மத்யந்த துர்பரம் ஜடிதி |
> கரிணீ சிராய ஸூதே ஸகல மஹீபால லாளிதம் களபம் ||"

என்று நைச்யாநுஸந்தாநம்பண்ண, அத்தைக்கண்டு பெருமாளும் பெரியோர்களும் திருவுள்ளமுகந்தருள, தேசிகனும் ராமாநுஜ ஸித்தாந்தத்தில் அஸூயையாலே ஒருவரும் கெடலாகாது என்று திருவுள்ளம் பற்றி,

1. பூர்த்தி செய்யாமையாலே.

" ஆபாதசூடமநபாயிநி தர்ஶநேஸ்மிந்-
நாஶாஸநீயமபரம் ந விபக்ஷஹேதோ: |
ஆபாதஶாந்தி மதுராந் புநரஸ்மதீயா-
நந்யோந்யவைர ஜநநீ விஜஹாத்வஸூயா ||"

என்று விண்ணப்பஞ்செய்து ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக் கொண்டிருக்க, நயினார் முதலானோரும் தேஶிகன் திருவடிகளிலே ப்ரவணராயிருந்தார்கள்.

பின்பு ஒரு ராத்ரியில் நம் நியமநத்தைத் தலைக்கட்டக்கடவீர் என்று நம்மாழ்வார் ஸ்வப்நம் காட்டியருள, தேஶிகனும் திருக் குருகைப்பிரான் பிள்ளான் உடையவர் நியமநத்தாலே செய்தருளின பகவத் விஷயமான ஆறுயிரப்படிக்கு அப்பிள்ளார் உபந்யாஸத்தைக் கொண்டு வ்யாக்யாநமாக எழுபத்துநாலாயிரப்படி செய்யக்கோலி அவதாரிகையில் [1]ஆநுஷங்கிகமாகத் திருமந்த்ரார்த்தமான நாலாயிர ப்ரபந்தங்களுடைய தாத்பர்யத்தை ஸங்க்ரஹமாக உபபாதித்துப் பின்பு ஆறுயிரப்படி வ்யாக்யாநமாகத் திருவாய்மொழி அர்த்தத்தை ப்ரதிபாதித்து எழுபத்துநாலாயிரப்படியைத் தலைக்கட்டி அதற்கு நாலாயிரக்கருத்து என்று திருநாமம் சாற்றி, அமலனாதி பிரானுக்கு முநிவாஹநபோகம் என்று ஒரு வ்யாக்யாநமும், கண்ணிநுண்சிறுத்தாம்புக்கு மதுரகவிஹ்ருதயம் என்று ஒரு வ்யாக்யாநமும் செய்தருளி, ஸம்ஸ்க்ருதத்தால் த்ரமிடோபநிஷத்ஸாரமும், த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளியும் செய்தருளி, செந்தமிழ்ப் பாட்டுக்களால் திருமந்த்ரச்சுருக்கு, த்வயச்சுருக்கு, சரமஶ்லோகச் சுருக்கு, கீதார்த்தஸங்க்ரஹச்சுருக்கு, கீதையில் சொன்ன ஆஹார ஶுத்தியைச் சொல்லுகிற ஆஹாரநியமப் பாட்டுக்களையும் செய்தருளி, அவைகளை முதலிகளுக்குப் ப்ரஸாதித்துக் கொண்டு, நம்மாழ்வார் நாதமுநிகள் நியமநத்தைத் தலைக்கட்டி, அவர்கள் திருவுள்ளத்தை உகப்பித்து எழுந்தருளியிருக்கிற காலத்திலே, வட தேஶத்திலே தேஶிகன் திருவடிகளாலே திருத்தப்பட்டவனாய்ப் பாரமைகாந்த்ய தர்மத்தில் ஊற்றமுடையவனாயிருக்கிற ஸர்வஜ்ஞ சிங்கப்ப நாயகன் சில ஸ்ரீவைஷ்ணவர்களை அனுப்பித் தனக்கு

1. நாம் முக்யமாக ஒரு காரியம் செய்ய, அத்துடன் மற்றொரு காரியமும் நடப்பதை ஆநுஷங்கிகமென்பர்.

விஶேஷார்த்தங்களை ப்ரஸாதித்தருளவேணும் என்று ப்ரார்த்திக்க, தேஶிகனும் அவனுடைய சித்த ஶுத்தியையும் அறிந்து ஹிதோப தேஶமாக ஸுபாஷித நீவியையும், தத்வ ஸந்தேஶத்தையும், ரஹஸ்ய ஸந்தேஶத்தையும், ரஹஸ்ய ஸந்தேஶ விவரணத்தையும் செய்தருளி அவைகளை ப்ரஸாதித்து,

"ஸத்வஸ்தாந் நிப்ருதம் ப்ரஸாதய ஸதாம்
வ்ருத்திம் வ்யவஸ்தாபய
த்ரஸ்யப்ரஹ்மவிதாகஸஸ் த்ருணமிவ
த்ரைவர்கிகாந் பாவய |
நித்யே ஶேஷிணி நிக்ஷிபந் நிஜபரம்
ஸர்வம் ஸஹே ஶ்ரீஜகே
தர்மம் தாரய சாதகஸ்ய குஶலிந்
தாராதரைகாந்திந: ||"

என்று நியமித்தருளி அனுப்பிக்க, ஸர்வஜ்ஞ சிங்கப்ப நாயகனும் ஸமஸ்த பிருதுகளோடே எதிர்கொண்டு ஸ்ரீமுகத்தை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு பாரமைகாந்த்ய நிஷ்டனாய் க்ருதக்ருத்யனாய் தேஶிகன் திருவடிகளிலே நித்யபக்தனாயிருந்தான்.

இப்படிக்கொத்த தேஶிகன் விஷயத்தில் நயினார் முதலானார் பண்ணின [1]அதிக்ஷேபாதிகளை,

"ஸர்வதந்த்ர தூர்வஹஸ்ய வேங்கடேஶதீமத:
குர்வதேவமாநநாந் து கேசநாதுநோத்பவா: |
ஹந்த ஹந்த ராமக்ருஷ்ண தூஷணாபிதாயிநாம்
கிந்நு சித்ர மத்ர சைத்ய ராவணாநுஸாரிணாம் ||"

என்று ப்ரதிவாதிபயங்கரம் அண்ணனும் அருளிச் செய்தார்.

## தேசிகன் நயினாராசார்யர் வைபவங்கள்

ஶ்ராவணே மாஸி ரோஹிண்யாம் ஜாதம் வேங்கடதேஶிகாத் |
விஶ்வாமித்ராந்வயாப்தீந்தும் வரதார்ய மஹம் பஜே ||

இப்படி ஆஸேதுஹிமாசலம் ப்ரஸித்தராய் பகவத் பாகவதா சார்ய பரிபூர்ண கடாக்ஷ பாத்ரராயிருக்கிற வேதாந்த தேஶிகனுக்குப் பேரருளாளர் உமக்கு நம்முடைய அம்ஶமாய் ஒரு புத்ரருண்டா

1. அவமதிப்புகளை.

வர். அவருக்கு நம்முடைய திருநாமத்தைச்சாற்றும் என்றும், "தர்ம ப்ரஜார்தம் வ்ருணீமஹே" என்று வரித்தத்தை ஸபலமாக்கக்கடவீர் என்றும் ஸ்வப்நம் காட்டியருள, தேசிகனும் தம் திருவுள்ளத்திற் கநுகுணமாயில்லாத பத்நியை த்யஜித்து ஸந்ந்யஸித்தருளின உடையவர் போலன்றிக்கே தமக்கு ஸமாநாத்மகுண [1]பௌஷ்கல்ய முடையதர்ம பத்நியினிடத்திலும் முப்பத்திரண்டு ஸம்வத்ஸரம் [2]விஷய விரக்தரா யிருக்கையாலே பின்பு பேரருளாளர் நியமநப் படிக்கு ஒரு ஶுபதிநத்தில் நிஷேகம் செய்தருள, தேசிகன் தேவி களும் அன்றுமுதல் கர்பத்தைத் தரித்துக் கொண்டிருக்க, கலி நாலாயிரத்து நானூற்றுப் பதினெட்டாவதான நளவர்ஷத்தில் ஆவணி மாஸத்தில் ரோஹிணீ நக்ஷத்ரத்தில் ஒரு குமாரரவதரிக்க, அவருக்குத் தேசிகனும் ஜாதகர்மம் பண்ணி வரதனென்று திரு நாமம் சார்த்தியருளி அக்ஷராரம்பம் முதலாக வேத வேதாங்கங்க ளோடே திருமந்த்ர மந்த்ரார்த்தங்களையும் ஸகல ஶாஸ்த்ரங்களையும் தாமே ப்ரஸாதித்தருள, அந்த வரதாசார்யரும் பேரருளாளர் அம்ஶ மாகையாலே "பிதுஶ்ஶதகுணம் புத்ர:" என்னும்படி அதிமேதாவி யாயும் [3]ஸாராம்ஶவேதநத்தில் அதி நிபுணராயுமிருந்துகொண்டு ஸமஸ்த விஶேஷார்த்தங்களையும் பெற்றுக் கலியுகத்தில், நாலா யிரத்து நானூற்று முப்பதாவதான விடவ வர்ஷம் சித்திரை மாஸம் புநர்வஸு நக்ஷத்ரத்தில் ஸ்ரீபாஷ்யத்தை அதிகரிக்கும்போது, முன்பு பேரருளாளஜீயர் விண்ணப்பஞ் செய்த "நம: பதமிதம் பூயாத்" என்கிற தனியனோடே தாமும்,

"ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்கிககேஸரீ |
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி ||"

என்று ஒரு தனியனை விண்ணப்பஞ் செய்து சேர்த்து அநு ஸந்திக்க, அத்தை ஸுதர்ஶந பட்டர் முதலான பெரியோர்கள் இனி இத்தனியனையே அநுஸந்தித்து விஶேஷார்த்தங்களைக்கேட்கவேண் டும் என்று நியமித்தருள, தேசிகனும் இது பேரருளாளன் நியமந விஶேஷமன்றோ? என்று ஸுதர்ஶநபட்டர் நியமநத்தையும் வரதா சார்யரையும் போர உகந்தருள, இத்தைக் கண்டு பேரருளாள ஜீயர் முதலான முதலிகளும் கூரத்தாழ்வான் முதலானோர் உடையவருக்கு

1. நிறைவு 2. உலகப் பற்றில்லாதவராய் 3. ஸாராம்சத்தை அறிதலில்.

ஜ்ஞான புத்ரரான திருக்குருகைப் பிரான் பிள்ளானிடத்தில் போலே ஔரஸ புத்ரரான வரதாசார்யரிடத்தில் அதிப்ரவணராயிருந் தார்கள்.

பின்பு ஒருகால் தேசிகனும் தம் திருமாளிகை வாசலில் க்ரந் தாவலோகநம் பண்ணிக்கொண்டிருக்க, கந்தாடை லக்ஷ்மணாசார் யரும் பஹு சிஷ்யர்களுடனே தேசிகன் எழுந்தருளியிருக்கிற திருவீதி வழியாக எழுந்தருள, க்ரந்தாவலோகந த்வரையாலே தேசிகனும் பாராமலிருக்க, அவர் சிஷ்யர்களான சாற்றுத வைஷ்ணவர்கள் தேசிகன் திருவடிகளைப் பிடித்து இழுத்து விட, தேசிகனும்

"க்நந்தம் சபந்தம் பருஷம் வதந்தம்
யோ ப்ராஹ்மணம் ந ப்ரணமேத் யதாவத் |
ஸ பாபக்ருத் ப்ரஹ்ம தவாக்நிதக்தோ
வத்யச்ச தண்ட்யச்ச ந சாஸ்மதீய: ||"

என்கிற பகவத் வாக்யத்தை நினைத்து அருகே இருந்த எம்பார் திரு மாளிகையைக் கடந்து எழுந்தருளுகிற கந்தாடை லக்ஷ்மணாசார் யரை, அஜ்ஞாநத்தால் வந்த அடியேன் அபராதத்தை க்ஷமித்தருள வேணும் என்று தண்டன் ஸமர்ப்பித்து [1]நிரபராதியை இப்படிக்குச் செய்யலாமோ? என்று வந்த அஹந்தையைக் குறித்து,

"அஹந்தேநாஹந்தே விஹரணபதம் தேசிககிரா
மவதந்தேநஸ் ஸ்வாந்தே ஸபதி கத ஸந்தேஹவிஷயா: |
அநாயாஸாயாஸாமஹிபதி சயாஸா பகவதீ
தராதாரா தாராதர நிகர ஸாதாரணருசி: ||"

என்று தந்திருவுள்ளத்தைப் பார்த்து அருளிச்செய்து, முன்பு பட்டர் முனிந்து கோயிலை விட்டுத் திருக்கோட்டியூரில் எழுந்தருளினாற் போலே, தேசிகனும் ஸகுடும்பமாக முதலிகளுடனே கோயிலினின் றும் புறப்பட்டு மேனாட்டிலே முன்பு உடையவர் திருநாராயண புரத்தை ப்ரதிஷ்டிப்பிக்கைக்காக எழுந்தருளினாற் போலே, ஒரு விசேஷத்தை உண்டாக்குகைக்காக அந்தத் திருநாராயணனைச் செல்வப்பிள்ளையோடே கண்டு திருவடி தொழப் போவதாக எழுந்

1. குற்றமற்றவனை.

தருளி, ஸத்யமங்கலத்தில் நித்யவாஸம் பண்ணிக் கொண்டு, அவ் ஊர் திருக்காவேரிக் கரையில் எழுந்தருளியிருக்கிற வரதராஜப் பெருமாள் ஸந்நிதியில் முதலிகளுக்கு ஸ்ரீ பாஷ்யாதிகளை ப்ரஸாதித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

கந்தாடை லக்ஷ்மணாசார்யரும் தம் ஶிஷ்யர்களாலே பரிபவப் பட்ட தேஶிகன் தன்னை க்ஷாமணம் பண்ணிக் கொண்டது முத லானவைகளை அறியாமையாலே சில நாள் கழிந்தவாறே தந்திரு மேனியில் வைவர்ண்யம் பிறந்து புத்ரோத்பத்தி இல்லாமலிருக்க, அவர் தேவிகள் "இந்தத் திருமேனியில் வைவர்ண்யம் வரும்படி பாகவதாபசாரம் புகுந்ததோ?" என்று கேட்க, அவரும் "ஒன்றும் அறியேன்" என்று சொல்ல, 'ஶிஷ்யர்களாலே வந்ததோ?" என்று விசாரிக்க, அவர்களும் "நம்மாசார்யர் பக்கல் 'ப்ரத்யுத்தாநாதி களைப் பண்ணாமலிருந்த தேஶிகனுக்குப் பரிபவம் பண்ணினோம்" என்ன, ஆத்மாபஹாரமுடையமான அந்த வார்த்தையைக் கேட்டுத் தம்பதிகள் இருவரும் மூர்ச்சித்துத் தாங்களே தெளிந்து "இதுமூல மாகத் தேஶிகன் மேனாட்டுக் கெழுந்தருளினார்" என்று கேட்டு அத்யந்த [2]மநுதப்தர்களாய் ஸத்யமங்கலத்தைச் சென்று தேஶிகனை முதலிகளோடே கண்டு பரவஶர்களாய்த் தண்டன் ஸமர்ப்பித்து,

> "அக்ருத ஸுக்ருதகஸ் ஸுதுஷ்க்ருத்தர:
> ஶுபகுணலவலேஶ தேஶாதிக: |
> அஶுபகுண பரஸ் ஸஹஸ்ராவ்ருத:
> வரதமுருதயங் கதிந் த்வாம் வ்ருணே ||"

என்று ஶரணமடைந்து நிற்க, தேஶிகனும் இதென்ன? என்று கேட்க, லக்ஷ்மணாசார்யரும் இந்த வ்ருத்தாந்தத்தை விண்ணப்பஞ் செய்து ஒரு ஸம்வத்ஸரம் நித்யமாகத் தேஶிகன் ஸ்ரீபாத தீர்த் தத்தை ஸ்வீகரித்துக் கொண்டிருக்க, தீர்த்த வைபவத்தாலே தந் திருமேனி வைவர்ண்யமும் தீர்ந்து தேவிகளும் கர்ப்பம் தரிக்க, தம்பதிகளிருவரும் ஸந்துஷ்டர்களாய்க் கோயிலேற எழுந்தருள வேணும் என்று ப்ரார்த்திக்க, தேஶிகனும் திருநாராயணபுரத்தில் சிலநாளிருக்கவேணும் என்றருளிச் செய்ய, தம்பதிகளும் தேஶிகன்

1. எழுந்து வணங்காமை 2. வாட்டமடைந்தவர்களாய்.

நியமநம் பெற்றுக் கோயிலேற வெழுந்தருளி தேசிகன் திருவடிகளிலே அத்யந்த ப்ரவணராய் இவ் வ்ருத்தாந்தங்களையெல்லாம் அங்குள்ளவர்களுக்கு அறிவிப்பித்துக்கொண்டிருக்கிற காலத்தில் ஒரு குமாரரவதரிக்க, தேசிகன் ஸ்ரீபாத தீர்த்த ப்ரபாவத்தாலே அவதரித்த அந்தக் குமாரருக்குத் தீர்த்தப் பிள்ளை என்று திருநாமம் சாற்றினதோடே தந்திருத்தகப்பனருடைய திருநாமத்தையும் தேசிகன் திருநாமத்தையும் சேர்த்து ஆயியாழ்வான்பிள்ளை யென்றும் திருநாமம் சாற்றினர்.

## தேசிகன், ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயர் வைபவங்கள்

பின்பு தேசிகனும் கோயிலை ஸ்மரித்து,

"ஸத்த்வே திவ்யே ஸ்வயமுதயதஸ் தஸ்ய தாம்ந: ப்ரணங்காந்
மஞ்ஜூஷாயாம் மரதகமிவ ப்ராஜமாநம் ததந்த: |
சேதோ தாவத்யுபஹிதபுஜம் சேஷபோகே சயாநம்
தீர்காபாங்கம் ஜலதிதநயா ஜீவிதம் தேவமாத்யம் ||"

என்னும்படி த்வரித்துச் சில முதலிகளுடனே தேவியையும் குமாரரையும் ஸத்யமங்கலத்திலிருக்கும்படி நியமித்தருளிப் பேரருளாள ஜீயர் முதலான முதலிகளோடே தாம் கோயிலேற வெழுந்தருளி,

"ப்ராய: ப்ரபதநே பும்ஸாம் பௌந:புந்யம் நிவாரயந் |
ஹஸ்தஸ் ஸ்ரீரங்கபர்துர் மா மவ்யாதபயமுத்ரித: ||"

என்று அநுஸந்தித்து ஸ்ரீரங்கநாச்சியாரையும் அழகிய மணவாளனையும் திருவடி தொழுது ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்க, வடதேசத்தினின்றும் ஒரு மஹாவித்வான் வந்து, வேதாந்தத்தில் வாதம் பண்ணவேணும் என்ன, தேசிகனும் பேரருளாள ஜீயரை நியமித்தருள, அவரும் சததூஷணியைக் கொண்டு மற்றும் அநேக ப்ரமாணங்களாலும் யுக்திகளாலும் வேதாந்தத்தில் [1]த்ரிராத்ரம் வாதம் பண்ணி அவனை ஜயித்துத் தேசிகன் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பிக்கும்படி பண்ணுவிக்க, தேசிகனும் அந்த வாதக்ரமத்தைக்கேட்டருளி "நீர் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரர்" என்று அருளிச்செய்து குளிரக் கடாக்ஷித்

1. மூன்று இரவு.



ஸ்ரீதேசிகனுக்குப்பின் ஆசார்ய பரம்பரையில் அக்ரகண்யரான
ஸ்ரீ ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஜீயர்
(மைசூர் ஸ்ரீபரகாலமடத்தின் ப்ரதமஜீயர்)

தருள, ஸுதர்ஶநபட்டர் முதலானாரும் அது ஒக்குமென்றுகந்தருள, தேஶிகனும் இப்படி ப்ரஸித்த ஶிஷ்யர்களோடே இருக்கிறரென்று சிலர் அஸூயையாலே வெறுத்திருந்தார்கள். இவ்வர்த்தத்தை

"கலயதாங் கவிதார்கிககேஸரி-
ப்ரகடிதாம் ஶததூஷணிகாம் ஹ்ருதி ।
ஶமகவத்ஸூஜயா: கலு மாயிந:
ப்ரணிபதந்தி பரம் பதயோர் முஹு: ॥

அபி காம மத லோப ஶடதாதி ரஹிதா
அபி நீதி த்ருதி ஶாந்தி மதி தாந்தி ஸஹிதா: ।
யதிராஜ மத துர்ய பதபத்ம விமுகா
அவலோக நதிமாந நுதிபாஹ்ய விஷயா: ॥"

என்று ப்ரதிவாதி பயங்கர மண்ண னருளிச்செய்தார்.

பின்பு எம்பெருமானுர் அருளிச்செய்த கத்யத்தில் ப்ரஸாதித்த ஶரணாகதியை ஸத்துக்கள் அநுஷ்டிக்கும்படி பண்ணிவைத்த நம் தேஶிகனுடைய வைபவத்தை ஸஹிக்கமாட்டாத கலிபுருஷன் சில அஸூயாளுக்களிடத்தில் ப்ரவேஶித்து ஸத்துக்களை பரிபவப் படுத்தினுன்.

பின்பு கலியுகத்தில் நாலாயிரத்துநானூற்றுமுப்பத்தெட்டாவதான தாதுவர்ஷம் பங்குனிமாஸம் ப்ரஹ்மோத்ஸவத்தில் ஒருநாள் அழகியமணவாளன் திருக்காவேரிக்கரையில் ஒரு திருமண்டபத்திலெழுந்தருளியிருக்கும்போது ஒரு ஸ்ரீவைஷ்ணவர் "இப்படி ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தோடே தன்னுடைச்சோதியில் அடியேனுக்கு இப்போதே தேவரீர் ஸேவைஸாதித்தருளவேணும்" என்று [1]அங்க பஞ்சக ஸம்பந்நமாக ஆர்தப்ரபதநஞ்செய்தருள, அழகிய மணவாளனும் "கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே பக்த: ப்ரணஶ்யதி" என்றருளிச்செய்தவனுகையாலே ப்ரணத பரதந்த்ரனுய் அவன் சொன்னபடி செய்யாவிடில் ஸகல பலஸாதநமான ப்ரபத்தியையே பரமபுருஷார்த்தத்திற்கு முக்யோபாயமாக சரமஶ்லோகத்தில் அறுதியிட்ட விஶேஷார்த்தத்தை "உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்" என்கிற முக்யாதிகாரி

1. ஐந்து அங்கங்கள் நிறைந்ததாக.

களும் விஶ்வஸிக்கமாட்டார்கள்" என்று அந்த ஆர்த ப்ரபத நத்தைத் திருவுள்ளம்பற்றியருள, அவ்வளவில் துருஷ்க ஸேநைகள் அத்தேஶ ஹிம்ஸார்த்தமாக வந்து ஜயத்வஜம் போட்டிருக்க, அத்தைக் கண்டு அதிகாரியும் பெரிய பெருமாளுக்குக் [1]கல்லாலே திருத்திரைசாத்தி ஒரு விக்ரஹத்தை முன்னே வைத்து அழகிய மணவாளனுக்கும் பெரிய திருத்திரை பரிமாறி பெருமாளையும் நாச்சிமாரையும் திருப்பெட்டகத்தில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு காடேறப்போக,

### தேசிகன் ஶ்ருதப்ரகாஶிகையை ஶோதித்து ப்ரவர்த்திப்பித்தல்

துருஷ்க ஸேநையும் பஹு ஸ்ரீவைஷ்ணவர்களை ஹிம்ஸிக்க, பெருமாளைப் பின் தொடர்ந்து போகிற தேசிகனை ஸுதர்ஶநபட்டரும் கைபிடித்துக்கொண்டு 'இந்த ஶ்ருதப்ரகாஶிகையை ஶோதித்து ப்ரவர்த்திப்பிக்கவேணும்' என்றும், 'இது உம்மாலே தழைக்கும்படி நம் அம்மாள் திருவுள்ளமாகையால் இந்த ஸமயத்தில் உம்மைக்கண்டேன்' என்றும் அருளிச் செய்து, தாம் எழுதியருளின பட்டோலையையும் தம் குமாரரானையும் தேசிகன் கையிலே ப்ரஸாதித் தருளி, "பெருமாளைக் கூடத் தொடர்ந்து ஸம்ரக்ஷிக்குமதைக்காட் டிலும் இந்த ஶ்ருதப்ரகாஶிகையை ஶோதித்து ப்ரவர்த்திப்பிக்கு மது முக்ய கைங்கர்யம்" என்றும், "இந்தப் பாலர்களை ரக்ஷித்துக் கொள்ளும்" என்றும் அருளிச்செய்தார். அப்படியே தேசிகனும் ஶ்ருதப்ரகாஶிகையினுடைய பட்டோலையையும் மணலிலே புதைத்து அந்தக்குமாரரும் தாமும் சவத்தின் நடுவே ஒளிந்திருந்து அஸ்தமித்தவாறே அந்தப் பட்டோலையையு மெடுத்துக்கொண்டு அந்தக்குமாரருடனே ஸத்யமங்கலமேற எழுந்தருளுவதாய் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் முதலான முதலிகளைப் பறிகொடுத்தோமே என்று திரும்பிப் பார்த்துக்கொண்டு ஒரு மஹாரண்யத்தில் எழுந் தருள, ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயரும் சில முதலிகளுடனே பெருமாளைப் பின்தொடர்ந்து காடேறப் போய் அங்குத் தேசிகனைக் காணாமையாலே திரும்பவும் கோயிலேறப்போக, ஶோகார்த் தராகையாலே வழி திகைத்து அந்த மஹாரண்யத்தில் தேசிகன்

1. மூலஸ்தானத்தில் உள்ள பெருமாளை கல்லைக் கொண்டு மறைத்தல்.

எழுந்தருளியிருக்கிற இடத்தில் வந்துசேர, இருவரும் கண்டோமே என்று மகிழ்ந்துகொண்டு, ஸுதர்ஶநபட்டர் நியமநத்தைத் தலைக் கட்டுவதாய் ஸத்யமங்கலமேற வெழுந்தருளி, ஶ்ருதப்ரகாஶிகை யையும் ஶோதித்து ப்ரவர்த்திப்பித்துக்கொண்டு, அந்தக் குமாரர்கள் இருவருக்கும் உபநயநாதியாய் ஶாஸ்த்ரங்களையும் விஶேஷார்த்தங்களையும் ப்ரஸாதித்துக் கொண்டு ஸத்யமங்கலத்தில் எழுந்தருளியிருந்தார்.

அழகிய மணவாளனும் அழகர்திருமலையில் எழுந்தருளியிருந்து மேல்நாட்டு வழியாய்த் திருமலையில் எழுந்தருளி திருவேங்கடமுடையான் ஸந்நிதியில் நித்யாராதநோத்ஸவாதிகளையும் கொண்டருளிக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

ஸுதர்ஶநபட்டர் முதலான முதலிகள் துருஷ்க ஹிம்ஸையில் திருநாட்டுக்கு எழுந்தருளினார்கள். அழகிய மணவாளப் பெருமாள் நயினார் முதலானாரும் துருஷ்க ஹிம்ஸையில் தேஹாவஸாநத்தை யடைந்தார்கள். பிள்ளைலோகாசார்யரும் பெருமாளுடனே சில தூரம் பின் தொடர்ந்து மார்க்க மத்தியில் துருஷ்க ஹிம்ஸோபத்ரவத்தாலே மறுநாள் திருநாட்டுக்கெழுந்தருளினார்.

பின்பு தேசிகனும் உடையவருக்கு அத்யந்தாபிமதமாயிருந்துள்ள திருநாராயணபுரத்தேற எழுந்தருளி ஸகுடும்பமாக முதலிகளுடனே திருக்கல்யாண தீர்த்தத்தி னீராடிக் கோயிலுக்குள்ளே புகுந்து,

" கபர்திமதகர்தமம் கபிலகல்பநாவாகுராம்
துரத்யய மதீத்ய தத் த்ருஹிண தந்த்ர யந்த்ரோதரம் |
குத்ருஷ்டிகுஹநாமுகே நிபததః பரப்ரஹ்மணః
கரக்ரஹ விசக்ஷணோ ஜயதி லக்ஷ்மணோயம் முநிః ॥ "

என்று அநுஸந்தித்து உடையவரைத் திருவடிதொழுது,

" லக்ஷ்மீ கௌஸ்துபலக்ஷணேந வபுஷா
வாசம் விதாய ஸ்வயம்
ஶ்வேத த்வீப நிவாஸிநாமிவ திஶந்
ஸந்தோஷமந்தர்முகம்
வித்யா வீசி ஸஹஸ்ர ஸம்ப்ரம
மிளத் துக்தார்ணவாடம்பரே



திருவஹீந்திர புரத்தில் திவ்ய ஸேவை தரும்
ஸ்ரீமத் வேதாந்த தேசிகன்
(சில்பி ஒருவனை ஜயிக்க ஸ்ரீதேசிகனே நிர்மித்த விக்ரஹம்)

ஷ்தாநம் ஸம்யமிஸார்வபௌம விஜய
ஸ்தாநே விதத்தே ஹரி: ||"

என்று சொல்லப்படுகிற திருநாராயணனையும், செல்வப் பிள்ளையையும், யதுகிரிநாச்சியாரையும் திருவடிதொழுது நிற்க, திருநாராயணனும் "நம்மை பாஷ்யமுகத்தாலும் ஸாக்ஷாத்தாகவும் ஸ்வரூபம் நிலை நிற்கும்படி பண்ணின ராமாநுஜனுடைய ஸித்தாந்தத்தை அவ்யாஹதமாயிருக்கும்படி க்ரந்தமுகத்தாலும் வாதமுகத்தாலும் நிலைநிறுத்தினீரே" என்று போரஉகந்தருளி திருமாலை முதலான வரிசைகளையும் ப்ரஸாதிக்க, தேசிகனும் அவைகளைப்பெற்று உள் மகிழ்ந்து, உடையவராலே அவ்விடத்தில் ஷ்தாபிக்கப்பட்ட மூல பேரத்தையும், திருநாட்டுக் கெழுந்தருளும்போது ஆலிங்கநம் பண்ணிக்கொண்டு கிடாம்பியாச்சானுக்கு ப்ரஸாதித்தருள, அந்த ஆச்சானாலே பின்பு ப்ரதிஷ்டிதமான உத்ஸவ பேரத்தையும் ஒரு சேர்த்தியிலே கண்டு திருவடிதொழுது நிற்க, உடையவரும் "இப்படி திவ்ய தம்பதிகளாலே கொண்டாடப்பட்டு நம்முடைய ஸித்தாந்தத்தை நிலை நிறுத்தினவராக இருந்துள்ள உமக்குத் தருந்த பாரிதோஷிகம் ஒன்றும் இல்லை" என்றும், "உமக்குப்பின்பு உம்மையும் அதிசயித்து இந்தஸ் ஸித்தாந்தத்தை இந்த வரதாசார்யர் ப்ரவசநம் பண்ணுவர்" என்றும் அர்ச்சகமுகேந அருளிச்செய்து திருமாலை முதலான வரிசைகளையும் ப்ரஸாதிக்க, தேசிகனும் உள் மகிழ்ந்து அந்த வரிசைகளையும் பெற்று, வரதாசார்யரையும் குளிரக் கடாக்ஷித்து அவருக்கும் ப்ரஸாதித்து விடை கொண்டு, அவ்விடத்திலேயே நித்யகைங்கர்யங்களையும் திருநாராயணன் மங்களாசாஸநத்தையும் பண்ணிக்கொண்டு சிலநாளெழுந்தருளியிருக்க,

### தேசிகன், நயினாராசார்யர், ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஜீயர் வைபவங்கள்

அப்போது வரதாசார்யரும் பகவத்விஷயமான ஆறாயிரப்படியைத் தேசிகன் செய்தருளின வ்யாக்யாநத்தோடே அதிகரித்தருள, ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயரும் அத்தை அதிகரியாமலிருக்க, தேசிகனும் "நீர் அதிகரிக்கலாகாதோ?" என்றருளிச் செய்யப்ரஹ்ம தந்த்ர ஸ்வதந்த்ரஜீயரும் "வரதாசார்யரிடத்தில் உடையவர் விசேஷ கடாக்ஷம் பண்ணியிருப்பதால் அவரிடத்தில் ஸதீர்த்தத்வ புத்தி பண்ணாமல் ஆசார்யத்வத்தை வஹிக்

வேண்டும் என்று அபிநந்தி பண்ணின அடியேனுக்கு அவசிஷ்டமான பகவத் விஷயத்தை அவரிடத்தில் அதிகரிக்கும்படி நியமித்தருளவேணும்" என்று ப்ரார்த்திக்க, அத்தைக்கேட்டு வெண்ணெய்க்கூத்தஜீயர் முதலானவர்களும் அப்படியே ப்ரார்த்திக்க தேசிகனும் அத்தைத் திருவுள்ளம்பற்றி அவர்களுக்குப் பகவத்விஷயத்தை ப்ரஸாதிக்கும்படி வரதாசார்யருக்கு நியமித்தருள, அவரும் அப்படியே கலியுகத்தில் நாலாயிரத்து நானூற்று நாற்பதாவதான பஹுதாந்ய வர்ஷம் ஆவணிமாஸம் ஶுக்லத்விதீயை கூடின ஹஸ்த நக்ஷத்ரத்தில் பகவத்விஷயத்தை அவர்களுக்கு ப்ரஸாதிக்கும் போது ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயரும்,

"ஸ்ரீமல்லக்ஷ்மணயோகீந்த்ர ஸித்தாந்த விஜயத்வஜம் |
விஶ்வாமித்ர குலோத்பூதம் வரதார்யமஹம் பஜே ||"

என்று அவர்விஷயமாக ஒரு தனியனை அநுஸந்தித்துப் பின்பு "ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய:" என்கிற தனியனையும் அநுஸந்தித்துப் பின்பு உடையவர் பரிபூர்ணகடாக்ஷபாத்ரராயும் அப்பிள்ளார் பரிபூர்ண கடாக்ஷ பாத்ரராயுமிருந்துள்ள வேதாந்ததேஶிகன் விஷயமாக,

"ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாந வைராக்ய பூஷணம் |
ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்த தேஶிகம் ||"

என்று ஒருதனியனை விண்ணப்பஞ்செய்து அநுஸந்தித்துப்பின்புள்ள குருபரம்பராநுஸந்தாநத்தையும் செய்து பகவத்விஷயத்தை அதிகரித்தருள, இவ்வநுஸந்தாநத்தை முதலிகள் தேஶிகன் ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்ய, தேஶிகனும் அத்தைக்கேட்டு 'ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய:' என்கிறது தம்முடைய பெருமையைச் சொல்லிற்று என்றும் "ராமாநுஜதயாபாத்ரம்" என்கிறது ஸதாசார்ய கடாக்ஷத்தின் பெருமையைச் சொல்லிற்று ஆகையாலே இது மிகவும் கொண்டாடத்தக்கது என்றும் அருளிச்செய்ய, முதலிகளும் 'ஆகில் எத்தை அநுஸந்திக்கவேண்டுவது?' என்று கேட்க, தேஶிகனும் அத்தை ஸுதர்ஶநபட்டர் திருவுள்ளம் பற்றி நியமித்திருக்கையாலும் ஸ்ரீபாஷ்யாதிகரண தசையில் உண்டானதாகையாலும் இது ஆசார்யர்கள் திருநாமம் பொருந்தியிருக்கையாலும் பகவத்விஷயாதிகரண தசையில் உண்டானதாகையாலும் முன்புற்ற "ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய:" என்கிற தனியனை ஸ்ரீபாஷ்யாதி ஸம்ஸ்க்ருத க்ரந்தங்

களை அதிகரிக்கும்போது அநுஸந்திக்கும்படிக்கும், பின்புற்ற "ராமா நுஜ தயாபாத்ரம்" என்கிற தனியனை ஆருயிரப்படிமுதலான நாலா யிர ப்ரபந்த வ்யாக்யாநங்களை அதிகரிக்கும்போது அநுஸந்திக்கும் படிக்கும் ஒரு [1]விபாகம் செய்து நியமித்தருள, அத்தை அங்குள்ள பெரியோர்களும் 'ஒக்கும் ஒக்கும்' என்று உகந்தருள, வரதாசார்யர் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர் முதலான முதலிகளும் அப்படியே அநுஸந்தித்து ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதி விசேஷார்த்தங்களையும் ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்க, தேசிகனும் உடையவரை முன் னிட்டு யதுகிரிநாச்சியார் திருநாராயணன் செல்வப்பிள்ளை அழகிய சிங்கர் திருவடி தொழுது,

"நவ நவ பஹு போகாம் நாத நாராயணத்வம்
விரசய துரிதௌகைஸ் தாமநாக்ராத கந்தாம் |
ஸஹஜ ஸுலப தாஸ்யைஸ் ஸத்பிரப்யர்தநீயாம்
யதிபரிப்ருட ஹ்ருத்யாம் யாதவாத்ரேஸ் ஸம்ருத்திம் ||"

என்று அந்தத் திவ்யதேசத்திற்கு மங்களாசாஸநம் செய்தருளி விடைகொண்டு, ஸத்யமங்கலமேற வெழுந்தருளி, முதலிகளுக்கு விசேஷார்த்தங்களை ப்ரஸாதித்துக் கொண் டிருக்கிற காலத்தில், ஒருநாள் "திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர் பொன்னித் திரைக்கையாலடிவருடப்பள்ளிகொள்ளும், கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டென் கண்ணிணைக ளென்று கொலோ களிக்குநாளே?" என்று [2]விரஹா ஸஹிஷ்ணுதை யாலே அபீதிஸ்தவ ரூபமான ப்ரபத்தி பண்ணி "அழகிய மண வாளன் கோயிலேற எழுந்தருளி முன்புபோலே குறைவற வாழ்ந் தருளவேணும்" என்று ப்ரார்த்தித்துக் கொண்டு எழுந்தருளி யிருந்தார்.

அப்போது அந்த ப்ரபத்தியாலே ப்ரஸந்நனாய் அழகிய மண வாளனும் கோயிலேற எழுந்தருளும்படி திருவுள்ளம் பற்றியருள, அவ்வளவில் கோபணராயன் என்கிற ஒரு ப்ரபுவானவன் திருமலை யினின்றும் அழகியமணவாளனை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போய் செஞ்சியில் சிங்கபுரத்தில் சிலநாள் ஆராதிப்பித்துக்கொண்டி ருந்து கலியுகத்தில் சசருo-ஆவதான ஸர்வதாரிவர்ஷத்தில் கோயி லேறப் போய் அந்தத் துருஷ்கரை ஜயித்து அழகிய மணவாளனை

1. பகிர்ந்து 2. பிரிவாற்றாமையாலே.

யும் நாச்சிமார்களோடே கூட கோயிலேற எழுந்தருளப் பண்ணிப் பெரிய பெருமாளையும் அழகியமணவாளனையும் ஒரு சேர்த்தியாக்கி நித்யோத்ஸவாதிகளை யெல்லாம் நடப்பிக்க, அழகியமணவாளனும் "க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ" என்கிற படியே அதி ஸந்துஷ்டரா யெழுந்தருளியிருந்துகொண்டு தேஶிகனுக்கு "உம்முடைய ப்ரபத்தியை ஸபலமாக்கின நம்மைச் சடக்கென வந்து காணீர்" என்று ஸ்வப்நம் காட்டியருள, விடிந்தோரைத் தேஶிகனும் இந்த ஸ்வப்நத்தை முதலிகளுக்கருளிச் செய்ய, அவ்வளவில் கோபணராயன் கோயிலிலே துருஷ்கரை ஜயித்து அழகிய மணவாளப் பெருமாளையும் எழுந்தருளப் பண்ணுவித்து நித்யோத்ஸவாதிகளையும் நடப்பிவிக்கிறாரென்று வருவார் செல்வார்கள் சொல்லிக்கொண்டு போக அத்தையும் கேட்டருளி, ஆநந்த பாஷ்பங்கள் பெருக்கி, முதலிகளோடே குடும்பமாக ஸத்யமங்கலத்தில் பேரருளாளன் திருவடி தொழுது விடை கொண்டு "கதா த்ரக்ஷ்யாமஹே ராமம் ஜகதஶ் ஶோகநாஶகம்" என்கிறபடியே பேரவா பிறந்து கோயிலேறச் சடக்கென எழுந்தருள, பெரிய பெருமாளும் அநந்தகொத்து பரிஜநங்களையும் திருமாலை ஸ்ரீஶடகோபன் முதலான வரிசைகளுடனே எதிர்கொண்டு போரும்படி அர்ச்சகமுகேந அருளிச் செய்ய, அவர்களும் அப்படியே செய்ய, தேஶிகனும் அவ்வரிசைகளை யெல்லாம் பெற்று உள் மகிழ்ந்து கோயிலிலே எழுந்தருளி ஸ்ரீரங்கநாச்சியாரைத் திருவடி தொழுது நிற்க, நாச்சியாரும் குளிரக்கடாக்ஷித்தருள, தேசிகனும் தீர்த்தாதிகளைப் பெற்று விடை கொண்டு திருமணத் தூணருகே சென்று பெரிய பெருமாளையும் அழகிய மணவாளனையும் நாச்சிமார்களுடனே ஒரு சேர்த்தியில் கண்டு திருவடி தொழுது,

" க்ஷணேபி தே யத் விரஹோதிது:ஸஹ:"

என்றிருக்கிற அடியேனை, இத்தனை நாள் பிரித்ததே" என்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாளும்,

" 'ஶோகஸ் தே விஹதஸ்ஸர்வ:
கல்யாணம் த்வாமுபஸ்திதம்'

என்கிறபடியே உமக்கு இனி ஒரு குறையும் இல்லை" என்று அர்ச்சகமுகேந அருளிச்செய்து தீர்த்தம் முதலானவைகளை

1. தூஷிக்கத்தக்கது.

ப்ரஸாதித்தருள, தேசிகனும் அவைகளைப்பெற்று "'யாவதாவர்த்த தே சக்ரம்' என்கிறபடியே இனி காலதத்வமுள்ளத்தனையும் ஒரு குறையுமன்றிக்கே பெருஞ் செல்வத்தோடே வாழ்ந்தருளவேணும்" என்று மங்களாஶாஸநரூபமாக,

"விதி விஹித ஸபர்யாம் வீத தோஷாநுஷங்கா-
முபசித குநதாந்யாமுத்ஸ்வைஸத்யா நஹார்ஷாம் |
ஸ்வய முபசிநு நித்யம் ரங்கதாமந் ஸுரக்ஷாம்
ஶமித விமதபக்ஷாம் ஶாஶ்வதீம் ரங்கலக்ஷ்மீம்"

என்கிற ஶ்லோகத்தை விண்ணப்பஞ் செய்து அழகிய மணவாளனை எழுந்தருளப் பண்ணுவித்த கோபணராயர் விஷயத்தில் க்ருதஜ்ஞதையாலே,

"ஆநீயா நீலஶ்ருங்க த்யுதிரசித ஜகத்
ரஞ்ஜநா தஞ்ஜநாத்ரேஶ
சஞ்ஜ்யா மாராத்ய கஞ்சித் ஸமயமத
நிஹத்யோத்தநுஷ்காந் துருஷ்காந் |
லக்ஷ்மீக்ஷ்மாப்யா முபாப்யாம் ஸஹ நிஜ நிலயே
ஸ்தாபயந் ரங்கநாதம்
ஸம்யக்சர்யாம் ஸபர்யா மக்ருத புவி யஶ:
ப்ராபணோ கோபணார்ய:* ||"

என்கிற ஸ்லோகத்தையும் அருளிச் செய்து பெருங் கூட்டத்து முதலிகளோடே ஸித்தாந்த ப்ரவசநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

அப்போது சித்ரகூடத்தில் ஒரு ஸ்ரீவைஷ்ணவதாஸி வந்து ஒருவர் முகமாக இப்போது தில்லையார் [1]பரஸ்பரஸ்பர்த்திகளாயிருக்கையாலே [2]ராஜாவலம்பநமுண்டாகில் பகவத் ப்ரதிஷ்டை செய்யலாம் என்று அறிவிப்பிக்க, தேசிகனும் அச் செய்தியை கோபணராயனுக்குத் தெரிவிப்படுத்தி அவனைக் கொண்டு சித்ரகூடத்தில் கோவிந்தராஜனை "திறல் விளங்குமாருதியோடமர்ந்தான் றன்னை" என்கிறபடியே திருவடி முதலான பரிவாரங்களோடு திருப்ரதிஷ்டை

1. ஒருவர் மற்றொருவரோடு போட்டியுள்ளவர்களாய் 2. அரசன் உதவி.

*(இந்த ச்லோகத்தை ஸேனைமுதலியார் ஸந்நிதிக்கருகில் மதிள் சுவற்றில் கல்வெட்டாகயிருப்பதைக் காணலாம்.)

என்று பெருமூச்சுவிட்டுச் சொல்ல, மணவாளமாமுநியும் அத்தைக் கேட்டு, பின்னும் சில ஷிவப்நாதிகளாலேயும் தேஶிக திவ்ய ஸூக்தி களில் ப்ரதிபந்நராயிருந்தார். அவர் ஶிஷ்யர்களில் சிலர் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் ஸந்நிதியில் ஆஶ்ரயித்து ஆரும்பிரப்படியை எழுபத்துநாலாயிரப்படியோடே அதிகரித்தார்கள். சிலர் பெருமாள் கோயிலேறப்போய் நயினாராசார்யர் திருவடிகளில் ஆஶ்ரயித்து விஶேஷ அர்த்தங்களை அதிகரித்தார்கள்.

ப்ரதிவாதி பயங்கரம் அண்ணனும் பெருமாள் கோயிலேற எழுந்தருளி நயினாராசார்யர் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து இச் செய்தியை விண்ணப்பஞ் செய்ய, நயினாராசார்யரும்,

> யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ |
> தஸ்யைதே கதிதா ஹ்யர்தா: ப்ரகாஶந்தே மஹாத்மந: ||

> "ஸ்வமதஸ்தாபநாபூர்வ மதாந்தர நிராஸநே |
> ஸமர்தங் குருதே ஶிஷ்யம் ஸதாசார்யஸமாஶ்ரய: ||"

என்று சொல்லுகிற ப்ரமாணங்களை உம்மிடத்தில் அந்வர்த்தமாகக் கண்டோம் என்று அருளிச்செய்ய, அண்ணனும்,

> " அநப்யஸ்தஸமஸ்தார்த்தா அப்யஸ்தா இவ பூரிஶ: |
> ஸ்வவஶா மம ஸம்ஸித்தாஸ் ஸதாசார்ய பரிக்ரஹாத் || "

என்று விண்ணப்பஞ் செய்தார்.

நயினாராசார்யர் திருவடிகளிலே ஆஶ்ரயித்தவர்கள்:—

(௧) ப்ரதிவாதிபயங்கரம் அண்ணன்
(௨) கந்தாடையண்ணன்
(௩) கோமாண்டூராச்சான்
(௪) போளிபாக்கம் நயினார்
(௫) திருமலையப்பர்
(௬) கிடாம்பியப்பர்
(௭) நடாதூராழ்வான்
(௮) அநந்தப்பன்
(௯) கந்தாடையப்பன்
(௧௦) எம்பெருமானாரப்பன்

இவர் முதலானவர்கள்.

நயினாராசார்யர் அருளிச்செய்த க்ரந்தங்கள்:—தேஶிகன் விஷயமாக மங்களாஶாஸநம், ப்ரார்தநாஷ்டகம், ப்ரபத்தி, திநசர்யை, விக்ரஹத்யாநம், (செந்தமிழில்) பிள்ளையந்தாதி ஆகிய ஆறு.

மற்ற க்ரந்தங்கள்:—ஸாரார்த்த ஸங்க்ரஹம், அபயப்ரதாந ஸாரம், விரோதி பஞ்ஜநி, ப்ரபந்தஸாரம், தத்வத்ரயசுளகம், ரஹஸ்ய

த்ரயசுளகம், ஆஹாரநியமம், ந்யாஸதிலக வ்யாக்யாநம், ஸகுண ப்ரஹ்ம ஸமர்த்தநம், ஶங்காகதகம், (கா) அபேதகண்டநம், அவித்யாகண்டநம், த்யாக ஶப்தார்த்த நிர்ணயம், தத்வமுக்தா கலாபஶாந்தி, அதிகரணசிந்தாமணி, (கடு) மீமாம்ஸாபாதுகா பரித்ரக்ஷணம், ஹரிணஸந்தேஶம், கோகிலஸந்தேஶம் ஆகிய இவை பதினெட்டு. மற்றுமுள்ள வடதேஶத்தில் ப்ரக்ருதாநுகுணமாக அருளிச்செய்த க்ரந்தங்கள் பலவுமுண்டு.

பின்பு நயினாராசார்யரும் முதலிகளை அழைத்துச் சில விஶேஷார்த்தங்களை அருளிச்செய்து "ஸர்வஶேஶ்வரிகளான திவ்ய தம்பதிகளுடைய பாரம்யத்தையும், அவர்களுடைய உபாயத்வோபேயத்வங்களையும், அவர்களுடைய ப்ரபதநார்த்தமாகச் செய்யவேண்டுமதான ப்ரபத்தியையும், ப்ரபத்தி பண்ணினார்க்குத் தாயவிபாகம்போலே வருகிற பரமபுருஷார்த்தத்தையும் ஸங்க்ரஹமாக ப்ரகாஶிப்பிக்கிற திருமந்த்ரத்தினுடைய அர்த்த விஶேஷங்களை யெல்லாவற்றினையும் விஶதமாகத் திருவிருத்தம் முதலாகத் திருவாய்மொழி அளவாகவுள்ள ப்ரபந்தங்களாலும் வேதார்த்தஸங்க்ரஹம் முதலாக நிக்ஷேபக்ரமமளவாக வுள்ள க்ரந்தங்களாலும் பண்டிதர்களும், [1]மிதஜ்ஞர்களும் தம் அதிகாராநுகுணமாக அறிந்து உஜ்ஜீவிக்கும்படி விஶதமாகப் ப்ரகாஶிப்பித்தருளின ஆழ்வார் எம்பெருமானார் திருவுள்ளக்கருத்தை உள்ளபடி வெளியிட்டருளின வேதாந்த தேஶிகனுடைய ஸம்பந்தத்தையும், திவ்யஸூக்திகளையும் அடைந்து உஜ்ஜீவிக்குமவர்களே நித்யஸூரிதுல்யர்கள். இப்படிச் செய்யாதிருக்குமவர்களே நித்யஸம்ஸாரிகள் ஆவர்களென்கிற பெரியபெருமாள் திருவுள்ளத்தை ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் வெளியிட்டருளினார்" என்று அருளிச் செய்து, கடிகாஶதமம்மாள், கிடாம்பிநயினார், ப்ரதிவாதி பயங்கரமண்ணன், எம்பெருமானாரப்பன் இவர்களை ஸித்தாந்தப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்கும்படி விஶேஷமாக நியமித்தருளி பேரருளாளனைத் திருவடி தொழுது நிற்க, பேரருளாளனும் "நம் பெரியவீடு சேரக்கடவீர்" என்று தீர்த்தாதிகளை ப்ரஸாதித்தருளி அனுப்புவிக்க, நயினாராசார்யரும் தேஶிகன் திருவடி நிலையில் ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரித்து, தம்முடைய திருவடி நிலைகளையும் ஸ்ரீபாததீர்த்தத்தையும் முதலிகளுக்கு

1. மந்த புத்திகள்.

ப்ரஸாதித்தருளி, ஜயவர்ஷம் பங்குனி மாஸம் க்ருஷ்ணஸப்தமியில் வேதாந்த தேசிகன் திருவடிகளை த்யாநித்துக்கொண்டு, தம் திருவாராதநமான பேரருளாளரை எம்பெருமானாரப்பனுக்கு ப்ரஸாதித்தருளி உபநிஷதநுஸந்தாநமும் திருவாய்மொழி அநுஸந்தாநமும் பண்ணும்படியருளிச்செய்ய, முதலிகளும் அப்படியே அநுஸந்திக்க, ப்ரஹ்ம ரந்த்ரம் திறந்து திருநாட்டுக்கு எழுந்தருளினார். இத்தை,

"அஹ்ந் நளேதிகஸ்ரீகே ஶகே வரததேஶிக: |
ஸிகபாதே ஶகே ப்ராயாஜ் ஜயேந பரமம் பதம் ||"

என்று சிலர் அநுஸந்தித்தார்கள்.

பின்பு திருமலை ஸ்ரீநிவாஸாசார்யர் குமாரராயும் அப்போது பேரருளாளன் ஸ்தாந ஸமயாதிகாரியுமான திருமலையப்பர் முதலான முதலிகளும் எம்பெருமானாரப்பனைக்கொண்டு நயினாராசார்யருக்கு ப்ரஹ்மமேதாதி சரமகைங்கர்யங்களையெல்லாம் நடத்தி நயினாராசார்யர் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயர் நியமித்தருளின க்ரமத்தைக்கொண்டு பரக்கத் திருவத்யயநத்தையும் செய்தருளினார்கள்.

## கிடாம்பி நயினர், மணவாளமாமுநிகள் வைபவங்கள்

பின்பு நயினாராசார்யர் நியமநப்படிக்கு முதலிகளும் ஸம்ப்ரதாய ப்ரவசநம் பண்ணிக்கொண்டிருக்கிற நாளையிலே, மணவாள மாமுநியும் வேதாந்த தேசிகனிடத்தில் க்ரமமாக ப்ரதிபத்தி தலையெடுத்து, பெருமாள்கோயிலேற எழுந்தருளி புருஷோத்தம தேசிகரெனகிற கிடாம்பிநயினார் திருவடிகளிலே ஆஶ்ரயித்து, ஸ்ரீபாஷ்யம் ஆறாயிரப்படி முதலான விஶேஷார்த்தங்களைத் தேசிக திவ்யஸூக்திகளைக் கொண்டு அதிகரித்துத் தெளிந்து, தம் சரம தஶையிலும் பெரியபெருமாள் ஸ்ரீரங்கநாச்சியார் நியமநப்படிக்கு ஸ்ரீமத் வேதாந்த தேசிகனுக்குப் பிற்பட்ட தமக்கு அர்ச்சாதிகள் வேண்டுவதில்லை யென்று தம்மை யாஶ்ரயித்த முதலிகளுக்கும் நியமித்தருளி வேதாந்ததேசிகன் ஸம்ப்ரதாயமே ஸத்ஸம்ப்ரதாய மென்று காட்டியருளினார்.

## கடிகாஶதம் அம்மாள், ஆதிவண்ஶடகோபஸ்வாமி வைபவங்கள்

பின்பு கிடாம்பி கேஶவாசார்யர் ஸந்நிதியில் பகவத்ஸம்பந்தத்தைப் பெற்றவரான ஶடகோபர், கடிகாஶதம் அம்மாள் ஸந்நிதியில் ஶாஸ்த்ராப்யாஸம் பண்ணித் திருமந்த்ரார்த்தத்தையும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயங்களையும் அதிகரித்து, அதிஸமர்த்தராய் ஆசார்யபக்தி தலையெடுத்திருக்க, அவருக்கு ஸமஸ்த விஶேஷார்த்தங்களையும் கடிகாஶதம் அம்மாள் ப்ரஸாதித்தருள,

# ஸ்ரீமத் ஆதிவண்சடகோபஸ்வாமி வைபவம்

அவரும் வடதேசத்தில் திக்விஜயம் பண்ண, அஹோபிலம் அழகிய சிங்கரும் அவருக்கு ஒரு திருவாராதநத்தையும் ப்ரஸாதித்து ஸந்ந்யஸிப்பித்துக் கொள்ளும்படியும் ஸ்வப்நம் காட்டியருள, அப்படியே ஸந்ந்யஸித்தருளின வண்சடகோபஜீயரும் அழகிய சிங்கரை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு கடிகாசலத்தில் அம்மாள் ஸந்நிதியில் தண்டன் ஸமர்ப்பித்து அச்செய்தியை விண்ணப்பஞ் செய்ய, அம்மாளுமுகந்தருளி திவ்யதேசங்களில் ஜீர்ணோத்தாரணங்களையும் ஸித்தாந்த ப்ரவசநத்தையும் பண்ணிக்கொண்டிருக்கும்படி நியமித்தருள, வண்சடகோப ஜீயரும் அப்படியே ஆழ்வார் திருநகரி முதலான திவ்யதேசங்களில் ஜீர்ணோத்தாரணங்களையும் ஸம்ப்ரதாய ப்ரவர்த்தநத்தையும் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தார்.

## பெருமாள் பிராட்டியார் தேசிகஸம்ப்ரதாயத்தை அநுக்ரஹித்தல்

ஸ்ரீமத் வேதாந்த தேசிக ஸம்ப்ரதாயத்தில் ஆச்ரயித்திருக்கிற ஜீயர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள் திவ்யதேசங்கள்தோறும் நிறைந்து குடிகொண்டு பகவத் பாகவதாசார்ய கைங்கர்யங்களையும் ராமாநுஜஸித்தாந்த ப்ரவசநசீலராய் தேசிக திவ்யஸூக்தி ப்ரவசநத்தையும் செய்துகொண்டிருக்க, திவ்யதேசங்கடோறும் எழுந்தருளியிருக்கிற திவ்யதம்பதிகளான பெருமாள் பிராட்டியாரும் உள் மகிழ்ந்து "தம்முடைய ஸித்தாந்தமான வேதாந்த தேசிக ஸம்ப்ரதாயமே எங்கும் தழைக்கவேணும்" என்று அநுக்ரஹித்தருள, அப்படியே வேதாந்த தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள் திவ்யதம்பதிகள் திருவுள்ளமுகக்கும்படி வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள்.

இவ்வர்த்தங்களையெல்லாம் நம்மாசார்யரான த்விதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயர்செய்தருளின பன்னீராயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்திலும், திருமலை ஸ்ரீநிவாஸாசார்யர் செய்தருளின ப்ரபந்த நிர்வாஹத்திலும் பரக்கக்கண்டு கொள்வது.

நாந்யம் மந்யே குருச்ரேஷ்டம் ஸ்ரீமத்வேதாந்ததேசிகாத் |
தத்ஸம்ப்ரதாயி தந்யேப்யோ நாந்யாந் தந்யாம்ச்ச ஸஜ்ஜநாந் ||



திருவள்ளூர் ஸ்ரீ அஹோபில மடத்தில் ஸேவை தரும்
ஸ்ரீ ஆதிவண்சடகோபஸ்வாமி
(ஸ்ரீமத் அஹோபிலமடம் ஜீயர்கள் பரம்பரையில் ப்ரதமர்)



ஸ்ரீ அஹோபில மடத்தில் ஸேவை தரும்
ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹன்
ஸ்ரீமத் ஆதிவண்சடகோப ஸ்வாமி தொடங்கி,
ஸ்ரீமத் அஹோபில மடத்து அழகியசிங்கர்களால்
ஆராதிக்கப் பெறுபவர்

தார்தீயீக ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரேண யதீந்துநா ।
குரு பங்க்தி ப்ரபாவோயம் ஸங்க்ரஹேண ப்ரதர்ஶித: ॥

ஸந்தஶ்ஶாஸ்த்தாந்தஸித்தாந்தாஸ் ஸந்துஷ்டாஸ்ஸந்து ஸந்ததம் ।
அஸந்தஶ்ச பலாயந்து நிந்தந்தஶ் ஶாதஸந்ததிம் ॥

ஆதிமறை யோதிமகி ழயக்ரீவர் தம்மருளா
லன்புடனே தூப்புனக ரவதரித் திங்குவந்து
வாதியரை வென்றுவந்து வண்புவிமே லெதிராசர்
வாழ்வுறுநற் றர்சனத்தை வண்மையுட னேவளர்த்து
நீதிநெறி தவராம னிறுத்தியிடும் வேங்கடவா
நேசமுட னாழ்வார்க ளிலைகளெல் லாமுணர்ந்து
சாதுசனம் வாழவென்று சாற்றியநல் ப்ரபந்தசாரந்
தனையுரைத்து வாழுமனந் தந்தருளா யென்றனுக்கே.

அஸ்மத்தேஶிகபங்க்தி வைபவமிமம் யே வா படந்த்யந்வஹம்
ஶ்ருண்வந்தோ விபவைகதேஶமபி வா ஸத்ப: புநீதாஸ்ஸ்வபம் ।
தே ஸர்வாந் புவி மாநவாநபி புநந்த்யந்யே ச தத்ஸம்ஶ்ரயா:
ப்ராயஶ்சித்தமிதம் பவேத் புவி ந்ருணாம் நூநம் மஹாபாபநாம் ॥

பர்யாயபாஷ்யகாராய ப்ரணதார்திம் விதுந்வதே ।
ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ராய த்விதீயப்ரஹ்மணே நம: ॥

ஸ்ரீமத் த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி

அருளிச்செய்த

## குருபரம்பரா ப்ரபாவம்

ஸம்பூர்ணம்

---

“ வாழி யணிதூப்புல் வருநிகமாந் தாசிரியன்
வாழியவன் பாதார விந்தமலர்—வாழியவன்
கோதிலாத் தாண்மலரைக் கொண்டாடிக் கொண்டிருக்கும்
தீதிலா நல்லோர் திரள்.”

ஸ்ரீமதே

ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர பரகாலயதீந்த்ர
மஹாதேஶிகாய நம:



# குரு ப்ரபாவம்

(வேதங்கள், ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள் இவைகளிலிருந்து தொகுக்கப்பட்டது)

1. ஆசார்ய தேவோ பவ.
2. ஆசார்யவாந் புருஷோ வேத.
3. தேவமிவ ஆசார்யம் உபாஸீத.
4. ஆசார்யாத் இஹ தேவதாம் ஸமதிகாம் அந்யாம் ந மந்யாமஹே.
5. ஆசார்ய ஸ ந்பி: தேவவத் ஸ்யாத் உபாஸ்ய:
6. யஸ்ய தேவே பரா பக்தி: யதா தேவே ததா குரௌ | தஸ்யைதே (அ) கதிதா: ஹ்யர்த்தா: ப்ரகாஸந்தே மஹாத்மந: ||
7. ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநூம் | மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் ஸாஸ்த்ர பாணிநா ||
8. குரும் ப்ரகாஸயேத் தீமாந்
9. குரோ: நாம ஸதா ஜபேத்
10. குருரேவ பரம் ப்ரஹ்ம
11. யஸ்மாத் ஸதுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குரு:
12. தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத்.
13. குருமுகாத் ஸ்ரீஸம் ப்ரபத்யாத்மவாந்
14. தத் வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஸ்நேந ஸேவயா | உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிந: தத்வ தர்ஸிந: ||
15. பாபிஷ்ட: க்ஷத்ரபந்துஸ்ச புண்டரீகஸ்ச புண்யக்ருத் | ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாதாசார்யவாந் பவேத் ||
16. ஆசார்யாத்தைவ விதிதா வித்யா ஸாதிஷ்டம் ப்ராபத்
17. அத்ர பரத்ர சாபி நித்யம் யதீய சரணௌ ஸரணம் மதீயம் |

18. ஸித்திர் பவதி வா நேதி ஸம்ஶயோச்யுத ஸேவிநாம் |
ந ஸம்ஶயோத்ர தத்பக்த பரிசர்யாரதாத்மநாம் ||
19. பாதமூலம் கமிஷ்யாமி யாநஹம் பர்யசாரிஷம் |
20. குரோரநுக்ரஹேணைவ புமாந் பூர்ண: ப்ரஜாயதே |
21. தத்விஜ்ஞாநார்த்தம் ஸ குருமேவாபிகச்சேத்
ஸமித் பாணி
22. ந ஜந்மநா நாத்யயநாத் ந யந்ஜ்ஞாத் நாபி சாஸ்ரமாத் |
ந த்யாகாத் லாப்நுயாத் ப்ரஹ்ம குருபஸதநம் விநா ||
23. நாராயணோபி விக்ருதிம்
யாதி குரோ: ப்ரச்யுதஸ்ய துர்புத்தே: |
கமலம் ஜலாதபேதம்
ஶோஷயதி ரவிர் ந தோஷயதி ||
24. திஶி திஶி கதிவித்பி: தேஶிகைர் நீயமாநா
25. ஸ்பர்த்தா விப்லபவ விப்ரலம்ப பதவீ வைதேஶிகா
தேஶிகா:
26. தேஶிகாதேஶகாங்க்ஷீ
27. தன் குருவின் தாளிணைகள் தன்னில் அன்பொன்
றில்லாதார்—நண்ணார் அவர்கள் திருநாடு
28. சுரக்கும் கருத்துடைத் தேசிகர் கன்றென நம்மை
எண்ணி சுரக்கும் சுரபிகள் போல் சொரிகின்றனர்
சொல்லமுதே.
29. மருளற்ற தேசிகர்
30. குலிங்கசகுநி வ்ருத்தாந்த வைதேசிகரான தேசிகர்
31. சீலம் கவர்ந்திடும் தேசிகர்
32. மதுரகவி தோன்றக் காட்டும் தொல்வழியே
நல்வழிகள் துணிவார் கட்கே
33. மாசின் மனந்தெளி முனிவர் வகுத்தவை தெல்லாம்
மாலுகந்த வாசிரியர் வார்த்தைக்கு ஒவ்வா.

Pages 1 to 240 Printed by The Novel Art Printers, Madras-14 (Phone No. 82731); Paper supplied by The General Papers Ltd., 16 Armenian St., Madras-1 (Phone No. 25166); Binding done by The S. M. Book Binding Works, Madras-14 (Phone No. 72979)

ஸ்ரீ:

ஸ்ரீ ஸ்ரீலக்ஷ்மீ ஹயவதந லக்ஷ்மீ நாராயணாப்யாம் நம:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

ஸ்ரீப்ரம்ஹ தந்த்ர ஸ்வதந்த்ர பரகால குருபரம்பராயை நம:

# குருபரம்பரா ப்ரபாவம்

## (அநுபந்தம்)



ஆஹாரநியமாதி ஆசார அநுஷ்டானங்களில் அதிபவித்ரரும், ஸகல
ஆத்ம குண பரிபூர்ணரும், ஸ்ரீதேசிகரின் ஸ்தோத்ர-தத்வ
-ப்ரபந்த க்ரந்தங்களைத் தெளிவிக்க வந்த ஞானநிதியும்,
ஆயிரக்கணக்கான சிஷ்யர்களை ஆத்ம காரியங்களால்
உய்வித்து வருபவரும், 'லிப்கோ'பால் எ[illegible]ம்
அருள் கொண்டு ஆதரித்து வருபவருமான

ஒப்பிலியப்பன் ஸந்நிதி வித்வான், சிரோமணி, வித்யாவிசாரத

ஸ்ரீ உபய. வே. வங்கீபுரம், [illegible]

**ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமி**

ஸ்ரீ:

அனுபந்தம் 1

# ஸ்ரீதேசிக தர்சந ஸார ஸங்க்ரஹம்*

ஸ்ரீ உபய வே. வ. ந. ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமி,
ஒப்பிலியப்பன் ஸந்நிதி

### வேதமே மூல ப்ரமாணம்

உலகிற் பிறந்த ஒவ்வொருவரும் சேதநம் அசேதநம் ஈசுவரன் என்னும் தத்துவங்களை அறிந்து, பக்தி ப்ரபத்தி ஆகிய ஹிதங்களுள் ஒன்றை அனுஷ்டித்து, மோக்ஷமாகிய புருஷார்த்தத்தைப் பெற முயலவேண்டும். இவையனைத்தும் வேத பாகங்களில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. ஸம்ஸார லோகத்திலுள்ளோர்க்கு வேதமே கைவிளக்காகும். வேதம் ஒன்றே அநாதியாய் அனந்தமாய், அபௌருஷேயமாய் ஸ்வதந்த்ரமான ப்ரமாணமாய் நிற்கும். மற்றைச் சாஸ்த்ரங்கள் அனைத்தும் வேதத்தை மூலமாகக்கொண்டு நின்றே ப்ரமாணமாக வேண்டும். வேதவேதாந்தங்களின் அர்த்தத்தை உலகிலுள்ள அனைவரும் அறிந்து உஜ்ஜீவிக்க வேண்டுமென்று திருவுள்ளங் கொண்டு ஆழ்வார்கள் அவற்றின் கருத்தை ஆய்ந்தெடுத்துத் தமிழில் நாலாயிர திவ்ய ப்ரபந்தமாக வெளியிட்டருளினர்.

---

* Reproduced from "ஸ்ரீதேசிகப் பிரபந்தம்-உரை" by Oppiliappan Sannidhi, Vidwan, Siromani, Vidya Visarada Sri Ubhaya Ve. Vankipuram, Navanitham, Srirama Desikacharya Swami and published by Sri Ubhaya Ve. Vazhuthur R. Rangaswami Iyengar swami, B. A., B. L., Advocate, Selvam Nagar, Thanjavur, WITH GRATEFUL ACKNOWLEDGMENTS to the saintly author and learned publisher.

### ஆழ்வார்கள்

அவ்வாழ்வார்கள் பதின்மர் :—பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார்: என்பவர். எம்பெருமானுடைய குணாநுபவத்தில் ஆழ்ந்து கிடந்தமைபற்றி 'ஆழ்வார்' எனத் திருநாமம் வாய்த்தது. இவர்கள் அனைவரும் அவதார புருஷர்கள். சிலர் அயோநிஜர்கள். [உலகில் தற்காலம் விபரீதாநுஷ்டாநத்திற்காகத் திருப்பாணாழ்வாரைத் தாழ்ந்த குலத்தோருக்கு உதாஹரணமாக்கி மேடைப் பிரசங்கங்களில் தோன்றியவாறு பேசுவதன் காரணம் அவ்வாழ்வாரை அயோநிஜரான அவதார புருஷரெனவும் பாணர் குலத்தில் வளர்ந்து வந்ததால் அவருக்கு அப்பெயர் வந்ததெனவும் அறியாமையேயாம்.] இவ்வாழ்வார்கள் தவிர ஆண்டாள், மதுரகவிகள், திருவரங்கத்தமுதனார் ஆகிய மூவரும் அருளிச்செய்த பாசுரங்களும் சேர்ந்தே இருபத்துநான்கு பிரபந்தங்கள் கொண்ட நாலாயிர திவ்ய ப்ரபந்தமாகின்றது. இவ்வாழ்வார்களில் நம்மாழ்வாரே மிக முக்கியராய் நிற்பவர்; இவர் ப்ரபந்ந ஸந்தாந கூடஸ்தர் எனவும் வழங்கப்பெறுவர். இவருடைய அருளிச் செயலான திருவாய்மொழியின் இனிமையையும் அர்த்த புஷ்டியையும் அளவிட்டுக் கூறமுடியாது. இதன் வியாக்யாநமே பகவத்விஷயமெனப்படும்.

### ஆசார்யர்கள்

ஸ்ரீமந் நாராயணனே அனைவர்க்கும் முதல்வனான ஆசார்யன். ஆசார்யர்களில் பெரியபிராட்டி இரண்டாமவளாக விளங்குகின்றாள். பின் விஷ்வக்ஸேநர் மூன்றாவது ஆசார்யன். இதற்குப் பின்னரே ஆசார்யபரம்பரை பூலோகத்தில் தொடங்குகின்றது. அடுத்த ஆசார்யன் நம்மாழ்வார் நம்மாழ்வாருக்கு விஷ்வக்ஸேநர் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து எழுந்தருளிப் பஞ்சஸம்ஸ்காரம் செய்தருளினார். நம்மாழ்வார் ஆழ்வார் கோஷ்டியிற்போல் ஆசார்யகோஷ்டியிலும் முதன்மை பெற்று விளங்குகின்றார். இவருக்கு

அடுத்த ஆசார்யன் ஸ்ரீமந் நாதமுனிகள். நம்மாழ்வாருக்கு நாதமுனிகள் பல நூற்றுண்டுகள் பிந்தியவரேயாயினும் இவர் மஹாயோகியாதலால் இவருடைய யோகநிலையில் நம்மாழ்வார் காட்சியளித்து, அருள்புரிந்து, திவ்ய ப்ரபந்தத்தையும் உபதேசித்து ஆசார்யரானுர். மேலும் நம்மாழ்வார் திருவடிகளில் நேரில் கைங்கர்யம் செய்த ஸ்ரீமதுரகவிகளிடமிருந்து அவர் வம்சத்தினரான ஸ்ரீபராங்குச தாஸர் வாயிலாக நாதமுனிகளுக்கு ஸம்ப்ரதாயம் வந்தபடியாலும் நம்மாழ்வார் அவருக்கு ஆசார்யரானுர். நாதமுனிகளுக்குப் பிறகு முறையே **உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார்** ஆகிய இவர்கள் ஆசார்யர்களானுர்கள். ஆளவந்தார் நாதமுனிகளுடைய பௌத்திரராவார். இவரும் ஆசார்ய பரம்பரையில் முக்கியமானவர்; பல கிரந்தங்களின் வாயிலாக உலகிற்கு மஹோபகாரம் செய்தருளியவர். இவருடைய ஸ்ரீஸூக்திகள் ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்திகளுக்கு மூலமாய் நிற்பன. ஆளவந்தாருடைய சிஷ்யர் பெரிய நம்பிகள்.

### ஸ்ரீபாஷ்யகாரர்

பெரியநம்பிகளுடைய சிஷ்யரே நம் ஸித்தாந்த ப்ரவர்த்தகரான **ஸ்ரீபாஷ்யகாரர்**. இவரை எம்பெருமானுர், உடையவர், ராமாநுஜன், எதிராஜர் என்ற பல திருநாமங்களால் வழங்குவதுண்டு. நம் ஸித்தாந்தத்தைப் பிற மதத்தினரின் கையில் அகப்பட்டுச் சீர்குலையாதவாறு காப்பாற்றியவர் இவரே. இவர் அருளிச்செய்தவை ஒன்பது கிரந்தங்கள், அவை—ஸ்ரீபாஷ்யம், தீபம், ஸாரம், வேதார்த்தஸங்க்ரஹம், ஸ்ரீகீதா பாஷ்யம், சிறிய கத்யம், பெரிய கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம்: என்பன. இவற்றுள் ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு உரையான ஸ்ரீபாஷ்யம் தலைசிறந்து நிற்கும். ஸ்ரீதேசிகன் இந்த ஸ்ரீஸூக்திகளைப் பரிசயம் செய்தே தம் வாழ்நாள் முழுவதையும் கழித்ததாக அருளிச்செய்கிறுர். மேலும் ஸ்ரீபாஷ்யகாரரே ப்ரபந்நன் அநுஷ்டிக்க வேண்டிய கைங்கர்யங்களுள் ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபம் செய்வதையும்சொல்வதையுமே முதலாவதாக விதித்துள்ளார். ஆசார்யர்களின்

வரிசையை ஒரு ஹாரமாகக் கொண்டால் அதில் ஸ்ரீபாஷ்ய காரரை நாயகமணியாகவே கொள்ளவேண்டும். இவர் சிதறியிருந்த பல ஆசாரங்களைச் சீர்திருத்தி வேதத்தால் விதிக்கப்பட்ட ஆசாரங்களை உலகுக்கு வெளியிட்டுக் காத்தார். மானிடர் தத்தம் வர்ணாச்சிரம தர்மங்களைச் சிறிதும் வழுவாது நடத்துமாறு செய்து அவற்றைக் காத்தவர் இவரே. வேதங்களுடைய தாத்பர்யத்தை இவர் நேரில் கண்டறிந்து அவற்றைத் தழுவிய மற்ற ப்ரமாணத்திற்கும் ஏற்றவாறு உலகினர் நடக்கவேண்டிய முறைகளைப் போதித்து உலகிற்கு வழிகாட்டியாய் நின்றார். [ஆனால் தற்காலத்தில் பொதுக்கூட்டங்களில் மேடைமீது ஏறித் துணிந்து பேசுமவர்கள் தோன்றியவாறு தங்களுக்குச் சாதகமாகக் கூறிக்கொள்கிறபடி அத்தகைய ஆசாரச் சீர்திருத்தங்களை இவர் செய்யவேயில்லை ] இவர் ஆபத்துக்காலத்திலுங் கூடச் சிறிதளவும் சாஸ்த்ரங்களுக்கும் தம் ஸூக்திகளுக்கும் முரணாக நடந்ததேயில்லை. இவருடைய ஸ்ரீஸூக்திகளை நன்கு அறிந்து அவற்றைக்கொண்டு இவருடைய கொள்கைகளை நிர்ணயிப்பதே முறையாம். இங்ஙனன்றி, உலகில் பலவகையாய்த் தோன்றிய இவருடைய சரிதைகளை ஆதாரமாகக்கொண்டு செய்யும் ஆசாரச் சீர்திருத்தம் ஆசாரங்களின் சீரைத் திருத்துவதாகவே முடியும். இவருடைய ஸ்ரீஸூக்திகளின் உண்மைப்பொருளை அறிவது ஸதாசார்யர்களின் திருவடிகளில் வணங்கி வழிபட்டுக் காலக்ஷேபம் செய்தாலன்றிக் கைகூடாததேயாம்.

நிற்க, ஸ்ரீபாஷ்யகாரருடைய திருவடிகளில் ஆச்ரயித்தவர்களில் முக்கியமானவர் **திருக்குருகைப்பிரான் பிள்ளான்.** இவரே திருவாய்மொழிக்குத் திருவாறாயிரப்படியென்ற மிகச் சிறந்த ஒரு வியாக்கியானமிட்டவர். இவருக்குப் பின் முறையே **கடாம்பியாச்சான், எங்களாழ்வான், நடாதூர் அம்மாள், கடாம்பி அப்புளார்** ஆகிய இவர்கள் ஆசார்யர்களாகின்றனர்.

### ஸ்ரீதேசிகன்

கடாம்பி அப்புள்ளாருடைய திருவடிகள் நம் ஸ்ரீமந் **நிகமாந்த மஹாதேசிகன்.** இவர் அப்புள்ளாருக்கு மருமானா

மாவர். ஸ்ரீதேசிகனைப்பற்றி இங்கு எதை எழுதுவது? எதை விடுவது? ஸ்ரீபாஷ்யகாரருடைய திருவடி திருமுடி ஸம்பந்தம் பெற்ற ஆசார்யர்களே ஆசார்ய பதவிக்கு ஏற்றவர் என்று ஸ்ரீபாஷ்யகாரர் விஷயத்தில் ஸ்ரீதேசிகன் அருளிச்செய்ததை நாம் ஸ்ரீதேசிகன் விஷயத்திலும் கொள்வதே உசிதமாகும். எந்த அம்சத்திலும் வேறொருவரையோ வேறொன்றையோ நாம் நாடவேண்டாதபடி ஸகலாம்சங்களையும் தம் எண்ணிறந்த ஸ்ரீஸூக்திகளின் வாயிலாக ஸ்ரீதேசிகன் நமக்கு அருளிய மஹோபகாரத்தை எவ்வாறு அளவிட முடியும்? ஸ்ரீதேசிகனை நமக்கு ஆசார்யனாக அளித்த மஹோபகாரத்திற்கே நாம் எம்பெருமானிடம் எந்நாளும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளோம். ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த எளிய காவ்யங்களிலும் நம்மால் அளவிடவும் அறியவும் முடியாத பல அர்த்த விசேஷங்கள் உள்ளனவென்று ஸ்ரீதேசிகஸூக்திகளிலொன்றாகிய யாதவாப்யுதயத்திற்கு உரையிட்ட பிற மதத்தினரான ஸ்ரீஅப்பயதீக்ஷிதரும் வாயாரப் புகழ்ந்து பேசியுள்ளார்.

ஸ்ரீதேசிகனுக்குப் பிறகு ஆசார்யபரம்பரை பிரியும் வகையைத் தத்தம் ஸம்ப்ரதாய முறைப்படி கேட்டுணர்க.

### ஆசார்யனது உபகாரம்

ஒவ்வொரு சேதனனும் தான் உஜ்ஜீவிப்பதற்காக ஸாத்துவிகர்களான பாகவதர்களை நாடி அவர்களுடன் நெருங்கிப் பழகி அவர்களின் உதவியால் ஓர் ஆசார்யனை அடைந்தேயாகவேண்டும். அங்ஙனம் ஆசார்யனை அடைந்து தனக்கு முக்திபெற வழிகாட்டவேண்டுமென்று அவனைப் பிரார்த்திப்பான். ஆசார்யன் இவனுக்கு அவசியமான சில அர்த்தங்களை உபதேசித்துத் தன் வர்ணாச்ரம தர்மங்களினின்று வழுவாதிருக்குமாறு போதிப்பான்; பின் எம்பெருமானுடைய சின்னங்களாகிய சங்க-சக்கரங்களை இவன் தோள்களில் பொறிப்பான். இங்ஙனம் செய்யப்படுவதே 'ஸமாச்ரயணம்' 'பஞ்ச ஸம்ஸ்காரம்' என்று உலகில் வழங்கும் ஸ்ரீவைஷ்ணவனாவதற்கு இதுவே முக்கியமான அறிகுறியாகும். இது ஸ்த்ரீகளுக்கும் ஸகல வர்ணத்தோருக்கும் பொதுவாகும்.

இதைப் பெறுமல் ஸ்ரீவைஷ்ணவனுக முடியாது. ஸமாச்ர யணகாலத்தில் திருமந்த்ரம் த்வயம் சரம சுலோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களையும் ஆசார்யன் அர்த்தத்தோடு உபதே சிப்பான். இந்த ரஹஸ்யங்களைத் தினந்தோறும் இயன்ற வரை அர்த்தஜ்ஞாநத்தோடு சிஷ்யன் ஜபம் செய்யவேண்டும். பின் ஆசார்யன் சிஷ்யனுக்கு க்ரந்த காலக்ஷேபம் செய்து வைத்து விசேஷ ஜ்ஞாநத்தை உண்டாக்குவான். அதன்பின் இவனுக்குப் பரந்யாஸத்தைச் செய்விப்பான். இப்படி ஸமாச்ரயணம் காலக்ஷேபம் ப்ரபத்தி ஆகிய மூன்றும் சில ருக்கு ஒரே ஆசார்யனிடமும், சிலருக்கு வெவ்வேறு ஆசார் யர்களிடமும் நேருவதுண்டு. இவ்வாறு ஆசார்யன் சிஷ்ய னுக்குச் செய்யும் உதவி பலனைக் கருதியன்று. தன் கன்றுக்கு இரங்கிப் பாலைச் சொரியும் தாய்ப்பசு எத்தகைய பலனைக் கருதுகின்றது? அதுபோல் சிஷ்யன் உஜ்ஜீவிக்க வேண்டு மென்ற ஓர் எண்ணமே ஆசார்யனை அங்ஙனம் செய்யத் தூண்டுகின்றது.

### சிஷ்யனது கடமை

ஆசார்யனையே தெய்வமாகப் பற்றவேண்டும். பரம ரஹஸ்யமான அர்த்தங்களை உபதேசித்துத் தன்னை நல்வழிப் படுத்திய ஆசார்யனுக்கு எவ்வகையாலும் கைம்மாறு செய்ய முடியாதென்பதை நினைத்து அவன்பால் நன்றி பாராட்ட வேண்டும். அவன் செய்த உபதேசத்தை விபரீதமான ஒழுக்கத்தால் வீணாக்கக்கூடாது. ஆசார்யனை ப்ரகாசிப்பித் தலும், மந்த்ரங்களையும் அவற்றின் அர்த்தங்களையும் மறைத் தலும் சிஷ்யனுக்குக் கடமைகளாம். ஆசார்யனைப் பூஜிப் பதும், தியானிப்பதும் அவனது புகழை வெளியிடுவதும், திருநக்ஷத்ர உத்ஸவம் முதலியன நடத்துவதும் ஆகிய அனைத் தும் அவனிடத்து நாம் பெற்ற மஹோபகாரத்திற்குச் சிறிதும் ஈடாகாவென்பதை உணரவேண்டும். எம்பெருமானே ஆசார்யனது வடிவு கொண்டு தன்னை வாழ்விக்க வந்ததாகவே சிஷ்யன் கருதவேண்டும்.

### காலக்ஷேபம் செய்தல்

ஆசார்யன் ஸந்நிதியில் சிஷ்யன் காலக்ஷேபம் செய்ய வேண்டிய க்ரந்தங்களுள் முக்கியமானவை:—(1) ஸ்ரீபாஷ்ய காரர் ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு வியாக்கியாநமாக அருளிச் செய்த ஸ்ரீமத்பாஷ்யம். (2) ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபகவத் கீதைக்கு வியாக்கியாநமாக அருளிச்செய்த ஸ்ரீமத்கீதா பாஷ்யம். (3) ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரம். (4) திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவாய் மொழிக்கு வியாக்கியாநமாக அருளிச்செய்த ஸ்ரீபகவத் விஷயம்: என்பன. இவையே க்ரந்த சதுஷ்டயமெனப்படும். இவற்றின் காலக்ஷேபத்திற்கு முன்பே புராண இதிஹாஸங் கள் முதலியவற்றைக் கேட்டறிவதால் விவேகம் ஏற்பட்டுக் காலக்ஷேபம் செய்ய யோக்யதை உண்டாயிருக்கப் பெற வேண்டும். பகவத்விஷய காலக்ஷேபத்திற்கு முன்பே திரு வாய்மொழி முழுவதையும் ஆசார்யனிடம் அத்யயநம் செய்ய வேண்டும். கீழ்க்கூறிய காலக்ஷேப க்ரந்தங்கள் தவிர, மற்ற ஆசார்ய ஸ்ரீஸூக்திகளையும் மற்ற முக்கியமான ஸம்ப்ரதா யார்த்தங்களையுமெல்லாம் தமது சக்திக்கும் அறிவுக்கும் தக்க வாறு ஆசார்யன்பக்கல் அவசியம் கேட்டறியவேண்டும். இந்த நான்கு க்ரந்தங்களையும் காலக்ஷேபம் செய்யச் சக்தியற் றவர்கள் மூன்றாவது க்ரந்தத்தை மட்டுமாவது காலக்ஷேபம் செய்வது மிக அவசியம்.

### மூன்று ரஹஸ்யங்கள்

**திருமந்த்ரம்:**—இது எட்டு எழுத்துக்கள் கொண்டது. அதனால திருவஷ்டாக்ஷரமெனப் பெயர் பெற்றது. இது மந்த்ரங்கள் அனைத்திலும் சிறந்தது; பல விசேஷார்த்தங் களைக்கொண்டது; ஸகல பலன்களையும் அளிக்க வல்லது; ஸ்த்ரீகளும் நான்காம் வருணத்தாரும் இதை அநுஸந்திக்க லாம். ஆனால் அவர்கள் ப்ரணவத்தின் ஸ்தாநத்தில் 'அம்' என்ற அக்ஷரத்தை வைத்தே அநுஸந்திக்கவேண்டும்.

**த்வயம்:**— இது 25 அக்ஷரங்கள் கொண்டது; உபநிஷத் தில் தனித்து நின்ற இரண்டு வாக்கியங்களை ஒன்றுசேர்த்து மந்த்ரமாக்கி எம்பெருமானால் அருளப்பட்டது. இதை

ஒருகால் உச்சரித்தாலும் மோக்ஷம் வரையிலுள்ள பலனைப் பெறலாம். இது எல்லா வகுப்பினரும் அநுஸந்திக்க உரியது.

**சரம சுலோகம்:**—இது 32 அக்ஷரங்கள் கொண்டது. இது ஸ்ரீபகவத்கீதையில் கடைசியிலுள்ள ஸூக்தியாகும்; கண்ணனது திருப்பவளச் செவ்வாயினின்று வெளிவந்த மந்த்ரம் இது. இது ப்ரபத்தியை விதிக்கும் ஸூக்தியாகும்.

இந்த மூன்று ரஹஸ்யங்களும் முறையே 3, 6, 12 பதங்கள் கொண்டுள்ளன. இவற்றை ஆசார்யன் ஸமாச்ரயண காலத்தில் அர்த்தத்தோடு சிஷ்யனுக்கு உபதேசிப்பான். பின் சிஷ்யன் தினந்தோறும் இவற்றை ஜபம் செய்யவேண்டும். இவற்றின் தாத்பர்யமே ஸ்ரீதேசிகனுடைய ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரய ஸாரமென்னும் அரிய பெரிய ஸூக்தியில் முக்கியமாய் விளக்கப்படுகின்றது. சில்லறை ரஹஸ்யங்களிலும் சிலவற்றில் சுருக்கியும் சிலவற்றில் இவ்வர்த்தங்களில் ஒரு சங்கையும் வரவொட்டாது விளக்கியும் கூறப்பட்டுள்ளன. இவற்றின் அர்த்த விசேஷங்களை திருமந்திரச் சுருக்கு, துவயச் சுருக்கு, சரம சுலோகச் சுருக்கு—உரையிற் காண்க.

இனி ஸ்ரீவைஷ்ணவர் ஒவ்வொருவரும் அறியவேண்டிய தத்துவம், ஹிதம், புருஷார்த்தம் ஆகிய இவை விளக்கப்படுகின்றன:—

### தத்துவம்

தத்துவங்கள் மூன்று, அவையாவன:—சேதநம், அசேதநம், ஈசுவரன்: என்பவை.

### சேதனன்

அறிவுள்ள ஜீவாத்மா சேதனன் எனப்படுவான். இவனுக்கு ஜ்ஞாநம் ஒரு குணமாய் நிற்கும். இந்த ஜ்ஞாநம் தர்மபூதஜ்ஞாநமெனப்படும். ஜீவனுடைய ஸ்வரூபமும் ஜ்ஞாநமயமாகவே நிற்கும். ஆதலின் ஜீவன் தர்மிபூத ஜ்ஞாநமென்னப்படுவான். இந்த ஜீவாத்மா தனக்கு எப்பொழுதும் தோன்றிக்கொண்டேயிருப்பான். தன்னை நான் என்று அறியும்போது தர்மபூதஜ்ஞாநம் உதவவேண்டுமென்பதில்லை. ஆனால் ஜீவன் தன்னைத் தவிர வேறு எந்தப் பொருளையும் தன் தர்மபூதஜ்ஞாநத்தால் மட்டுமே அறிய

முடியும். தன் ஸ்வரூபத்தைத் தர்மபூத ஜ்ஞாநத்தைக் கொண்டும் அறியலாம். ஜீவன் அணுவாகவும் ஆநந்த ஸ்வ ரூபமாகவும் நிற்பவன்; சரீரத்திற்காட்டிலும் வேறுபட்டவன்; அழிவற்றவன்; எம்பெருமானுக்கு அடியனாகவே நிற்பவன்.

இத்தகைய ஜீவாத்மாக்கள் எண்ணற்றவர்; அவர்கள்— பத்தர், முக்தர், நித்யர் என மூவகைப்படுவர். அநாதியான கர்மபந்தத்திற்கு உட்பட்டு இந்த ஸம்ஸாரத்தில் உழல்பவர் பத்தர். கர்மபூமியில் நின்று ஸதாசார்ய ஸம்பந்தம் பெற்றுப் பக்தி-ப்ரபத்திகளுள் ஒன்றை அநுஷ்டித்துப் பின் மோக்ஷத் தைப் பெற்றவர் முக்தர். எம்பெருமானைப்போல் ஒருகாலும் கர்மஸம்பந்தமேயின்றி அவனுக்கு எப்பொழுதும் கைங்கர்யம் செய்துகொண்டேயிருப்பவர் நித்யர். அநந்த கருட விஷ்வக் ஸேநாதியர் இவ்வகுப்பைச் சேர்ந்தவர்.

### அசேதனம்

அறிவில்லாத வஸ்து அசேதனமென்னப்படும். அசேதநத் தால் கிடைக்கக்கூடிய பலனை அநுபவிப்பவன் சேதனனே. இந்த அசேதனம் த்ரிகுணம், காலம், சுத்தஸத்துவம் என மூன்று வகைப்படும்.

த்ரிகுணம்:—இதுவே மூலப்ரக்ருதி. இது ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் மூன்று குணங்களையுடையதாதலின் த்ரிகுண மெனப்படும். இந்த ப்ரக்ருதி எப்பொழுதும் மாறுபாட்டை (பரிணாமத்தை) அடைந்துகொண்டேயிருக்கும். இந்த ப்ரக் ருதியில் உள்ள மூன்று குணங்களும் ஸமமான அளவில் உள்ளபோது மஹாப்ரளயம் ஏற்படும். அந்தக் குணங்கள் ஏற்றத்தாழ்வை அடையும்போது இந்த ப்ரக்ருதி பலவகைத் தத்துவங்களாய் மாறுகின்றது. ப்ரக்ருதியில் ஏற்றத்தாழ் வுள்ள பாகம் மஹாந் என்னும் தத்துவமாக மாறுகின்றது. இந்த மஹாந், ஸத்துவம் முதலிய குணங்கள் மிகுத்து நிற்பது பற்றி ஸாத்துவிகம் ராஜஸம் தாமஸம் என மூன்றுவகைப் படும். மஹானிலிருந்து அஹங்காரம் என்னும் தத்துவம் பிறக்கின்றது. அதுவும் முற்கூறிய வகையில் மூன்று வகைப் படும்.

அவற்றில் ஸாத்துவிக அஹங்காரத்திலிருந்து இந்த்ரியங்கள் பதினொன்றும் உண்டாகின்றன. அவையாவன:—ஜ்ஞாநேந்த்ரியம் ஆறு (-மனம், காது, கண், நாக்கு, மூக்கு, உடல் என்பன), கர்மேந்திரியம் ஐந்து (-வாக்கு, கால், கை, பாயு, உபஸ்த்தம் என்பன) ஆகியவை. தாமஸாஹங்காரம் தந்மாத்ரங்கள் மூலமாய்ப் பூதங்களை உண்டாக்குகின்றது. அதன் க்ரமம் வருமாறு:— தாமஸ அஹங்காரத்திலிருந்து முறையே சப்த தந்மாத்ரம், ஆகாசம், ஸ்பர்ச தந்மாத்ரம், வாயு, ரூப தந்மாத்ரம், தேஜஸ், ரஸ தந்மாத்ரம், ஜலம். கந்த தந்மாத்ரம், பூமி: என்பன. தந்மாத்ரை என்பது முந்திய நிலை முழுதும் கழியாமலும் பிந்திய நிலை முழுதும் வராமலும் இருக்க நடுவிலுள்ள ஒரு நிலை. இந்நிலையிலுள்ள த்ரவ்யம் தந்மாத்ரம் எனப்படும். உதாஹரணம்:—ஸ்பர்ச தந்மாத்ரம் என்பது ஆகாசத்தின் நிலை முழுதும் நீங்காமலும் வாயுவின் நிலைமை முழுதும் வராமலுமுள்ள ஒரு நிலையுள்ள த்ரவ்யம். இந்த நிலை பாலின் தன்மை முழுதும் நீங்காமலும் தயிரின் தன்மை முழுதும் வராமலிருக்கும் நிலைமையைப் போன்றதாம்.

ராஜஸமான அஹங்காரம் மற்ற இரண்டு அஹங்காரங்களும் தத்தம் வேலையைச் செய்யும்போது அவற்றுக்குத் துணையாய் நின்று உதவி செய்யும்.

மற்றொரு வஸ்துவாக மாறுபடுந்தன்மையது ப்ரக்ருதியெனப்படும். மாறுபட்ட வஸ்து விக்ருதியெனப்படும். தான் மற்றொரு வஸ்துவாக மாறுபடுவதாகவும் மற்றொரு வஸ்துவின் மாறுபாடாகவும் உள்ளது ப்ரக்ருதி-விக்ருதியெனப்படும். இம்முறையில் மூலப்ரக்ருதியை ப்ரக்ருதியாகவும், பதினொன்று இந்த்ரியங்களையும் பூமியையும் விக்ருதியாகவும், மஹாந் முதல் கந்த தந்மாத்ரம் வரையில் உள்ளவற்றை ப்ரக்ருதி-விக்ருதிகளாகவும் அறிந்துகொள்க. நம் சரீரம் ப்ரக்ருதி. மஹாந், அஹங்காரம், ஐந்து பூதங்கள் ஆகிய இவற்றால் ஆகியது. இந்த்ரியங்களுக்கு இருப்பிடமாயுள்ளது.

**காலம்:—** காலம் என்பது எங்கும் பரந்து நிற்கும் ஒரே த்ரவ்யம். இதில் ஸத்துவம் முதலிய குணங்களில்லை. எதிர் நிகழ், கழிவு முதலிய வ்யவஹாரங்களுக்கு இதுவே காரண மாகும். நிமிஷம் விநாடி நாழிகை முதல் பரார்த்தம் வரை யிலுள்ள பாகங்களெல்லாம் இந்தக் காலத்தினுடையனவே. இக்கர்மலோகத்திலுள்ள மாறுபாடுகளெல்லாம் இந்தக் காலத்தின் நியமத்திற்கு உட்பட்டே எம்பெருமானுடைய ஸங்கல்பத்தால் நடப்பன. ஸ்ரீவைகுண்டத்தில் முன்பின் என்ற அளவிற்குக் காலம் உளதேயாயினும் அதன் ஸம்பந்த மின்றி அனைத்தும் எம்பெருமானது ஸங்கல்பத்தால் மட்டும் நடப்பனவாகும்.

**சுத்தஸத்துவம்:—** சுத்தஸத்துவமென்பது ரஜோகுணம் தமோகுணம் ஆகிய இரண்டுமின்றி ஸத்வ குணத்திற்கு மாத்திரம் ஆதாரமான ஒரு த்ரவ்[illegible]ண்டத்தி லுள்ள அனைவருடைய சரீரங்களும் [illegible]ண்டபம் கோபுரம் ப்ராகாரம் முதலிய ஸகல வஸ்துக்களும் இந்தச் சுத்தஸத்துவமயமானவை இந்த ஸத்துவம் ஸ்ரீவைகுண்டத் திலிருந்து மேலே எல்லையயின்றி எங்கும் பரவி நிற்கும். [கீழ்க் கூறிய தர்மபூதஜ்ஞாநமும் அசேதநத்தில் சேர்ந்ததே யாதலின் இங்கு நான்காவது அசேதநமாகக் கூறவேண்டியதே தாயினும், தர்ம பூதஜ்ஞாநமுடைய வஸ்து என்ற பொருள் கொண்ட சேதநம் என்ற பதத்தில் தர்மபூத ஜ்ஞாநம் விசே ஷணமாய் நிற்பதால் இங்குத் தனித்துக் கூறுதொழிந்தது.]

**ஈசுவரன்**

ஸ்ரீமந் நாராயணனே ஸர்வேசுவரன். இவன் எப்பொழு தும் மாறுபடாத தன்மையுடையவன்; ஜ்ஞாநஸ்வரூபமாய் நிற்பவன்; இங்குத்தான் இருக்கிறான் என்று தேசத்தால் அள விட்டுக் கூறமுடியாதவன்; இப்பொழுதுதான் இருக்கிறான் என்று காலத்தைக்கொண்டும் வரையறுக்க முடியாதவன்; இன்ன வஸ்துவின் ஸ்வரூபமாக மட்டும் இருக்கிறான் என்று வஸ்துவாலும் எல்லையிட்டுப் பேசமுடியாதவன்; எவ்விடத்தி லும் எக்காலத்திலும் எல்லா வஸ்துக்களின் ஸ்வரூபமாகவும் நிற்பவன்; ஆனந்த ஸ்வரூபமாய் விளங்குபவன். இவனிடம்

தோஷம் ஒன்றும் தட்டாது சேதநம் அசேதநம் ஆகிய ப்ரபஞ்சம்முழுதும் இவனுக்குச் சரீரமாய் நிற்கும். இவன் அனைவருக்கும் உபாயமாகவும் பலனாகவும் நிற்கின்றான்; அனைத்தைப் படைப்பவன்; காப்பவன்; அழிப்பவன்; எல்லோரினும் மேம்பட்டவன்; அனைத்துக்கும் ஆதாரமாய் நிற்பவன்; அனைத்தையும் அடக்கியாள்பவன்; அனைத்தினுடைய பலனையும் அனுபவிப்பன்; தன்னை அடைந்தவருடைய ஸகல கர்மங்களையும் போக்குபவன்; ஸகல வேதங்களாலும் போற்றப்படுபவன்; ஸகல கர்மங்களாலும் தானே ஆராதிக்கப்பட்டுப் பலனைத் தருபவன்; ப்ரஹ்மா முதலிய ஸகல தேவர்களையும் படைப்பவன். அவர்கள் அனைவரும் இவன் கட்டளைக்கு அஞ்சி நடப்பவர்களே. இவன் தன் ஸ்வரூபத்தாலும் திருமேனியாலும் குணங்களாலும் தன்னையொழிந்த அனைத்திலும் மேம்பட்டவன். இயற்கையாகவே ஸகல கல்யாண குணங்கள் நிறைந்தவன்; இவன் விரும்பிப் பெறமுடியாதது ஒன்றுமில்லை. எந்த நிலையிலும் பிராட்டி இவனைவிட்டு க்ஷணமும் பிரிவதில்லை.

இவனுடைய திருமேனி பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என ஐந்து வகைப்படும். பரரூபம்-ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியுள்ள பரவாஸுதேவனுடைய ரூபம். வ்யூஹம்:—வாஸுதேவன் ஸங்கர்ஷணன் ப்ரத்யும்நன் அநிருத்தன் எனப்படும் ரூபங்கள். விபவம்:—மத்ஸ்யம் கூர்மம் முதலிய அவதாரங்கள். அந்தர்யாமி:—எல்லோருடைய ஹ்ருதயத்திலும் ஸூக்ஷ்மமான உருவத்துடன் நிற்கும் நிலை. அர்ச்சை:—திவ்ய தேசங்களில் திருமேனி கொண்டு எழுந்தருளியுள்ள நிலையும், மற்றும் பக்தர்களின் வேண்டுகோளின்படி அவரவர் விருப்பத்திற்கேற்றவாறு திருமேனிகொண்டு நிற்கும் நிலையும்.

பெரிய பிராட்டியாகிய லக்ஷ்மியும் ஈசுவர தத்துவத்தில் சேர்ந்தவளே. இவ்விருவரையும் தவிர மற்ற அனைவரும் ஜீவதத்துவத்திற் சேர்ந்தவர்களேயாவர். பிராட்டியும் எம்பெருமானைப்போல் எங்கும் நிறைந்து நிற்பவள்; ஸர்வேசுவரனைப்போல் நமக்கு உபாயமாகவும் பலனாகவும் நிற்கின்

ருள். உலகில் புத்திரனுக்கு நன்மையைச் செய்வதில் தந்தையும் தாயும் தங்களுக்குள் ஒரு வரையறை ஏற்படுத்திக்கொண்டு தத்தம் கடமைகளைச் செய்வதுபோல் உலகிற்கே தந்தையும் தாயுமான எம்பெருமானும் பிராட்டியும் நமது க்ஷேமத்தை நாடித் தங்களுக்குள் சில அம்சங்களைத் தமது ஸங்கற்பத்தால் வகுத்துக் கொண்டிருக்கின்றனர். இதைக்கொண்டு அவ்விரு தத்துவங்களைப் பிரித்துப் பார்ப்பது நமக்கு ஏற்றதன்று. ப்ரபத்தியை அநுஷ்டிக்கும் போது முதலில் பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு ப்ரபத்தியைச் செய்தே அவ்விருவரையும் பின்பு சரணமடைய வேண்டும். புருஷகாரமாவது:— பலன் தரவல்ல சேதநனை நெருங்குவதற்குப் பலனை விரும்புமவனால் உபாயமாக வரிக்கப்பட்ட மற்றொரு சேதநன்.

### ஹிதம்

ஹிதமாவது:— மோக்ஷத்திற்கு ஸாதநமாக அநுஷ்டிக்கப்படும் உபாயம். ஆகவே, மோக்ஷத்திற்கு உபாயமான பக்தியும் ப்ரபத்தியும் ஹிதமெனப்படும்.

**பக்தியோகம்:**— இது பலவகைப்படும். இதை மோக்ஷம் பெறும் வரையில் அநுஷ்டித்துக்கொண்டேயிருக்க வேண்டும். பலன் பெற நெடுங்காலம் கழியவேண்டும். அங்கங்களுடன் அநுஷ்டிக்கும் முறை மிகக் கடினமானது. இக்காலத்தில் இந்தப் பக்தியோகத்திற்கு அதிகாரிகள் இலரென்றே கூறலாம். ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வாரே இதற்கு அதிகாரிகளாவர்.

**ப்ரபத்தி:**— அத்தகைய பக்தியோகத்தை அநுஷ்டிக்க இயலாதவர் ப்ரபத்தியை மோக்ஷோபாயமாகக் கொள்வர். இந்த ப்ரபத்தியே பரந்யாஸம், சரணாகதி, பரஸமர்ப்பணம், உபாயாநுஷ்டாநம் என்ற பெயர்களால் வழங்கும். (ஸாதாரண அதிகாரிகள் இதை அத்ருஷ்டம் என்றும் வழங்குவதுண்டு.) இந்த ப்ரபத்தி (1) ஸ்வநிஷ்டை (2) உக்திநிஷ்டை (3) ஆசார்யநிஷ்டை (4) பாகவதநிஷ்டை என நால் வகைப்படும்.

இவற்றில் ஸ்வநிஷ்டை தற்காலம் மிகச் சிலருடைய அநுஷ்டாநத்திலேயே வருகின்றது. உக்தி நிஷ்டையும் ஆசார்யநிஷ்டையும் ஸ்ரீமத் - அஹோபில மடத்தில் ஸ்ரீமத் - அழகியசிங்கர் ஸந்நிதியில் அநுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. பெரும்பாலும் ஆசார்யநிஷ்டையும் சிறுபான்மை பாகவத நிஷ்டையும் ஸ்ரீமத் - முநித்ரய ஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீமத் - ஸ்வாமிகள் அனைவர் ஸந்நிதியிலும் அநுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. ஆகவே இந்த நால்வகையினுள் ஒன்றைக் கைக்கொள்ளாவிடில் மோக்ஷம் பெற முடியாதென்பது நம் பூர்வாசார்யர்களின் த்ருடமான ஸித்தாந்தம். இந்த ப்ரபத்தியைக் குறித்த பலனுக்காக ஒருமுறை அநுஷ்டித்தால் விரும்பிய பலனை நினைத்த காலத்தில் பெறலாம். ஒரே பலனுக்காக இதை இருமுறை அநுஷ்டிக்கக்கூடாது. இச்சரீரம் உள்ளவரையில் கர்மபலன்களை அநுபவித்துச் சரீரமுடிவில் மோக்ஷத்தைப் பெறவிரும்பி ப்ரபத்தியை அநுஷ்டித்தால் அங்ஙனமே பெறலாம். இதற்கு த்ருப்த ப்ரபத்தி யென்று பெயர். இச்சரீரம் உள்ளவரையிலும் கூட ஸம்ஸாரபந்தத்தைப் பொறுக்காமல் இந்த க்ஷணமே மோக்ஷம் பெறவேண்டுமென்று விரும்பி ப்ரபத்தியை அநுஷ்டித்தால் அந்த க்ஷணமே மோக்ஷம் பெறுவதில் சிறிதும் ஐயமில்லை. இதற்கு ஆர்த்த ப்ரபத்தி யென்று பெயர். இங்ஙனம் ஸகல பலன்களையும் நினைத்தபோதே அளிக்கும் சக்தி இந்த ப்ரபத்தி ஒன்றுக்கே உளது. இதற்கு ஜாதி நியமமில்லை. எல்லாச் சாதியினரும் இதை உபாயமாகப் பற்றலாம். எல்லா ப்ராணிகளுக்கும் இது மோக்ஷோபாயமாக ஆகும். இதன் அங்கங்களின் விளக்கத்தை அடைக்கலப் பத்து, 5ஆம் பாசுரத்தில் காண்க.

**ப்ரபந்நனது கடமை:**— ப்ரபத்தியை அநுஷ்டித்தவன் ப்ரபந்நன் எனப்படுவான். இவன் மறுபடி அநுஷ்டிக்க வேண்டிய உபாயம் ஒன்றுமில்லை. ஒரு கவலையுமின்றி மோக்ஷத்தை எதிர்பார்த்து நிற்க வேண்டியதே. ஆனால் தனக்கு ஏற்பட்ட நித்ய - நைமித்திக கர்மங்களை ஒருபோதும் கைவிடக்கூடாது. அவற்றை ஒரு பலனுக்கு ஸாதநமாகச்

செய்யாது எம்பெருமானுடைய உகப்புக்காகவே செய்ய வேண்டும். எம்பெருமான் திருவடிகளில் பக்தியையும் ஜ்ஞாநத்தையும் தவிர வேறு ஒரு பலனையும் விரும்பக் கூடாது. தன் சக்திக்கு ஏற்றவாறு பகவத்கைங்கர்யங்களைச் செய்துகொண்டும் ஆசார்யஸ்ரீஸூக்திகளில் பரிசயம் செய்து கொண்டும் அர்ச்சாரூபியாய் எழுந்தருளியுள்ள திவ்யதம்பதி களிடம் ஈடுபட்டும் நிற்கவேண்டும். இதுகாறும் வினை கழிந்த நிலையை நினைந்து மனம் வருந்தாது, இப்பொழுது ஸ்தாசார்ய கடாக்ஷத்தால் வந்த பாக்யத்தை நினைத்து மகிழ வேண்டும். ஆஹாரநியமத்திற் கூறியபடி ஸாத்துவிகமான உணவையே உண்டு ஸத்துவகுணம் தலையெடுத்து நிற்கப் பெறவேண்டும். தினந்தோறும் தன் க்ருஹத்தில் பகவ தாராதநம் இல்லாமல் உணவு கொள்ளக்கூடாது பாகவதர் களுக்கும் தன்னைத் தாஸனாக அநுஸந்தித்து ஆசார்யனுக்கும் பாகவதர்களுக்கும் இயன்றவரையில் கைங்கர்யம் செய்ய வேண்டும். தன்பெருமை பேசக்கூடாது. பிறரைப் பழிக் கக்கூடாது. எப்பொழுதும் த்வயத்தை அநுஸந்திக்க வேண்டும், உலக ஸுகங்களை வெறுத்து எம்பெருமானையே நாடவேண்டும். ஆசார்யன் செய்த மஹோபகாரத்தை எப்பொழுதும் நினைக்கவேண்டும். மனம் வாக்கு காயம் ஆகிய முக்கரணங்களாலும் பாகவதாபசாரம் புரியக்கூடாது. வேறு தெய்வத்தின் ஸம்பந்தமே கூடாது. மரணகாலத்தில் ஸகல இந்த்ரியங்களும் ஒடுங்கிப் பேசவும் முடியாத நிலைமை யில் உற்றார் உறவினர் இவர்களில் யாரும் தனக்காக வேறு தெய்வத்தை நாட விரும்பினாலும் அதை அநுமதிக்கக் கூடாது. வேறு தெய்வத்தின் ஸம்பந்தம் பாகவதாபசாரம் ஆகிய இரண்டுமே ப்ரபத்தியின் பெருமையைக் கூடக் குறைக்க முற்பட வல்லன. ஆதலின் இவ்விரண்டிலும் மிக்க கவனத்துடன் நடக்கவேண்டும்.

**ப்ரபந்நனுக்குப் பாபமின்மை:—** ப்ரபத்தியின் பெரு மையை அறிந்து அதை உபாயமாகப் பற்றிய ப்ரபந்நன் எம்பெருமானிடம் அளவற்ற அன்பு கொண்டவனாதலின் அவன் திருவுள்ளத்திற்கு எதிராக அவன் கட்டளையை மீறி

மனப்பூர்வமாய்ப் பாபம் செய்யத் துணியமாட்டான். அறியாமற் செய்யும் பாபங்கள் இவனிடம் சேரா. அவை ப்ரபத்தியின் பெருமையால் கழிந்துபோம். தேசம் காலம் முதலிய நிமித்தங்களின் தோஷத்தால் புத்திபூர்வமாய்ப் பாபம்செய்ய நேரிடினும், அதற்கு வருந்திப் பின்னும் பாபம் செய்யாது ப்ராயச்சித்தம் செய்ய முற்பட்டுச் செய்து முடித்தால் பாபம் கழிந்துபோம். சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட பெரிய ப்ராயச்சித்தம் செய்யச் சக் வனுக்கு அதற்காகப் பின்னும் ப்ரபத்தி செய்வதே ப்ராயச்சித்தமாகும். இங்ஙனம் செய்யாதவர்களையும் எம்பெருமான் இக் கர்ம பூமியிலேயே தண்டித்துப் பரிசுத்தனுக்குகின்றான். எவ்வகையினும் ப்ரபந்நனுக்கு மோக்ஷம் நிச்சயம்; நரகமில்லை

**ப்ரபந்நனுக்கு மரணத்தில் நியமமின்மை:—** ப்ரபந்நன் நல்ல க்ஷேத்ரத்தில் உத்தராயணத்தில் சுக்ல பக்ஷத்தில் பகலில் மரிக்க வேண்டும் என்ற நிர்ப்பந்தமில்லை. மற்ற ஸாதாரண அதிகாரிகளுக்கு இவை அவசியமானவை. ப்ரபந்நனுக்கு எந்த இடத்தில் எப்பொழுது மரணம் வரினும் யாதும் குறையில்லை.

**ஜீவன் சரீரத்தினின்று வெளியேறும் முறை:—** ஸர்வேசுவரன் ஜீவனைச் சரீரத்தினின்று அகற்ற முற்படும்போது முதலில் வாக்கு முதலிய கர்[illegible]ங்களையும் கண் முதலிய ஜ்ஞாநேந்த்ரியங்களையும் மனத்தில் சேர்க்கின்றான். இத்தகைய மனத்தை ப்ராணவாயுவுடன் சேர்த்து அவையனைத்துடனும் கூடிய ப்ராணவாயுவை ஜீவனோடு சேர்க்கின்றான். ஜீவனுடைய சரீரத்தில் முதுகின் மேற்புறத்தில் தூண் போன்ற மூன்று எலும்புகள் ஒன்றுகூடி நிற்கின்றன. அவை 'த்ரிஸ்தூணம்' என்று வழங்கும். எம்பெருமான் அவற்றைக் கடைந்து அங்கிருந்து ஐந்து பூதங்களின் ஸூக்ஷ்மாம்சங்களை எடுக்கின்றான். அவன் த்ரிஸ்தூணத்தைக் கடையும்போது ஜீவாத்மாவுக்கு உண்டாகும் வேதனையைப் போக்க அவனைத் தன்மீது அணைத்துக் கொள்கின்றான். இதுவரையில் உள்ள அம்சங்கள் மரிக்கும் அனைவருக்கும் பொதுவாகும். இதன் பின் ப்ரபந்நனை ஜீவனைச் சரீரத்தினின்று கிளம்பி நிற்கும்

101-நாடிகளில் வேறு கதியில் செல்லும் 100-நாடிகளா லின்றி ஸுஷும்நை, ப்ரஹ்ம நாடி, மூர்த்தந்ய நாடியெனப் படும் 101-வதான நடுநாடி வழியாய் வெளியேற்றி அர்ச்சி ராதி மார்க்கத்தில் நடத்திச் செல்கின்றான்.

**அர்ச்சிராதி மார்க்கம்:**— சரீரத்திலிருந்து தனிநாடிவழியே வெளியேறி வந்த ஜீவனை அக்நி தேவதை, பகலின் தேவதை, சுக்லபக்ஷ தேவதை, உத்தராயண தேவதை, வர்ஷ தேவதை, வாயு தேவதை, ஸூர்யன், சந்த்ரன், மின்னல் தேவதை, வருணன், இந்த்ரன், ப்ரஹ்மா ஆகிய இவர்கள் வரவேற்றுத் தக்க உபசாரங்களைச் செய்து தத்தம் எல்லைகளைக் கடத்தி வழிநடத்தி விடுவார்கள். இதுவே அர்ச்சிராதி மார்க்க மெனப்படும்.

## புருஷார்த்தம்

**பரம பதம் சேர்தலும் பரிபூர்ண பகவதநுபவமும்:**—ப்ரபந்நனான ஜீவாத்மா அர்ச்சிராதி கதி முடிந்தபிறகு ஸ்ரீவைகுண்டத்தை நெருங்குவான்; அங்குச் செல்வதற்காக அதுகாறும் ப்ரபத்தியின் ப்ரபாவத்தால் நிறுத்திவைக்கப்பட்ட ஸூக்ஷ்ம சரீரத்தைப் போகவிடுவான்; பின் அங்கு உள்ள விரஜை யென்னும் அம்ருதமயமான நதியைத் தன் ஸங்கற்பத்தாலே தாண்டுவான். உடனே எம்பெருமான் ப்ரக்ருதி ஸம்பந்த மில்லாத சுத்தஸத்துவமயமான சரீரத்தை அவனுக்குக் கொடுப்பான். பின் அவன் அங்குள்ள ஐரம்மதீயம் என்னும் திவ்ய தடாகத்தைக் கடந்து ஸோமஸவநம் என்னும் அரச மரத்தை அடைவான். அங்கு 500 திவ்யாப்ஸரஸ் ஸ்த்ரீகள கையில் மாலை, மை, வாஸனைப்பொடி முதலிய உபசாரப் பொருள்களைக் கொண்டு இவனை வரவேற்பர். பின் அவர்கள் இவனுக்கு ப்ரஹ்மாலங்காரம் செய்வித்துச் சுத்த ஸத்துவமயமான மணம் சுவை தேஜஸ் ஆகியவற்றை இவனிடம் புகச்செய்வார்கள். பின் அங்குள்ள பல நித்ய ஸூரிகள் எதிர்கொண்டழைப்பர். அங்கிருந்து திவ்ய கோபுரத்திற்குச் சென்று அங்குக் காவல் புரிந்து நிற்கும் இந்த்ரன் ப்ரஜாபதி என்னும் த்வாரபாலகர்களை நெருங்க, அங்குள்ள நித்யஸூரிகளும் மஹர்ஷிகளும் இவனைத் தத்தம் இடத்திற்கு

எழுந்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்து இவன் திருவடிகளைத் திவ்யதீர்த்தத்தால் கழுவிநிற்பர்; பின்னும் பல திவ்ய ஸ்த்ரீகள் வாஸனைப்பொடி பூர்ணகும்பம் தீபம் முதலியவற்றை ஏந்திவந்து உபசரிப்பர். பின் இவன் ஆநந்தமயமான திவ்யமண்டபத்தில் ப்ரவேசிப்பான். அங்கு நித்யஸூரிகளும் முக்தர்களும் பகவத்குணங்களைப் பேசி மகிழும் கோஷ்டியைக் கண்டு களிப்பான். அந்தக் கோஷ்டியில் இவனுடைய ஆசார்யர்கள் இவனைக் கண்டு தாம் செய்த க்ருஷி பலித்ததெனப் பெருமிதம்கொண்டு நிற்பர். இவன் அவர்கள்பால் தன் நன்றியைக் காட்டி வணங்கி நிற்பான். பின் அந்தத் திவ்ய மண்டபத்தில் திவ்ய பர்யங்கத்தில் ஆதிசேஷன்மீது பெரியபிராட்டி, பூமிதேவி, நீளாதேவி ஆகிய நாச்சிமாருடன் எழுந்தருளியுள்ள ஸ்ரீமந்நாராயணனைக் கண்ணாரக் கண்டு அவனது ரத்ந பர்யங்கத்தில் ஏறித் திவ்ய தம்பதிகளுடன் கலந்துபேசி இவன் பேராவல் கொண்டிருந்தபடியே, இதுகாறும் இவன் இழந்திருந்த இழவெல்லாம் தீர அவனைக் கண்டு அவனைப்போன்ற குணங்களைப் பெற்று அவன் திருவடிகளின் கீழே அநந்த—கருட—விஷ்வக்ஸேநர் முதலிய நித்யஸூரி கோஷ்டியுள் புகுந்து கலந்து, எல்லாவிடத்திலும் எல்லாக் காலங்களிலும் எல்லா நிலைமைகளிலும் எல்லா வகைக் கைங்கர்ய ஸித்தியையும் பெற்று, ஆநந்தக் கடலுள் மூழ்கி நிற்பான். இவனுக்கு அங்கிருந்து ஒரு போதும் திரும்புதல் இல்லை. இவன் தன் இஷ்டப்படி நடப்பதும் பகவத்கைங்கர்யத்தில் அடங்கியதே. தன் இச்சையுடன் ப்ரக்ருதி மண்டலத்திற்கு வந்து சென்றாலும் இவனுக்குச் சிறிதும் பகவதநுபவ ரஸத்திற்கு இடையூறென்பதே யில்லை. இம்முறையைக்கொண்டே இவனுக்குத் திரும்புதல் இல்லையென்பது. இத்தகைய பகவதநுபவமே பரிபூர்ண ப்ரஹ்மாநுபவமெனப்படும். இதுவே பரம புருஷார்த்தமாம்.

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்..*

ஸ்ரீ:

அனுபந்தம் 2

# ஆசார்ய லக்ஷணம்

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் தாம் அருளிச் செய்துள்ள ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம் என்னும் க்ரந்தத்தில் ஆசார்ய லக்ஷணம், ஆசார்யர்களுடைய பெருமை முதலியவைகளை விசதமாக விளக்கியுள்ளார்.

ஆழ்வார்- ஆசார்யர்கள் ஸாக்ஷாத் ஸ்ரீமந் நாராயணனுடைய அம்சம் என்பதை இதிஹாஸ புராணங்களிலிருந்தும், ச்ருதி-ஸ்ம்ருதிகளிலிருந்தும் ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களிலிருந்தும் அனேக விதமான பிரமாணங்களுடன் குருபரம்பராஸாரம் என்னும் அதிகாரத்தில் எடுத்துக் காட்டியுள்ளார்.

ஆசார்யக்ருத்யாதிகாரம் என்னும் அதிகாரத்தில் ஆசார்யனுடைய லக்ஷணங்களை (ஸ்ரீஸாத்வத, பகவத்கீதா, வசிஷ்ட-கராள ஸம்வாத, சாண்டில்ய ஸ்ம்ருதி, சாத்யகி தந்த்ராதிகளிலிருந்து) தக்கப் பிரமாணங்களுடன் விளக்கியுளளார்.

அதாவது, கருணையையே செல்வமாகக் கொண்ட நம் ஆசார்யர்கள் தத்வம், ஹிதம் புருஷார்த்தம் என்று மூவகையாக வகுக்கப்பட்ட செல்வத்தை எம்பெருமானிடம் எப்போதும் பக்தி நிறைந்த தைவ ப்ரகிருதிகளுக்கு "பரீக்ஷாதி மூல குண நிச்சய பூர்வகமாக" (பற்பல வகைகளில் பரீக்ஷை செய்து பார்த்து, தகுதியுடையவன் என்று நிச்சயம் செய்து கொண்டு) மூன்றாவது மனிதன் அறியாதபடி அளிக்கிறார்கள் (உபதேசிக்கிறார்கள்) என்றும், அஸுரத் தன்மையுடையவர்களிடமிருந்து மறைத்தும் வைப்பார்கள் என்றும் ஆசார்யர்களுடைய சீரிய லக்ஷணங்களை விளக்கியுள்ளார்.

மேலே குறிப்பிடப்பட்ட ஆசார்ய க்ருத்யாதிகாரத்தில் அடங்கியுள்ள ஸாரத்தை அதிகார சங்கிரகம் 37-வது, 50-வது பாசுரங்கள் நன்கு விளக்குகின்றன. இவைகளையும் ஆசார்யனின் பெருமை, உபகாரம், கடமை முதலியவைகளை விளக்கும் இன்னும் சில தேசிகப் பிரபந்த பாசுரங்களையும் கீழே கொடுத்துள்ளோம்.

**ஆசார்யன் செய்யும் உபகாரம்**

மருளற்ற தேசிகர் வானுகப்பாலிந்த வையமெலாம்
இருளற்று இறைவனிணையடி பூண்டுயவெண்ணுதலால்
தெருளுற்ற செந்தொழிற்செல்வம் பெருகிச் சிறந்தவர்பால்
அருளுற்ற சிந்தையினால் அழியாவிளக்கேற்றினரே

—*அதிகார சங்கிரகம் 37*

**முதலாழ்வார்களின் உதவி**

*பாட்டுக்குரிய பழையவர் மூவரைப் பண்டொருகால்
மாட்டுக்கருள்தருமாயன் மலிந்து வருத்துதலால்
நாட்டுக்கிருள்செக நான்மறை யந்தி நடைவிளங்க
வீட்டுக்கிடைகழிக்கே வெளிகாட்டுமம் மெய்விளக்கே.

—*அதிகார சங்கிரகம் 50*

**ஆசார்யர்களின் வழியைப் பற்றினமை**

கடலமுதத்தைக் கடைந்து சேர்த்த
திருமாலடி காட்டிய, நம்—
தேசிகர்தம் நிலைபற்றிச் சேர்ந்தோமே.

—*அமிருத ரஞ்ஜனி 2*

**ஆசார்ய ஸ்ரீஸூக்திகளின் பெருமை**

உயிருமுடலும் உடலாகவோங்கித்
தயிர்வெண்ணெய்தாரணி யோடுண்டான்—பயிரில்
களைபோல் அசுரரைக் காய்ந்தான் தன்கையில்
வளைபோலெம்மாசிரியர் வாக்கு.

—*அமிருத ரஞ்ஜனி 5*

**ஆசார்யர்கள் உபதேசித்த அர்த்தங்கள்**

உத்திதிகழும் உரைமூன்றின் மும்மூன்றும்
சித்தமுரணத் தெளிவித்தார்—முத்தி தரும்-

மூலமறையின் முடிசேர் முகில்வண்ணன்
சீலமறிவார் சிலர்.

—அமிருத ரஞ்ஜனி 7

### ஆசார்யனது உபகாரம்

தத்துவங்களெல்லாம் தகவாலறிவித்து
முத்திவழி தந்தார் மொய்கழலே—அத்திவத்தில்-
ஆரமுதம் ஆருமிருநிலத்திலென்றுரைத்தார்
தாரமுதலோதுவித்தார் தாம்.

—அமிருத ரஞ்ஜனி 9

காரணமாயுயிராகி அனைத்துங்காக்கும்
கருணைமுகில் கமலையுடனிலங்குமாறும்
நாரணனார் வடிவான வுயிர்களெல்லாம்
நாமென்று நல்லடிமைக்கேற்குமாறும்
தாரணிநீர் முதலான மாயை காலம்
தனிவானென்றிவை உருவாந் தன்மைதானும்
கூரணி சீர்மதியுடைய குருக்கள் காட்டக்
குறிப்புடன் நாம்கண்டவகை கூறினோமே.

—அமிருத ரஞ்ஜனி 11

அப்படிநின்ற அமலன் படியெல்லாம்
இப்படி எம்முள்ளத்தெழுதினார்—எப்படியும்
ஏரார் சுருதியொளியால் இருள் நீக்கும்
தாராபதியனையார் தாம்.

—அமிருத ரஞ்ஜனி 12

வண்மையுகந்த அருளால் வரந்தரும் மாதவனார்
உண்மையுணர்ந்தவர் ஓதுவிக்கின்ற உரைவழியே
திண்மைதருந் தெளிவொன்றால் திணியிருள் நீங்கிய நாம்
தண்மை கழிந்தனம் தத்துவங் காணுந் தரத்தினமே

— அமிருத ரஞ்ஜனி 16

நாராயணன்பரன் நாம் அவனுக்கு நிலையடியோம்
சோராதனைத்தும் அவனுடம்பென்னுஞ் சுருதிகளால்
சீரார் பெருந்தகைத் தேசிகர் எம்மைத் திருத்துதலால்
தீராமயலகற்றும் திறம்பாத் தெளிவுற்றனமே.

—அமிருத ரஞ்ஜனி 17

அந்தமிலாதிதேவனழிசெய்தடைத்த
அலைவேலையோதமடையச்
செந்தமிழ் நூல்வகுத்த சிறுமாமனிச்சர்
சிறுகைச் சிறுங்கையது போல்
சந்தமெலாமுரைப்ப இவையென்று தங்கள்-
இதயத்தடக்கி, அடியோம்-
பந்தமெலாமறுக்க அருள் தந்துகந்து
பரவும் பொருள்கள் இவையே.

—அமிருத ரஞ்ஜனி 23

திருமாலடியிணையே திண்சரணக் கொண்டு
திருமாலடியிணையே சேர்வார்—ஒருமால்-
அருளால் அருளாத வானோர்கள் வாழ்ச்சி
அருளால் நமக்களித்தாராய்ந்து.

—அமிருத ரஞ்ஜனி 33

திருமாலடியிணை சேர்ந்து திகழ்ந்த அடிமை பெறத்
திருநாரணன் சரண் திண்சரணகத் துணிந்தடைவோர்
ஒருநாளுரைக்க உயிர்தரு மந்திரமோதிய நாம்
வருநாள் பழுதற்று வாழும் வகையதில் மன்னுவமே.

—அமிருத ரஞ்ஜனி 35

## ஆசார்ய-சிஷ்யர்களின் ஸம்பந்தம்

இன்பத்திலிறைஞ்சுதலிலிசையும் பேற்றில்
இகழாத பல்லுறவிலிராகம் மாற்றில்
தன்பற்றில் வினைவிலக்கில் தகவோக்கத்தில்
தத்துவத்தை யுணர்த்துதலில் தன்மையாக்கில்
அன்பர்க்கே யவதரிக்குமாயன் நிற்க
அருமறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு
துன்பற்ற மதுரகவி தோன்றக் காட்டும்
தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே.

—அதிகார சங்கிரகம் 2

## ஆசார்ய பரம்பரை

*என்னுயிர் தந்தளித்தவரைச் சரணம் புக்கு
யானடைவே அவர்குருக்கள் நிறைவணங்கிப்

பின்னருளாற் பெரும்பூதூர்வந்த வள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணக்கால்நம்பி
நன்னெறியை யவர்க்குரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்
இன்னமுதத் திருமகளென்றிவரை முன்னிட்டு
எம்பெருமான்திருவடிகள் அடைகின்றேனே.

—அதிகார சங்கிரகம் 3

### ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸூக்திகளில் பரிசயம்

ஆரணநூல்வழிச் செவ்வை அழித்திடுமைதுகர்க்கு, ஓர்-
வாரணமாய் அவர் வாதக்கதலிகள் மாய்த்த பிரான்
ஏரணிகீர்த்தி இராமானுசமுனி இன்னுரைசேர்
சீரணிசிந்தையினோம் சிந்தியோமினித் தீவினையே.

—அதிகார சங்கிரகம் 4

### ஆளவந்தாரின் உபகாரம்

நீளவந்து இன்று விதிவகையால் நினைவொன்றிய நாம்
மீளவந்து இன்னும் வினையுடம்பொன்றி விழுந்துழலாது
ஆளவந்தாரென வென்றருள்தந்து விளங்கியசீர்
ஆளவந்தாரடியோம் படியோமினி அல்வழக்கே.

—அதிகார சங்கிரகம் 5

### நாதமுனிகளைத் தொழும் பெருமிதம்

காளம் வலம்புரி யன்ன நற்காதலடியவர்க்குத்
தாளம் வழங்கித் தமிழ்மறை இன்னிசை தந்த வள்ளல்
மூளுந் தவநெறி மூட்டிய நாதமுனிகழலே
நாளுந் தொழுதெழுவோம் நமக்கார் நிகர் நானிலத்தே

—அதிகார சங்கிரகம் 6

### ஆசார்யனது உபகாரம்

*ஆளுமடைக்கலமென்றெமை அம்புயத்தாள்கணவன்-
தாளிணை சேர்ந்து, எமக்கும்மவை தந்த தகவுடையார்
மூளுமிருட்கள் விளமுயன்று ஓதிய மூன்றினுள்ளம்
நாளுமுகக்கவிங்கே நமக்கோர் விதி வாய்க்கின்றதே.

—அதிகார சங்கிரகம் 7

*திருவுடன் வந்த செழுமணி போல் திருமாலிதயம்-
மருவிடமென்ன, மலரடி சூடும் வகைபெறுநாம்
கருவுடன் வந்த கடுவினையாற்றில் விழுந்தொழுகாது
அருவுடன் ஐந்தறிவார் அருள் செய்ய அமைந்தனரே.

—அதிகார சங்கிரகம் 4

இதுவழி யின்னமுதென்றவர் இன்புலன் வேறிடுவார்
இதுவழி யாமலவென்றறிவார் எங்கள் தேசிகரே
இதுவழி எய்துகவென்று உகப்பாலெம்பிழை பொறுப்பார்
இதுவழி யாமறையோரருளால் யாமிசைந்தனமே.

—அதிகார சங்கிரகம் 53

*மூலங்கிளையென ஒன்றிரண்டான மொழியிரண்டும்
மேலொன்றிலையென நின்ற அவ்வித்தகன்தன்னுரையும்
காலங்கழிவதன் முன்னம் கருத்துறக் கண்டிடவே
ஞாலம் புகழுநந்தேசிகர்தாம் நமை வைத்தனரே.

—அமிருதாசுவாதினி 1

ஆசார்யன் கருணை

பரக்கும்புகழ்வரும் பைம்பொருள்வாய்த்திடும், பத்தர்களாய்
இரக்கின்றவர்க்கிவை யீந்தால் அறமுளதென்றியம்பார்
கரக்குங் கருத்துடைத் தேசிகர் கன்றெனை நம்மையெண்ணிச்
சுரக்குஞ் சுரவிகள்போல் சொரிகின்றனர் சொல்லமுதே.

—அமிருதாசுவாதினி 14

ஆசார்யோபதேசத்தின் பெருமை

பொங்குபுன லாறுகளிற் புவன மெல்லாம்
பொற்கழலா லளந்தவன்தன் தாளால் வந்த
கங்கையெனும் நதிபோலக் கடல்களேழில்
கமலைபிறந்து அவனுகந்த கடலேபோலச்
சங்குகளில் அவனேந்துஞ் சங்கே போலத்
தாரிலவன் தண்டுளவத்தாரே போல
எங்கள் குலபதிகளிவை மேலாமென்றே
எண்ணிய நல்வார்த்தைகள் நாமிசைகின்றேமே.

—அமிருதாசுவாதினி 25

*காசினியின் மணியனைத்துங் காயாவண்ணன்
கடைந்தெடுத்த கவுத்துவத்தின் சீர்மைக் கொவ்வா

காசிமுதலாகிய நன்னகரியெல்லாம்
கார்மேனி யருளாளர் கச்சிக் கொவ்வா
மாசில்மனந் தெளிமுனிவர் வகுத்த வெல்லாம்
மாலுகந்த வாசிரியர் வார்த்தைக் கொவ்வா
வாசியறிந்திவை யுரைத்தோம் வையத்துள்ளீர்
வைப்பாக விவைகொண்டு மகிழ்மினீரே.

—அமிருதாசுவாதினி 27

சடையன் திறலவர்கள் பெருஞானக் கடலதனை
இடையமிழாது கடக்கினும் ஈதளவென்றறியார்
விடையுடனேழன்றடர்த்தவன் மெய்யருள் பெற்ற நல்லோர்
அடையவறிந்துரைக்க (வவ்) அடியோமுமறிந்தனமே.

—அமிருதாசுவாதினி 34

## எம்பெருமானுர் புகழ்

*அலர்ந்த வம்புயத்திருந்து தேனருந்தி இன்னகல்-
அல்குலாரசைந்தடைந்த நடைகொளாத தனமெனே
நலந்தவிர்ந்ததால் அதென்கொல் நாவின் வீறிழந்ததால்
நாவணங்குநாதர் தந்த நாவின் வீறிழந்ததென்
சலந்தவிர்ந்து வாது செய்து சாடி மூண்ட மிண்டரைச்
சரிவிலேனெனக் கனைத்துரைத்த வேதிராசர்தம்
வலந்தருங்கை நாயனுர் வளைக்கிசைந்த கீர்த்தியால்
வாரி பாலதாமதென்று மாசில் வாழி வாழியே.

—அமிருதாசுவாதினி 33

## ஸம்ப்ரதாயம் வந்த வழியில் மடைப்பள்ளியாச்சான் பெருமை

*அடற்புள்ளரசினும் அந்தணர்மாட்டினும், இன்னமுதக்-
கடற்பள்ளி தன்னினும் காவிரியுள்ளமுகந்த பிரான்
இடைப்பிள்ளையாகி உரைத்ததுரைக்கும், எதிவரனுர்-
மடைப்பள்ளி வந்த மணம் எங்கள்வார்த்தையுள்மன்னியதே.

—பரமபத சோபானம் 12

## ஆசார்யர்கள் செய்த மஹோபகாரம்

விடுநெறி யஞ்சி விடத்தொடக்கிய
விதியரடைந்து தொழத் தழைத்தெழு

விழியருள் தந்து விலக்கடிக்களை
விரகிலியம்பி விலக்கி வைத்தனர்
கொடுவினை யென்பதனைத்தினைத்தனை
கொணர்தலிகந்த குணத்தனத்தினர்
குருகையில் வந்து கொழுப்படக்கிய
குலபதி தந்த குறிப்பில் வைத்தனர்
கடுநரகன் புகழற்றி மற்றொரு
கதிபெறுமன்பிலெமைப் பொருத்தினர்
கமலையுகந்த கடற்கிடைக் கடல்
கருணையுயர்ந்த திடர்க்கொருக்கினர்
படுமுதலின்றி வளர்த்த நற்கலை
பலபல வொன்ற வெமக்குரைத்தனர்
பழமறை யந்தி நடைக்கிடைச் சுவர்
பரமதமென்ற திடித்த பத்தரே.

—பரமத பங்கம் 2

போமுரைக்கும் பொருள் யாமறியோம் பொருளார்மறையில்
தாமுரைக்கின்றன தாமேயறியுந் தரமுடையார்
ஆமுரைக்கென்றிவை யாய்ந்தெடுத்து ஆரணநூல்வழியே
நாமுரைக்கும்வகை நல்லருளேந்தி நவின்றனரே.

—பரமத பங்கம் 3

---

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

ஸ்ரீமத் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

## அனுபந்தம் 3

# சிஷ்யனின் கடமை

ஆசார்ய லக்ஷணத்தை விளக்கியுள்ளது போல் சிஷ்ய னுடைய கடமைகள் யாவை என்பதையும் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்ய த்ரயஸாரத்தில் சிஷ்யக்ருத்யாதி-காரத்தில் விளக்கியிருக்கிறார்.

உதாரணமாக, புத்திமானான சிஷ்யன் தன் ஆசாரிய னுடைய பெருமையைப் பிரபலப்படுத்துவதுடன், அவரிட மிருந்து அறிந்த (ரகசிய) மந்த்ரங்களையும் மந்த்ரார்த தங்களையும் முயற்சி செய்தாவது மறைத்து வைத்துக் கொள்ளவேண்டும். இதற்கு எதிரிடையாகச் செய்தால், பகவதநுபவம் என்னும் செல்வமும் ஸ்வநிஷ்டை என்னும் ஆயுளும் குலைந்துபோம் என்று கூறும் சேஷஸம்ஹிதையி லுள்ள சுலோகத்தைப் பிரமாணமாகக் காட்டியுள்ளார்

இப்படிப் பலவிதமான பிரமாணங்களுடன் சிஷ்ய னுடைய கடமையை விளக்கும் இந்த அதிகாரத்தின் ஸாரத்தை அதிகார ஸங்கிரகம் 38-வது பாசுரம் நன்கு விளக்குகிறது:—

''ஏற்றி மனத்தெழில் ஞானவிளக்கை இருளனைத்தும்-
மாற்றினவர்க்கு, ஒருகைம்மாறு மாயனும் காணகில்லான்
போற்றி யுகப்பதும் புந்தியிற் கொள்வதும், பொங்குபுகழ்-
சாற்றி வளர்ப்பதும் சற்றல்லவோ முன்னம் பெற்றதற்கே ''

—அதிகார சங்கிரகம் 38

ஆசார்யன் சிஷ்யர்களுக்குத் தத்துவம், உபாயம், புருஷார்த்தம் ஆகிய இவற்றை உபதேசித்து ஜ்ஞானமாகிய தீபத்தை ஏற்றி அஜ்ஞானத்தை ஒழித்து விடுகின்றான். இத்தகைய ஆசார்யன் விஷயத்தில் செய்யக் கடவ பிரதி யுபகாரத்தைக் காண்பதற்கு ஸர்வேசுவரனாலும் முடியாது.

ஆயினும் உலகில் சிஷ்யர்கள் ஆசார்யனைப் புகழ்ந்து மகிழ்வதும், தியானிப்பதும், அவனிடம் உள்ள அன்பிற்குப் போக்கு வீடாகச் செய்வதன்றி, அவனிடம் பெற்ற மஹோபகாரத்திற்குச் சிறிதளவும் ஈடாகமாட்டா.

## மதுரகவி காட்டியதே நல்வழி

எம்பெருமானுக்கும் ஜீவனுக்கும் பத்துவித ஸம்பந்தங்கள் உள. அவையாவன:—1. ஆனந்த ரூபமான பகவானுடைய அநுபவம். 2. அவனைச் சரணமாக அடைதல். 3. அவனையே தன் ஸ்வரூபத்திற்குத் தக்க பலனாகக் கொள்ளுதல். 4. அவனோடு பல்வகை உறவையுடைமை. 5. தகாத விஷயங்களில் ஆசையை அவனால் ஒழிக்கப்பெறுதல். 6. அவன் விஷயமாக பற்று உண்டாகப் பெறுதல். 7. பாபங்களை ஒழிக்கப்பெறுதல். 8. அவனுடைய கருணைக்கு இலக்காயிருத்தல். 9. அவனால் தத்துவ ஜ்ஞானம் உண்டாகப் பெறுதல். 10. அவன் தன்னைப் போலாக்கப் பெறுதல்; என்பனவாம்.

மதுரகவிகள் தம் வாழ்நாளில் கண்ணன் இவ்வுலகில் எழுந்தருளியிருந்த போதிலும், அவனிடம் ஈடுபடாமல் ஆழ்வாரையே பற்றி, இந்தப் பத்துவிதமான ஸம்பந்தத்தையும் ஆழ்வார் விஷயத்திலே கொண்டு 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் பிரபந்தத்தைப் பாடியருளினர். இங்ஙனம் மதுரகவிகள் காட்டிய (ஆசார்யனை அடைதல் என்ற) வழியே அற்ப சுகங்களை விலக்கும் தைர்யமுடைய ஆஸ்திகர்க்குச் சிறந்ததாம்.

—(ஸ்ரீ உபய வே. வ. ந. ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமி அதிகார சங்கிரகம் "இன்பத்தி லிறைஞ்சுதலி லிசையும் பேற்றில்.." எனும் 2-ஆம் பாசுரத்திற்கு அளித்த கருத்துரை. இப்பாசுரத்தை இந்நூலில் பக்கம் அ-24 இல் காண்க.)

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

அனுபந்தம் 4

# ஊர்த்வ புண்ட்ர தாரணம்

(திருமண் இட்டுக்கொள்ளுதல்)

ஸ்ரீவைஷ்ணவ இளைஞர்கள் பலர் திருமண் காப்பு அணிவது அநாகரிகமானது அல்லது அவசிய மற்றதென்று கருதுகிற காலம் இது. சேரத்தகாத சேர்க்கையினால் ஏற்பட்டுள்ள தவறான புதுமை உணர்ச்சியே இதற்குக் காரணம் எனினும், ஓரளவு பெற்றோர்களும் பெரியோர்களும் இதற்குப் பொறுப்பாளிகளாவர்.

திருமண் காப்பு அணிவது, ஸந்த்யா வந்தனம் செய்வது போன்றவைகளின் அவசியத்தை வற்புறுத்துவதற்கு சாஸ்த்ர ரீதியான காரணங்களை எடுத்துக்காட்டினால் மட்டும் போதாது. இவைகளினால் அன்றாட வாழ்க்கையில் ஏற்படக் கூடிய நன்மைகளையும் அவர்களுக்கு எடுத்துக் கூறுவது பெரியோர்களுடைய கடமையாகும்.

உதாரணமாக, ''கண் கெட்டபின் சூர்யநமஸ்காரமா?'' என்கிற பழமொழியை எடுத்துக்கொள்வோம். அதாவது, கண்கெடாமலிருப்பதற்கு சூர்யநமஸ்காரம் முன் உதவியாக இருக்கும்; தினந்தோறும் சூர்யநமஸ்காரம் விரிவாகச் செய்யவேண்டும் என்பது அல்ல. தினப்படி செய்ய வேண்டிய மாத்யாஹ்நிகத்திலேயே அது அடங்கியுள்ளது. விரல்களைப் பின்னி அதனால் ஏற்படும் த்வாரத்தின் வழியே சூர்யனைப் பார்த்துக்கொண்டு மந்திரத்தைச் சொல்வதே ஒரு சுருக்கமான சூர்யநமஸ்காரம். இவ்வாறு செய்தால் கண்பார்வை நன்றாக இருக்கும். இதைக் கூடச் செய்யாததனால்தான் தற்கால இளைஞர்கள் பலருக்குக் கண்ணாடி அணியவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

இதைக் கருத்திற் கொண்டே "கண் கெட்டபின் சூர்ய நமஸ்காரமா?" என்ற பழமொழி ஏற்பட்டிருக்கவேண்டும். கண்கெடாமலிருக்க சூர்யநமஸ்காரம் (ஸந்த்யாவந்தனுதிகள்) அவசியம் என்பது உள் கருத்து.

அதுபோலவே மூன்று வேளைகளிலும் ஸந்த்யா வந்தனம் செய்வதால் எவ்வளவோ நன்மைகள் உள்ளன. விரிவுக்கு அஞ்சி அவைகளை இங்கு குறிப்பிடவில்லை. முக்கியமாக, மூன்று வேளைகளிலும் சுருக்கமாகவாவது (ஆனால் முறை பிறழாமல்) ஸந்த்யா வந்தனம் செய்து வந்தால், பிறரை வசீகரிக்கக்கூடிய தேஜஸ் (பொலிவு) ஏற்படுவதுடன் பக்தி, விவேகம், தன்னம்பிக்கை, நன்னடத்தை ஆகியவை கூடும். துற்சொப்பனங்களும் ஏற்படா. இவ்வகை நலன்களை நம் இளைஞர்களுக்கு எடுத்துக்காட்டினால் அவர்கள் ஸந்த்யாவந்தனுதிகளைச் செய்யத் தவறமாட்டார்கள்.

இனி, திருமண் காப்பு அணிவதன் அவசியத்தை நாம் உணரவேண்டும். தினந்தோறும் ஸ்நானம் செய்தவுடன் உடலில் உள்ள துர்நீர் எல்லாம் நெற்றியின் முன்பாகத்துக்கு வந்து சேருகிறது. திருமண் காப்பு அணிவதனால் அது நெற்றியிலிருந்து உறிஞ்சப்பட்டு திருமண்ணுடன் காய்ந்து விடுவதனால் துர்நீரினால் ஏற்படக்கூடிய கெடுதி தவிர்க்கப் படுகிறது என்பது விஞ்ஞான ரீதியாகக் கண்ட ஒரு உண்மை. இதற்காக மட்டுமல்ல, நாம் ஸ்ரீமந்நாராயணனின் திருவடி ஸம்பந்தம் பெற்றவர்கள் என்பதைப் புலப்படுத்த திருமண் காப்பு அணிவது அணிகலன். பதவி, தகுதிக்கேற்ப 'பாட்ஜ்' அணிவதில்லையா? அதுபோல் இதுவும் நம் ஸம்பிரதாயச் சிறப்பைக் காட்டும் ஒரு புற அடையாளம் என்றும் கருதலாம். இதில் பெருமைப்படலாம்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு சிறு சம்பவத்தைக் குறிப்பிடுவது பொருந்தும். ஒரு இளைஞன் தற்கால நாகரிகத்திற்கேற்ப திருமண் காப்பு அணிவதை அநாகரிகம் என்று கருதி வந்தான், அவனுடைய தகப்பனார் திருமண் காப்பு அணிய வேண்டியது அவசியம் என்பதற்குச் சாஸ்திரங்களிலிருந்து எவ்வளவோ மேற்கோள்கள் எடுத்துக்

காட்டினார். இதனாலெல்லாம் அவன் மனம் மாற வில்லை. அவனைத் திருத்தும் வழி தெரியாமல் தகப்பனாரும் சஞ்சலத்திற்குள்ளானார். அந்த இளைஞன் வேலை செய்யும் அலுவலகத்தில் இரவில் வேலை செய்யவேண்டிய மாற்றல் வந்தது. இரவு சுமார் பத்தரை மணிக்கு அவனுடைய பணி ஆரம்பமாகும். இரவில் அவன் தனியே செல்லும் போது ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஜனநடமாட்டமே இராது. அந்த இடத்தில் யாரோ தற்கொலை செய்துகொண்டதாகவும் அவருடைய ஆவி அங்கு உலவுவதாகவும் ஒரு வதந்தி இருந்து வந்தது. எனவே அந்த இடத்தை அடைந்தவுடன் அவனுக்கு ஒரு விதமான திகில் ஏற்பட்டு, அதனாலேயே அவனுக்குக் கடுமையான ஜுரம் கண்டது. அவனுக்கு ஜுரம் கண்ட தற்குக் காரணத்தை அறிந்த அவன் தகப்பனார் அவனுக்குத் திருமண் காப்பின் பெருமையை விளக்க இந்தச் சந்தர்ப் பத்தைப் பயன்படுத்திக் கொண்டார். திருமண் காப்பு அணிந்தால் எவ்தவிதத் துர்த்தேவதைகளோ, பேய் பிசாசு முதலியவைகளோ அல்லது துர்மரணம் அடைந்தவர் களுடைய ஆவியோ அருகில் நெருங்காது என்று கூறினார். இதற்கு எடுத்துக் காட்டாக காலரா முதலிய கொடிய நோய் ஏற்பட்டிருக்கும்போது தங்கள் வீட்டில் அந்த நோய் வருவதைத் தடுக்க எல்லா மதத்தினரும் (பிற சமயத்தாரும்) தம் தம் வீட்டு வாயிற் கதவில் திருமண் காப்புச் சின்னத்தை பதித்துவைத்து தம் இல்லங்களை அந்த நோய் அண்டாமல் தடுத்திருப்பதை விளக்கினார். சாஸ்திரங்களிலிருந்து கொடுக்கப்பட்ட மேற்கோள்களை விட இது பயன் தரக் கூடியதாக இருந்தது. அது முதல் அந்த இளைஞனும் இரவில் பணிபுரியச் செல்லும் போது திருண் காப்பு அணிந்துகொள்வதை வழக்கமாகக் கொண்டான். அந்தக் குறிப்பிட்ட இடத்தை அடைந்த வுடன் அவனுக்கு எந்த விதமான பயமும் ஏற்படாமல் இருக்கவே, தகப்பனார் எடுத்துக் கூறியபடி திருமண் காப்பின் மஹிமையை உணரலானான். அது முதல் பகலானாலும் இரவானாலும் நெற்றியில் திருமண் காப்பு இல்லாமல்

இருப்பதில்லை. இத்தகைய அநுபவங்கள் பலருக்கும் ஏற்பட்டிருக்கும். இவ்விதச் சோதனைகளைத் தவிர்க்கவும் வருமுன் காத்தலாகத் திருமண் இட்டுக்கொள்வது விவேகம்.

தக்கமுறையில் பெரியோர்கள் எடுத்துக் கூறினால், வழி தவறிய நம் இளைஞர்களைத் திருத்துவது கடினமல்ல என்பது தெளிவு. "நான் சொன்னால் என் பிள்ளை கேட்கமாட்டான்" என்று பெரியோர்கள் அசட்டையாக இருந்துவிடாமல், சிரத்தை எடுத்துக்கொண்டு ஊக்கத்துடன் அடிக்கடி இதமாக எடுத்துச் சொன்னால் நம் இளைஞர்களைத் திருத்தி நல்வழிப்படுத்துவது எளிது.

'மனத்தில் பக்தி இருந்தால் போதாதா? இந்த வெளி வேஷம் எதற்கு?' என்று சிலர் நினைக்கலாம். மனத்தில் பக்தி இருப்பது அவசியம் என்று அவர்கள் ஒத்துக்கொண்ட வரையில் நல்லது. ஆத்மாவையும் மனத்தையும் பகவானோடு ஸம்பந்தப்படுத்தி அதனால் அவற்றைப் பயனுள்ளவை களாகச் செய்யவேண்டும் என்று நினைப்பதுபோல, பகவானுடைய சொத்தாகிய இந்தச் சரீரத்தையும் அவனுடைய தாக்கி, அவனது சின்னங்களைத் தரித்து, அதையும் பயனுள்ள தாகச் செய்ய வேண்டாமா? ஆகையால் மனத்தில் பக்தி அவசியம் என்பதுபோல, சரீரத்தில் ஊர்த்வ புண்ட்ரம் தரிப்பதும் அவசியம். அதைத் தரித்துச் சரீரத்தைப் புனித மாக்குவதும் நம் கடமை.

பகவானுக்கு அடியார்களான நாம் ஸ்வாமியான பகவானுடைய சின்னத்தை நம் சரீரத்தில் தரிப்பது உசிதம், அவசியமும்கூட, பகவானுடைய ஆலயத்தைப் பெருக்கி மெழுகிக் கோலம் இடுவதுபோல, அவனுக்கு இருப்பிடமான நம் சரீரத்தையும் ஊர்த்வ புண்ட்ரத்தால் அலங்கரிக்க வேண்டும். நாம் திருமாலின் அடியவர்கள் என்பதைப் புலப்படுத்தத் திருமண் காப்பு தரிப்பது மிக மிக அவசியம். இதில் நாகரிகக் குறைவோ, வெட்க உணர்வோ கொள்ள வேண்டாம். பெருமைப்பட வேண்டிய ஒரு கடமையிலிருந்து தயங்கித் தவறுவதுதான் வெட்கக்கேடு!

உபநயநம் ஆகி ஸமாச்ரயணமும் ஆனவர்கள் தினமும் த்வாதச ஊர்த்வபுண்ட்ரம் (பன்னிரண்டு திருமண்) தரித்து, ஜபம் திருவாராதனம் முதலிய எல்லாவற்றையும் செய்ய வேண்டும். சரீரத்தில் நெற்றி, வயிற்றில் நடு பாகம், இரு பக்கங்கள், மார்பு, இரண்டு புஜங்கள், கழுத்தினுடைய முன்–பின் பாகங்கள், இருபக்கங்கள், அடிமுதுகு,—ஆக பன்னிரண்டு இடங்களில் பன்னிரண்டு திருநாமங்களையும் சொல்லி இட்டுக்கொள்ள வேண்டும். பிறகு ''சது: சக்ரம் நமஸ்யாமி...'' என்று ஆரம்பிக்கும் பன்னிரு நாம த்யான சுலோகங்களையும், தேசிகன் அருளிச் செய்துள்ள பன்னிரு நாமத்தையும் அனுஸந்திக்கவேண்டும். அவகாசமிருந்தால் பெரியாழ்வார் திருமொழி 2ஆம் பத்து 3-ஆம் திருமொழியையும், நம்மாழ்வார் திருவாய்மொழி 2-ஆம் பத்து 7-ஆம் பாசுரத்தையும் அநுஸந்தித்தல் நலம். அது முடியாத போது, 'கேசவனையும் தாமோதரனையும் மறக்கலாகாது' என்ற வாக்யத்தின்படி, முதலாவதான கேசவன் நாமத்தைச் சொல்லி நெற்றியிலும், பன்னிரண்டாவதான தாமோதர நாமத்தைச் சொல்லிக் கழுத்தின் பின்புறத்திலும் இரண்டு திருமண்களையாவது தரிக்கவேண்டும், ஆகிலும் ஸ்ரீஜயந்தி, ஸ்ரீராம நவமி முதலிய விசேஷ தினங்கள், ஆசார்யர்களுடைய திருநக்ஷத்ர தினங்கள், ஏகாதசி, த்வாதசி திதிகள், அமாவாஸ்யை முதலிய பித்ரு தினங்கள் ஆகியவற்றிலாவது அவச்யம் த்வாதச ஊர்த்வபுண்ட்ரம் தரிக்க வேண்டும், ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த பன்னிரு நாமம் என்ற பிரபந்தத்தில் பன்னிரண்டு திருமண்களிலும் த்யானம் செய்ய வேண்டிய பகவானுடைய ஸ்ரூபம் ஆயுதங்கள் முதலியவை கூறப்பட்டிருக்கின்றன. பன்னிரண்டு திருமண்களை இட்டுக்கொண்டு அதில் பகவத் ஸ்வரூபத்தைத் தியானிப்பதால், நம்மிடம் பகவானுடைய ஸாந்நித்யம் அதிகமாக ஏற்படுகிறது; ஸத்வகுணம் வ்ருத்தியடைகிறது ச்ரிய:பதியின் அநுக்ரஹத்தால் ஸகல மங்களங்களும் உண்டாகின்றன.

ஸ்ரீ:

## அனுபந்தம் 5

# ஸமாச்ரயணம்

(பஞ்ச ஸம்ஸ்காரம்)

(ஸ்ரீ உபய வே. வித்வான் புதுக்கோட்டை
அ. ஸ்ரீநிவாஸ ராகவாசார்ய ஸ்வாமி, எம்.ஏ., மதுரை)

ஸமாச்ரயணம் என்பது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் அனுஷ்டிக்கப்பட்டு வருகிற ஒரு முக்கியமான ஸம்ஸ்காரம். உபநயநம் ஆனவர்களுக்கு இது செய்யப்படுகிறது. ஆசார்யர் பகவதாயுதங்களான சங்க—சக்ரங்களின் இலச்சினைகளை அக்னியில் காய்ச்சி, சக்ரத்தால் சிஷ்யனுடைய வலது புஜத்திலும், சங்கத்தால் இடது புஜத்திலும் மந்த்ரத்தைச் சொல்லி அடையாளமிடுகிறார். ஸ்வாமியின் சின்னத்தை சேவகன் தரிப்பதை உலகில் காண்கிறோம்; அதே போல நம் ஸ்வாமியான பகவனுடைய சின்னங்களான சங்க—சரக்ங்களை அடியார்களான நாமும் நம் சரீரத்தில் ஸ்திரமாகத் தரிக்க வேண்டியது அவசியம். பகவானை நாம் உறுதியாகப் பற்றியதற்கு இது ஓர் அடையாளம். அதனாலேயே இதற்கு 'ஸமாச்ரயணம்' (பற்றுதல்) என்று பெயர். இது ப்ராஹ்மணர்களுக்குப் போலவே ப்ராஹ்மணரல்லாதவர்களுக்கும் அவரவர்களுக்கேற்ற முறையில் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் செய்யப்பட்டு வருகிறது.

'தாபம்' என்கிற இந்த ஸம்ஸ்காரம் ஆனவர்கள்தான் த்வாதச ஊர்த்வபுண்ட்ரம் (பன்னிரண்டு திருமண்) இட்டுக் கொள்ளத் தகுதியுடையவர்களாகிறார்கள். அப்போதே அவர்களுக்கு 'தாஸ்யநாமம்' என்று ஒரு புதுப் பெயரும் கொடுக்கப்படுகிறது இது நாம ஸம்ஸ்காரம். பிறகு ஆசார்யர் அவர்களுக்கு திருவஷ்டாக்ஷரம், த்வயம், சரம ச்லோகம் ஆகிய மந்த்ரங்களையும், ஸ்ரீமத்ராமாயணம், பகவத்கீதை முதலான அத்யாத்ம க்ரந்தங்களையும் உபதேசிக்கிறார்.

இது மந்த்ர ஸம்ஸ்காரம். அதன் பின் அவர்களுக்குப் பகவானை ஆராதிக்கும் முறை உபதேசிக்கப்படுகிறது. இது இஜ்யா ஸம்ஸ்காரம். இதன் பிறகே அவர்கள் திருமாளிகைகளிலுள்ள பகவந்மூர்த்திகளைத் தொட்டு ஆராதிக்க யோக்யதையுடையவராகிறார்கள். இவ்வாறு ஐந்து க்ரியைகள் இருப்பதாலேயே இதற்குப் 'பஞ்ச ஸம்ஸ்காரம்' என்று மற்றொரு பெயர் வழங்குகிறது

இந்தப் பஞ்சஸம்ஸ்காரத்தால ஒருவனுடைய சரீரத்துக்கும் உள்ளே யிருக்கும் ஆத்மாவுக்கும் சுத்தி ஏற்படுகிறது. பரமாத்மா இவ்வடியார்கள் விஷயத்தில் அருள்புரிகிறான். அதனால் அவன் ஸம்ஸாரமாகிற கடலைத் தாண்டி, முடிவில் மோக்ஷத்தையும் அடைகிறான் என்று சுருதி ஸ்பஷ்டமாக ஓதுகிறது.

இந்த ஸமாச்ரயணம் என்கிற பஞ்ச ஸம்ஸ்காரத்தை ஒருவன் செய்து கொள்ளாவிட்டால் நேராகப் பகவானைத் தொட்டு ஆராதிக்க முடியாதாகையாலும், அவன் பெருமையைக் காட்டும் முக்யமான மந்த்ரங்களை ஜபிக்க இயலாதாகையாலும், அதனால் இவனுக்கு உஜ்ஜீவனோபாயம் இல்லாமல் போகுமாகையாலும், உபநயநம் ஆனவுடனேயே எல்லோரும் இதைச செய்து கொள்ளவேண்டும் அதன்பிறகு தேசமறிய எம்பெருமானுக்கு ஆளாய்த் திரிகின்றவர்களாகி, அவன் கடாக்ஷத்துக்கு இலக்காகிறார்கள். அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களின் பாததூளி படுதலால் இவவுலகம் பாக்யம் பெற்றதாகிறது.

> ''ரதசரண நிரூட வ்யஞ்ஜநாநாம் ஜநாநாம் துரித
> மதனலீலா தோஹளீ தேஹளீச: ॥''

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிமன் பஞ்ச ஸம்ஸ்காரங்களின் ஆவச்யகத்தையும், இந்த ஸம்ஸ்காரத்தைச் செய்துகொண்டவர்களுக்கு பகவான் அருள்புரியும் வகையையும் ஸாதித்துள்ளார்.

ஸ்ரீ:

## அனுபந்தம் 6

# ப்ரபத்தி

சேதனன் எனப்படும் ஜீவாத்மா ச்ரியப்பதியான பகவானுடைய பக்கலே நிரந்தரமாக அடைவதையே மோக்ஷம் என்கிறோம். இதுவே மற்றெல்லாவற்றையும் விட மிகவும் உயர்ந்த பதவி—பரம பதம்.

இந்த உயர்பதவியை அடைவற்கு பக்தியோகம், ப்ரபத்தி என்னும் உபாயம் ஆகிய இரண்டு மார்க்கங்கள். பக்தியோகம் என்பது கர்மயோகம் ஜ்ஞானயோகம் என்ற இரண்டின் உதவியுடன் பகவானிடம் பக்தி செலுத்தித் தவம் புரிந்து மோக்ஷமடைய முயலுவதாகும். 'ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே ஜகத்ரக்ஷகன், தானும் பிறரும் தனக்குத் தஞ்சமல்ல' என்ற நிச்சயத்துடன் ஒருவன் எம்பெருமானைச் சரணம் புகுவதே 'ப்ரபத்தி' எனப்படுகிறது. 'சரணாகதி' என்பதும் இதுவே, தன்னைக் காக்கும்பொறுப்பை எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதால் இதைப் 'பரந்யராஸம்" என்றும், தன்னைக் காத்துக்கொள்ளும் உபாயத்தை ஒருவன் இதனால் கைக்கொள்ளுவதால் 'உபாயாநுஷ்டாநம்' என்றும் இதைக் கூறுவர்.

முதலாகக் கூறப்பட்ட பக்தி யோகத்தை அனுஷ்டிக்க உத்தம ஜாதியில் பிறந்தவர்களுக்கு மாத்திரமே ஸாத்யமாகும். மேலும் அவர்கள் கர்மயோகம், ஞானயோகம் முதலியவற்றை அனுஷ்டிக்கக் கூடியவர்களாயும், அவைகளைப் பற்றித் தேறிய ஞானம் உடையவர்களாயும் இருக்க வேண்டும். இதற்கு ச்ருதி—ஸ்ம்ருதிகளில் தேர்ச்சி அவசியம்.

பக்தியோகத்தை அனுஷ்டிக்க வேண்டிய எந்த யோக்யதையும் இல்லாதவர்களே ப்ரபத்தி செய்வதற்கு அருகதை உடையவர்கள். அதாவது, 1. கர்மயோகம் ஞானயோகம் முதலியவற்றை அனுஷ்டிக்கச் சக்தியின்மை, 2. அவை

களைப் பற்றிய ஞானமின்மை, 3. அவைகளை செய்ய இயலாத இனத்தில் பிறந்தவர் என்று சாஸ்திரங்களால் விலக்கப்படுதல், 4. மோக்ஷமடைவதில் கால விளம்பத்தைப் பொறுக்க முடியாமை— ஆகிய இந்த நான்கில், ஏதாவது ஒன்றே இருப்பவர்கள், இரண்டு இருப்பவர்கள், மூன்றிருப்பவர்கள் அல்லது நான்குமிருப்பவர்கள் ஆகியோரே ப்ரபத்தி என்னும் உபாயத்துக்குரிய அதிகாரிகளாவர்.

ஸாதாரணமாக உலகத்தில் ஒரு பதவியை அடைய வேண்டுமானால் அதற்கெனக் குறிப்பிட்ட ஒரு யோக்ய தாம்சம் இருக்கும். அது உள்ளவர்களே அந்தப் பதவியை சுலபமாகவும் சீக்கிரமாகவும் அடைய முடியும். மோக்ஷமாகிய உயர் பதவியை அடைவதற்கான நிலை அதற்கு நேர் எதிரிடையானது. பக்தியோகம் செய்யக் கூடியவன் என்று யோக்யதாம்சம் உடையவன் அதைச் சுலபமாகவோ சீக்கிரமாகவோ அடைய முடியாது. அதாவது அவனுக்கு அந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் கிடைக்கும் என்று சொல்வதற்கில்லை. மோக்ஷம் கிடைப்பதற்குமுன் அவன் ப்ராரப்த கர்மத்திற்கேற்ப பல ஜன்மங்கள் எடுக்கவேண்டியிருந்தாலும் இருக்கலாம்.

ஆனால், பக்தியோகம் செய்யக்கூடிய யோக்யதையைப் பெறாமல் இருப்பதே ப்ரபத்தி உபாயத்தை அனுஷ்டிப்பதற்குத் தேவையான யோக்யதாம்சமாகும். ப்ரபந்நனுக்கு (அதாவது ப்ரபத்தி என்னும் உபாயத்தை அனுஷ்டித்தவனுக்கு) அவன் கோரினவளவில்—அதாவது உடனடியாகவோ அல்லது அவனது ஆயுள் முடிந்த உடனேயோ— மோக்ஷம் கிடைக்கும். அவனுக்கு மறு ஜன்மம் கிடையாது.

இந்த ப்ரபத்தியை அதனுடைய ஐந்து அங்கங்களோடு அனுஷ்டிக்க வேண்டும்:— 1. அநாதிகாலமாகப் பாபமே செய்து வந்த நான் இனி பகவானுடைய திருவுள்ளத்துக்கு உகப்பான அநுகூல கார்யத்தையே செய்வேன் 2. அவனுக்குப் பிரதிகூலமான கார்யங்களைச் செய்யமாட்டேன். 3 பகவானைத் தவிர வேறு எவரும் என் இடரைக் களைந்து என்னைக்

காககவலவரல்லர். 4. பிரார்த்தித்தால் பகவான் தன் கருணையால் நிச்சயம் ரக்ஷிப்பான் என்று நம்புகிறேன். 5. ஆகையால் என்னைக் காத்தருள வேண்டும் என்று அவனை ப்ரார்த்திக்கிறேன். இந்த ஐந்து அங்கங்களோடு ஒருவன் தன்னையும் தன்னுடையவைகளையும் எம்பெருமானிடம் ஸமர்ப்பிப்பதே பரஸமர்ப்பணம் என்றும் சரணாகதி என்றும் சொல்லப்படுகிறது. இப்படிச் சரணம் புகுந்தால் திருமால் திருவுள்ளம் உகந்து நம்மை ஆட்கொண்டு, நம்மை எல்லா விதத்திலும் ரக்ஷிக்கிறான். இந்த ஒப்பற்ற ஓர் உபாயத்தை அனுஷ்டிக்காவிட்டால் நமக்கு விடிவு இல்லை. ஆகையால் இதை எல்லோரும் அனுஷ்டிக்க வேண்டும்.

இனி, 'ப்ரபத்தியை எப்போது செய்து கொள்ள வேண்டும்? மோக்ஷத்திற்கான உபாயமாகிய கடைசிக் காலத்தில் செய்தால் போதாதா? இப்போது என்ன அவசியம்?' என்று சிலர் நினைக்கலாம். இது ஒரு ஜீவனுடைய வாழ்க்கையில் மிகவும் மங்களகரமான கார்யம். ஆதலால் இதை எவ்வளவு சீக்கிரம் கூடுமோ அவ்வளவு சீக்கிரத்தில் செய்து கொள்ள வேண்டும். ப்ரபத்தி ஒரு ஜீவனைப் பரமாத்மாவோடு சேர்த்து விடுகிறதாதலால், இது ஒரு கன்னிகையின் விவாஹம் போன்றது. இந்தக் கல்யாணத்தில் ஜீவாத்மாவே அழகு வாய்ந்த மணப்பெண். எம்பெருமானே மகிழ்வுடன் அவளைக் கைப்பிடிக்கும் அழகிய மணவாளன். ஆத்மாவை எம்பெருமானிடம் சேர்ப்பிக்கும் ஆசார்யனே கன்னிகாதானம் செய்துகொடுக்கும் ஜநகன் (தந்தை). எம்பெருமானுக்கு வாழ்க்கைப்பட்டு அவனுக்குத் தொண்டு புரிந்து கொண்டிருப்பதே நித்ய ஸௌமங்கல்யத்தைக் காட்டும் மங்கல ஸூத்திரம். எந்தப் பெண்தான் தனக்கு மங்களத்தை விரும்பமாட்டாள்? அதுபோலவே இந்த ஜீவாத்மாவும் பிறந்தது முதற்கொண்டே நாயகனைச் சேரத் தகுதியுடைய பெண்போன்றது. ஆகவே வயதான பிறகு ப்ரபத்தி செய்து கொள்ளவேண்டும் என்றோ, ப்ரபத்தி செய்துகொள்வது அமங்களம் என்றோ நினைக்கலாகாது. ஆத்மாவுக்கு எல்லா மங்களங்களையும் இங்கும் அங்கும்

தரவல்ல ப்ரபத்தியை நாம் உடனே செய்துகொள்ள வேண்டும். காலம் கடத்தலாகாது.

சரணாகதி சாஸ்த்ர விஷயமாகப் பெரியதும் சிறியது மாகவும் தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் பல ப்ரபந்தங்களை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச் செய்திருக்கிறார். அவற்றி லிருந்து ப்ரபத்தியின் ஸ்வரூபத்தைத் தெளிவாக விளக்கும் பாசுரங்களைக் கீழே காணலாம்:—

### ப்ரபத்தியில் அஹங்கராதிகளை ஒழித்தல்

*எனதென்பதும் (இ)யானென்பதுமின்றித்*
*தனதென்று தன்னையுங் காணாது—உனதென்று-*
*மாதவத்தால் மாதவற்கே வன்பரமாய் மாய்ப்பதனில்*
*கைதவத்தான் கைவளரான் காண்.*

—அம்ருத ரஞ்ஜனி 25

### ப்ரபத்தியே சிறந்த உபாயம்

*வேண்டும் பெரும் பயன் வீடென்றறிந்து விதிவகையால்*
*நீண்டுங் குறுகியும் நிற்கும் நிலைகளுக்கேறகுமன்பர்*
*மூண்டொன்றில் மூலவினை மாற்றுதலில் முகுந்தனடி-*
*பூண்டன்றி, மற்றோர் புகலொன்றிலையென நின்றனரே.*

—அதிகார சங்கிரகம் 15

### ப்ரபத்திக்கு அதிகாரி

*அந்தணரந்தியரெல்லையில் நின்ற அனைத்துலகும்*
*நொந்தவரே முதலாக நுடங்கியனன்னியராய்*
*வந்தடையும் வகை வன்தகவேந்தி வருந்திய, நம்-*
*அந்தமிலாதியை அன்பரறிந்தறிவித்தனரே.*

—அதிகார சங்கிரகம் 17

### ப்ரபத்தியின் அங்கங்கள்

*அறிவித்தனரன்பர் ஐயம் பறையுமுபாயமில்லாத்*
*துறவித் துனியில் துணையாம் பரனை வரிக்கும் வகை*
*உறவித்தனையின்றி ஒத்தாரென நின்ற வும்பரை நாம்*
*பிறவித்துயர் செகுப்பீரென்று இருக்கும் பிழையறவே.*

—அதிகார சங்கிரகம் 18

## ப்ரபத்தியின் ஸ்வரூபம்

அறவே பரமென்று அடைக்கலம் வைத்தனர், அன்று நம்மைப்-
பெறவே கருதிப் பெருந்தகவுற்ற பிரானடிக்கீழ்
உறவே யிவனுயிர் காக்கின்ற ஒருயிருண்மையை, நீ-
மறவே லெனநம் மறைமுடி சூடிய மன்னவரே.

—அதிகார சங்கிரகம் 19

## ப்ரபத்திக்குப் பிந்திய கைங்கர்யம்

விண்ணவர் வேண்டி விலக்கின்றி மேவும் அடிமையெலாம்
மண்ணுலகத்தில் மகிழ்ந்தடைகின்றனர், வண்துவரைக்-
கண்ணனடைக்கலங் கொள்ளக் கடன்கள் கழற்றிய நம்-
பண்ணமருந் தமிழ்வேதமறிந்த பகவர்களே.

—அதிகார சங்கிரகம் 22

## ப்ரபத்தியில் மூட்டுதல்

துய்யமனத்தர் துறையணுகாத துணையிலியேன்
ஐயமறுத்து உனதாணை கடத்தலகற்றினை நீ
கையமர் சக்கரக்காவல காக்குந் திருவருளால்
வையமளந்தவடிக்கீழ் அடைக்கலம் வைத்தநளே

—அமிருதாசுவாதினி 11

## அஞ்ஜலியின் பெருமை

கண்ணன் கழல்தொழக் கூப்பியகையின் பெருமைதனை
எண்ணங்கடக்க எமுனைத்துறைவரியம்புதலால்
திண்ணமிதுவென்று தேறித்தெளிந்தபின், சின்மதியோர்-
பண்ணும் பணிதிகள் பாற்றிப் பழந்தொழில் பற்றினமே.

—அமிருதாசுவாதினி 24

## ப்ரபத்தியை அநுஷ்டித்தல்

நின்னருளாங் கதியன்றி மற்றொன்றில்லேன்
நெடுங்காலம் பிழைசெய்த நிலைகழிந்தேன்
உன்னருளுக்கினிதான நிலையுகந்தேன்
உன்சரணே சரணென்னுந் துணிவு பூண்டேன்

மன்னிருளாய் நின்ற நிலையெனக்குத் தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சி தர வரித்தேனுன்னை
இன்னருளாலினி யெனக்கோர் பரமேற்றாமல்
என் திருமாலடைக்கலங் கொளென்னை நீயே.

—அமிருதாசுவாதினி 31.

### ப்ரபத்தியின் பெருமை

எல்லாருக்கு மெளிதான வேற்றத்தாலும்
இனியுரைக்கை மிகையான விரக்கத்தாலும்
சொல்லார்க்கு மளவாலு மமைதலாலும்
துணிவரிதாய்த் துணை துறக்குஞ் சுகரத்தாலும்
கல்லார்க்குங் கற்றார்சொற் கவர்தலாலும்
கண்ணனுரை முடிசூடி முடித்தலாலும்
நல்லார்க்குந் தீயார்க்கு மிதுவே நன்றாம்
நாரணற்கே யடைக்கலமாய் நணுகுவீரே.

—பரமதபங்கம் 47

### ப்ரபத்தியே சிறந்த உபாயம்

பத்திமுதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்
எத்திசையுமுழன்றோடி இளைத்துவிழுங் காகம்போல்
முத்திதருநகரேழில் முக்கியமாங் கச்சிதனில்
அத்திகிரியருளாளர்க்கு அடைக்கலம்நான் புகுந்தேனே.

—அடைக்கலப் பத்து 1

### பரபத்தியின் கர்ண மந்திரம்

தந்திரங்கள் வேறின்றித் தமதுவழி யழியாது
மந்திரங்கள் தம்மாலும் மற்றுமுள வுரையாலும்
அந்தரங்கண்டடிபணிவார் அனைவர்க்குமருள்புரியும்
சிந்துரவெற்பிறையவனார் சீலமலதறியேனே.

—அடைக்கலப் பத்து 3

### ப்ரபத்தி ஸகல பலனையும் தருதல்

காகமிராக்கதன் மன்னர் காதலிகததிரபந்து
நாகமரனயன் முதலா நாகநகரார் தமக்கும்
போகமுயர் வீடுபெறப் பொன்னருள் செய்தமை கண்டு
நாகமலை நாயகனார் நல்லடிப்போதடைந்தேனே,

—அடைக்கலப் பத்து 4.

## ப்ரபத்தியின் அங்கங்கள்

உகக்குமவையுகந்து உகவாவனைத்துமொழிந்து, உறவுகுணம்-
மிகத்துணிவு பெறவுணர்ந்து வியன்காவலென வரித்துச்
சகத்திலொரு புகலில்லாத் தவமறியேன், மதிட்கச்சி-
நகர்க்கருணைநாதனை நல்லடைக்கலமாயடைந்தேனே

—அடைக்கலப் பத்து 5

## ப்ரபத்தியின் வகை

அளவுடையாரடைந்தார்க்கும் அதனுரையே கொண்ட
வர்க்கும்
வளவுரை தந்தவனருளே மன்னிய மாதவத்தோர்க்கும்
களவொழிவாரெமரென்ன இசைந்தவர்க்குங்காவலராம்
துளவமுடி யருள்வரதர் துவக்கிலெனை வைத்தேனே.

—அடைக்கலப் பத்து 6

## ப்ரபத்தியை ஒரே முறை செய்தல்

உமதடிகளடைகின்றேனென்று ஒருகாலுரைத்தவரை
அமையுமினியென்பவர்போல் அஞ்சலெனக் கரம் வைத்துத்
தமதனைத்துமவர்தமக்கு வழங்கியுந்தாம் மிக விளங்கும்
அமைவுடையவருளாளர் அடியிணையை அடைந்தேனே.

—அடைக்கலப் பத்து 7

## ப்ரபத்தியை அனுஷ்டித்தல்

சுருதிநினை விவையறியும் துணிவுடையார் தூமொழிகள்
பரிதிமதியாசிரியர் பாசுரஞ்சேர்ந் தருக்கணங்கள்
கருதியொரு தெளிவாளால் கலக்கமறுத்தத்திகிரிப்
பரிதிமதி நயனமுடைப் பரமனடி பணிந்தேனே.

—அடைக்கலப் பத்து 9

## ப்ரபத்தியின் ஸ்வரூபம்

திருமகளுந் திருவடிவும் திருவருளுந் தெள்ளறிவும்
அருமையிலாமையுமுறவும் அளப்பரிய வடியரசும்
கருமமழிப்பளிப்பமைப்பும் கலக்கமிலா வகைநின்ற
அருள்வரதர் நிலையிலக்கில் அம்பென நானமிழந்தேனே.

—அடைக்கலப் பத்து 10

### ப்ரபத்தி விளக்கம்

புகலுலகிலில்லாது பொன்னருள் கண்டுற்றவர்க்கும்
அகலகிலாவன்பர்க்கும் அன்றே தன்னருள் கொடுத்துப்
பகலதனால் பழங்கங்குல் விடிவிக்கும், பங்கயத்தாள்-
அகலகிலேனென்றுறையும் அத்திகிரியருள் முகிலே.

—அருத்த பஞ்சகம் 8

### பிராட்டியிடம் புருஷகார பிராப்தி

அருள் தருமடியர்பால் மெய்யை வைத்துத்
தெருள்தர நின்ற தெய்வநாயக, நின்
அருளெனுஞ் சீரோரரிவையானதென
இருள்செகவெமக்கோரின்னொளி விளக்காய்
மணிவரையன்ன நின்திருவுருவில்
அணியமராகத் தலங்கலா யிரங்கி
நின்படிக்கெல்லாந் தன்படி யேற்க
அன்புடன் நின்னோடவதரித்தருளி
வேண்டுரை கேட்டு மீண்டவை கேட்பித்து
ஈண்டிய வினைகள் மாண்டிட முயன்று
தன்னடி சேர்ந்த தமருனை யணுக
நின்னுடன் சேர்ந்து நிற்குநின் திருவே.

—மும்மணிக் கோவை 1

### சுபம்! சுலபம்!

இந்தப் பாசுரங்களைத் தினமும் இயன்ற அளவில் ஸேவித்து வந்தால், நாம் ப்ரபத்தி மார்க்கத்தில் பக்குவம் பெற்று, எம்பெருமான் திருவடி வாரத்தைப் புகலாகப் பெறத் தகுதி பெற்று, வாழ்நாள் உள்ள அளவும் சகல சௌக்யங்களுடனும் தெளிந்த சிந்தனையோடும் பலரும் போற்றத் தக்கபடி வாழலாம். இதைக் கண்ணுறும் ஸ்ரீவைஷ்ணவ குலத்தவர்கள் இவ்விதமே சிறந்து வாழ வேண்டும் என்பது எங்கள் பிரார்த்தனை.

—"கிரிகோ" பதிப்பகத்தார்.

அனுபந்தம் 7

# பிரபந்தசாரம்*

ஸ்ரீதேசிகன் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தின்மீது தமக்குள்ள ஈடுபாட்டின் மிகுதியால் இப்பிரபந்தத்தில் ஆழ்வார்கள் அவதரித்த திவ்ய ஸ்தலம், மாஸம், திருநக்ஷத்ரம், அவர்கள் பெருமை, அருளிச்செய்த ப்ரபந்தங்களின் பெயர், அவற்றின் பாசுர எண், ப்ரபந்தங்களின் உயிர்நிலையான ஸாரார்த்தம் இவற்றை வெளியிட்டு, தம்முடைய அநுஸந்தானத்திற்காக அந்தப் பிரபந்தங்களைத் தமக்கு அருள் செய்யுமாறு அந்த அந்த ஆழ்வார்களைப் பிரார்த்தித்து, கடைசியில் 2-பாசுரங்களில் ஆழ்வார்கள் திருநாமத்தையும் அவர்கள் அருளிச்செய்த பாசுர எண்களையும் கூறி, ஒருபாசுரத்தில் ஒரே கோஷ்டியாக அவர்களை அனுபவித்து, அவர்களின் ப்ரபந்தமே தமக்கு உஜ்ஜீவிக்க ஸாதநமென்று மொழிந்து, தமிழ்மறையோன் என்று தம்மைப் பெருமையுடன் பேசிக்கொண்டு, இந்தப் பிரபந்தஸாரத்தை அநுஸந்திப்பவருக்கு எம்பெருமான் கருணையால் ஸகல க்ஷேமமுமுண்டாமென்று முடித்தருள்கிறார். ஆழ்வார்களருளிய ப்ரபந்தங்களின் ஸாரமான பொருளை, இதில் சிறிய வாக்கியத்தில் அடக்கிக் கூறியபடியால் இதற்கு இப்பெயர் ('பிரபந்தசாரம்' என) வந்தது.

---

*ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரர் ஸ்வாமி ஸ்ரீதேசிகனின் 701—வது திருநக்ஷத்ர மஹோத்ஸவ வைபவத்தை முன்னிட்டு, ப்ரபந்தஸாரப் பாசுரங்கள் முழுவதையும், திருவஹீந்திரபுரம் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் கமிட்டி அநுக்ரஹத்துடன் எங்கள உபயமாக, சலவைக் கறகளில் பொறித்து, திருவஹீந்திரபுரம் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் திருமாளிகையில் பாங்காகப் பதித்துவைக்கும் மஹா பாக்யம் அடியோங்களுக்குக் கிடைத்திருக்கிறது.

திருவஹீந்திரபுரம் போய்வரும் ஸ்ரீதேசிக பக்தர்கள் இந்தப்ரபந்த ஸாரப் பாசுரங்களை ஒரு முறையாவது அநுஸந்தித்து, எங்களை ஆசீர்வதித்தால் தாங்கள் மேன்மேலும் இத்தகைய தைவிகப்பணிகளைச் சிறப்பாகவும் செழிப்பாகவும் செய்துவர எங்களுக்கு விசேஷ அநுக்ரஹமாக அமையும் என்பதை விண்ணப்பித்துக் கொள்ளுகிறோம்.

"லிப்கோ" பதிப்பகத்தார்.

### ஒரு வேண்டுகோள்

ஸந்நிதியிலும் திருமாளிகையிலும் திவ்யப்பிரபந்தத்தை ஸேவிக்கும்போது அந்த அந்த ப்ரபந்தத்தின் தனியனை அநுஸந்தித்தவுடன் அந்த அந்த ஆழ்வார் விஷயமாய் இப் பிரபந்தத்தில் தேசிகன் அருளிய பாசுரத்தையும் தனியனாக அநுஸந்திப்பது மிகவும் உசிதமாகும். புதியதாய் ஒரு வழக்கத்தைக் கைகொள்ளச் சிலர் கூசக்கூடும். பல புதிய சிறந்த வழக்கங்கள் கைக்கொள்ளப்பட்டிருப்பதையும் ஔசித்யத்தையும் கருதி இதையும் கொள்ளலாம். பெரியோர் ஆராய்ந்து நிர்ணயிக்க.*

# பிரபந்தசாரம்

**சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்**

ராமாநுஜதயா பாத்ரம் ஜ்ஞானவைராக்ய பூஷணம்,
ஸ்ரீமத்வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்.

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

ஆரணநான் கின்பொருளை யாழ்வார்க ளாய்ந்தடைவே
யன்புடனே யம்புவியோ ரனைவருமீ டேறவென்று
நாரணனார் தாள்களிலே நாலாயி ரந்தமிழால்
நண்ணியுரை செய்தவற்றை நாடிவகை தொகைசெய்தாய்
பூரணமா ஞானியர்சேர் பொங்குபுகழ்த் தூப்புல்வரும்
புனிதனென்றும் பிள்ளையென்றும் புவியோர்புகழ் வேங்கடவா
தாரணியோ ரிங்குகக்கச் சாற்றியநற் ப்ரபந்தசாரந்-
தனையுரைத்து வாழுமனந் தந்தருளா யென்றனக்கே.

---

* Reproduced with greatful acknowledgments to Oppiliappan Sannidhi, Vidwan, Siromani, Vidya Visarada Sri Ubhaya Ve. Vankipuram, Navanitham, Srirama Desikacharya Swami.

ஆதிமறை யோதிமகி ழயக்கிரிவர் தம்மருளால்
அன்புடனே தூப்புல்நக ரவதரித்தே யிஙகுவந்த
வாதியரை வென்றுவந்து வன்புவிமே லெதிராசர்
வாழ்வுறுநற் றெரிசனத்தை வண்மையுட னேவளர்த்து
நீதிநெறி தவறுமல் நிறுத்தியிடும் வேஙகடவா
நேசமுட னுழ்வார்கள் நிலேகளே யெல் லாமுணர்ந்து
சாதுசனம் வாழவென்று சாற்றியநற் ப்ரபந்தசாரந்-
தனேயுரைத்து வாழுமனந் தந்தருளா யென்றனக்கே.

---

* ஆழ்வார்களவதரித்த நாளூர் திங்கள்
அடைவு திருநாமங்களவர்தாஞ் செய்த
வாழ்வான திருமொழிகளவற்றுட்பாட்டின்
வகையான தொகையிலக்கம் மற்றுமெல்லாம்
வீழ்வாக மேதினிமேல் விளங்க நாளும்
விரித்துரைக்குங் கருத்துடனே மிக்கோர் தங்கள்
நீள்பாதம் நிரந்தரமுந் தொழுது வாழ்த்தும்
நேசமுடனடியேன்றன் நெஞ்சு தானே. 1

அருள்மிகுத்ததொரு வடிவாய்க் கச்சிதன்னில்
ஐப்பசிமாதத் திருவோணத்து நாளில்
பொருள்மிகுத்த மறைவிளங்கப் புவியோருய்யப்
பொய்கைதனில் வந்துதித்த புனிதா, முன்னுள்-
இருளதனில் தண்கோவலிடைகழிச் சென்று
இருவருடன் நிற்கவுமாலிடைநெருக்கத்
திருவிளக்காமெனும் வையந்தகளி நூறும்
செழும்பொருளாவணக்கருள் செய்திருந்த நீயே. 2

கடன்மல்லேக்காவலனே பூதவேந்தே
காசினிமேலேப்பசியிலவிட்ட நாள் வந்து
இடர்கடியுந்தண்கோவலிடைகழிச் சென்று
இணேயில்லா மூவருமாயிசைந்தே நிற்க
நடுவிலிவரொருவருமென்றறியா வண்ணம்
நள்ளிருளில் மால்நெருக்க நந்தாஞானச்-

சுடர்விளக்கேற்றிய, அன்பே தகளியான
தொடைநூறுமெனக்கருள் செய் துலங்க நீயே. 3

மாமயிலைப்பதியதனில் துலா மாதத்தில்
வருஞ்சதயத்தவதரித்துக் கோவலூரில்
தூமுனிவரிருவருடன் துலங்க நின்று
துன்னிய பேரிருள் நீங்கச் சோதி தோன்றச்
சேமமுடனெடுமாலைக் காணப் புக்குத்
திருக்கண்டேனென வுரைத்த தேவே, உன்றன்-
பாமருவு தமிழ்மாலை நூறு பாட்டும்
பழவடியே னுக்கருள் செய் பரம நீயே. 4

தைம்மகத்தில் வருமழிசைப்பரனே மற்றைச்-
சமயங்கள் பல தெரிந்து, மாயோனல்லால்-
தெய்வம் மற்றில்லையென வுரைத்த வேதச்-
செழும்பொருள் நான்முகன் தொண்ணூற்றாறு பாட்டும்
மெய்ம்மிகுத்த திருச்சந்தவிருத்தப் பாடல்
விளங்கிய நூற்றிருபதுந் தப்பாமல் மெய்யே
வையகத்து மறவாமலுரைத்து வாழும்-
வகை அடியேனுக்கருள் செய் மகிழ்ந்து நீயே. 5

* முன்னுரைத்த திருவிருத்தம் நூறு பாட்டும்
முறையின்வருமாசிரியமேழு பாட்டும்
மன்னிய நற்பொருட் பெரியதிருவந்தாதி
மறவாதபடி யெண்பத்தேழு பாட்டும்
பின்னுரைத்ததோர் திருவாய்மொழி எப்போதும்
பிழையறவாயிரத்தொருநூற்றிரண்டு பாட்டும்
இந்நிலத்தில் வைகாசி விசாகந்தன்னில்
எழிற்குருகைவருமாறனிரங்கு நீயே. 6

தேறிய மாஞானமுடன் திருக்கோளூரில்
சித்திரையில் சித்திரைநாள் வந்துதோன்றி
ஆறிய நல்லன்புடனே குருகூர்நம்பிக்கு
அனவரதமந்தரங்கவடிமை செய்து

மாறனையல்லாலென்றுமறந்தும் தேவு-
மற்றறியேனெனு மதுரகவியே, நீ முன்-
கூறியகண்ணிநுண்சிறுத்தாம்பதனிற்பாட்டுக்
குலவு பதினொன்றுமெனக்குதவு நீயே. 7

பொன்புரையும் வேற்குலசேகரனே மாசிப்-
புனர்பூசத்தொழில் வஞ்சிக்களத்துத் தோன்றி
அன்புடனே நம்பெருமாள் செம்பொற்கோயில்
அனைத்துலகின் பெருவாழ்வும், அடியார்தங்கள்-
இன்பமிகு பெருங்குழுவுங்காண மண்மேல்-
இருளிரியவென்றெடுத்தவிசையிற் சொன்ன
நன்பொருள்சேர் திருமொழிநூற்றைந்து பாட்டும்
நன்றாகவெனக்கருள் செய் நல்கி நீயே. 8

பேரணிந்த வில்லிபுத்தூராணிதன்னில்
பெருஞ்சோதிதனில் தோன்றும் பெருமானே, முன்
சீரணிந்தபாண்டியன்றன் நெஞ்சுதன்னில்
தியக்கற மால்பரத்துவத்தைத் திறமாச் செப்பி
வாரணமேல் மதுரை வலம்வரவே வானில்-
மால்கருடவாகனனாய்த் தோன்ற வாழ்த்தும்
ஏரணி பல்லாண்டு முதற்பாட்டு நானூற்-
றெழுபத்தொன்றிரண்டுமெனக்குதவு நீயே. 9

* வேயர்புகழ் வில்லிப்புத்தூராடிப் பூரம்
மேன்மேலும்மிகவிளங்க, விட்டுசித்தன்-
தூயதிருமகளாய் வந்து அரங்கனார்க்குத்-
துழாய்மாலை முடிசூடிக் கொடுத்த மாதே,
நேயமுடன் திருப்பாவைப் பாட்டாறைந்தும்
நீயுரைத்ததை யொருதிங்கட் பாமாலை
ஆயபுகழ் நூறுடன் நாற்பத்துமூன்றும்
அன்புடனே யடியேனுக்கருள் செய் நீயே. 10

மன்னுமதிள் திருமண்டங்குடிதான் வாழ
மார்கழிமாதக் கேட்டைநாளில் வந்து
துன்னுபுகழ்த்தொண்டரடிப்பொடியே நீமுன்-
துழாய்மாலைப்பணியடிமை செய்து நாளும்

தென்னரங்க மணவாளற்கன்புமிக்குச்
செப்பிய நற்றிருமாலை நாற்பத்தைந்தும்
பன்னிய நற்றிருப்பள்ளியெழுச்சி பத்தும்
பழவடியேனுக்கருள் செய் பரிந்து நீயே. 11

உலகறிய மலிபுகழ்க்கார்த்திகை மாதத்தில்
உரோகிணி நாளுறந்தைவளம்பதியில் தோன்றித்
தலமளந்த தென்னரங்கர்பால் உலோக-
சாரங்கமாமுனிதோள் தனிலே வந்து
பலமறையின் பொருளாற் பாண்பெருமாளே நீ-
பாதாதிகேசமதாய்ப் பாடித் தந்த
சொலவமலனாதிபிரான் பத்துப்பாட்டும்
சோராமலெனக்கருள் செய் துலங்க நீயே. 12

*அறிவுதரும் பெரியதிருமொழி தப்பாமல்
ஆயிரத்தோடெண்பத்துநாலு பாட்டும்
குறியதொருதாண்டகம் நாலைந்து ஆறைந்துங்-
குலாநெடுந்தாண்டகமெழுகூற்றிருக்கை யொன்றும்
சிறியமடற்பாட்டு முப்பத்தெட்டிரண்டும்
சீர்பெரியமடல் தனிற்பாட்டெழுபத்தெட்டும்
இறையவனே கார்த்திகையிற் கார்த்திகைந்நாள்
எழிற்குரையல் வருகலியாவிரங்கு நீயே. 13

*தேசமெலாமுகந்திடவே பெரும்பூதூரில்
சித்திரையிலாதிரைநாள் வந்து தோன்றிக்
காசினிமேல் வாதியரைவென்று அரங்கர்-
கதியாக வாழ்ந்தருளுமெதிராசா, முன்-
பூசுரர்கோன் திருவரங்கத்தமுதனார் உன்-
பொன்னடிமேலந்தாதியாகப் போற்றிப்
பேசிய நற்கலித்துறை நூற்றெட்டுப் பாட்டும்
பிழையறவே யெனக்கருள் செய் பேணி நீயே. 14

எண்ணின் முதலாழ்வார்கள் மூன்று நூறும்
எழின்மழிசைப் பிரானிருநூற்றிருபத்தாறும்
உண்மைமிகு மாறன்மறையாயிரத்தோடு
உற்றஇருநூற்றுத் தொண்ணூறுமாறும்

வண்மையுடை மதுரக விபத்துமொன்றும்
வஞ்சியர் கோன் நூற்றைந்தும், பட்டநாதன்
பண்ணியல் நானூற்றெழுபத்து மூன்றும்
பார்க்கோதை நூற்றெழுபத்துமுன்றே, 15

பத்தரடிப்பொடி பாடலைம்பத்தைந்தும்
பாணர்புகல் பத்துடனே பரகாலன்சொல்
அத்தனுயர்வேங்கட மாற்காயிரத்தோடு
ஆன இருநூற்றேரைம்பத்து மூன்றும்
முத்திதருமெதிராசர் பொன்னடிக்கே
மொழிந்த வமுதர் பாடல் நூறுமெட்டும்
எத்திசையும் வாழவிவர் பாடிவைத்த
இவை நாலாயிரமுமடியோங்கள் வாழ்வே. 16

*வையகமென் பொய்கை பூதம் பேயாழ்வார்
மழிசையர்கோன் மகிழ்மாறன் மதுரகவிகள்
பொய்யில் புகழ்க்கோழியர்கோன் விட்டுசித்தன்
பூங்கோதை தொண்டரடிப்பொடி பாணாழ்வார்
ஐயனருட் கலியனெதிராசர்தம்மோடு
ஆறிருவரோரொரு வரவர்தாஞ்செய்த
துய்ய தமிழிருபத்துநான்கிற் பாட்டின்
தொகை நாலாயிரமுமடியோங்கள் வாழ்வே 17

*அந்தமிலா ஆரண நாலாகி நின்ற
அதன் கருத்தை யாழ்வார்களாய்ந்தெடுத்துச்
செந்தமிழாலருள் செய்த வகை தொகையும்
சிந்தாமலுலகங்கள் வாழவென்று
சந்தமிகு தமிழ்மறையோன் தூப்புல் தோன்றும்
வேதாந்தகுரு மொழிந்த ப்ரபந்தசாரம்
சிந்தையிலுலனுதினமுஞ் சிந்திப்போர்க்குச்
சேமமதாந் திருமால்தன் கருணையாலே. 18

பிரபந்தசாரம் முற்றிற்று.

ஸ்ரீமத் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்!

ஸ்ரீ :

<u>அனுபந்தம் 8</u>

# ஸப்ததி ரத்ந மாலிகா

ஸ்ரீ வேதாந்த தேசிகன் விஷயமான இந்த அழகிய ஸ்தோத்திரத்தை அருளிச்செய்தவர் ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் ஸ்வாமி. இவர் ஸ்வாமி ஸ்ரீதேசிகனுடைய திருக்குமாரரான நயினாராசார்யருடைய சிஷ்யர்.

ரத்னங்களுக்கொப்பான எழுபது சுலோகங்களைக் கொண்டு தொகுக்கப்பட்ட பாமாலையாதலால் இது இப்பெயர் பெற்றது. திருவேங்கடமுடையான் விஷயமான ஸுப்ரபாதம், ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களாசாஸனம் ஆகிய அரிய ஸ்தோத்திரங்களை அருளிச் செய்தவரும் இவரே என்பர்.

''கமலா குச சூசுக......'' என்று ஆரம்பிக்கும் ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்திரத்தின் நடையழகையும் சொல் மிடுக்கையும் கருத்தழகையும் இந்த ஸ்தோத்திரத்திலும் பல இடங்களில் காணலாம்.

இந்த ஸ்தோத்திரம் இவர் அருளிச் செய்ததா என்பதைப் பற்றி ஸமீப காலத்தில் ஒரு சர்ச்சை எழுந்துள்ளது. முந்திய பாராவில் கூறியுள்ளபடி ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்திரத்துக்கும் இதற்கும் உள்ள ஒற்றுமையைக் கொண்டு இந்த ஸ்தோத்திரத்தை அருளிச் செய்தவரும் இவரே என்பதில் சிறிதும் ஐயத்திற்கு இடமில்லை என்பது பலருடைய கருத்து.

இந்த ஸ்தோத்திரத்திலிருந்து தேசிகன் பெருமையை விளக்கும் சுலோகங்களை மட்டும் இங்கே கொடுத்துள்ளோம் சுலோகங்களில் அடங்கியுள்ள கருத்துக்களை ஸம்ஸ்க்ருதம் தெரியாத தேசிக பக்தர்களும் அறிந்து கொள்ளும்பொருட்டு ஒவ்வொரு சுலோகத்தின் சுருக்கமான அர்த்தத்தையும் அந்த அந்த சுலோகத்தின் தலைப்பாகக் கொடுத்துள்ளோம். ஆஸ்திக வாசகர்கள் படித்து, அநுஸந்தித்து ஆனந்தம் அடைவார்களாக.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன்

அருளிச் செய்த

# ஸப்ததி ரத்ந மாலிகா

### ஸ்ரீ வேங்கடநாதன் தனியன்

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்கிக கேஸரீ |
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி || ௧

### ஸ்ரீநயினாராசார்யர் தனியன்

ஸ்ரீமல்லக்ஷ்மண யோகீந்த்ர ஸித்தாந்த விஜயத்வஜம் |
விச்வாமித்ர குலோத்பூதம் வரதார்யமஹம் பஜே || ௨

### ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் தனியன்கள்

வேதாந்ததேசிக கடாக்ஷ விவ்ருத்த போத-
வித்வஜ்ஜனேட்ய வரதார்ய க்ருபைகபாத்ரம் |
வத்ஸாந்வவாயம் அநவத்ய குணைருபேதம்
பக்த்யா பஜாமி பரவாதிபயங்கரார்யம் || ௩

ஸ்ரீமத்த்ரயீ மகுட தேசிக பாதபத்ம
ப்ருங்காயமாண வரதார்ய தயைக பாத்ரம் |
தத்ஸூக்திலேச விபவாத்த ஸமஸ்த தத்வம்
பக்த்யா பஜாமி பரவாதி பயங்கரார்யம் || ௪

### ஒப்பற்ற ஜோதியான வேங்கடநாதன் வாழ்கவே!

ஜீவனம் ஜகதாம் ஜீயாத் கிமப்யபகத ஸ்ப்ருஹம் |
ஸ்வதந்த்ரம் ஸர்வதந்த்ரேஷு வேங்கடேசாஹ்வயம் மஹ: ||

### வாதிகளாகிய யானைகள் கண்டு நடுநடுங்கும் கவிதார்க்கிக சிங்கத்தைப் பணிகின்றேன்

சோச்ரூயமாணா யச்சப்தம் கவிதார்கிக குஞ்ஜரா: |
ஸ்வப்னே ப்ரஸூஸ்ருவு: நித்யம் ஸிம்ஹம் கமபி தம் பஜே ||

பாகவத பக்தியிற் சிறந்த இவ்வாசார்யனை
ஆச்ரயித்து சிறப்புற்றோம்

ஸ்ரீமதாம் ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பிநோ |
தேந வேங்கடநாதேந ஸநாதா: ஸுகிநோ வயம் || 7

ஸ்ரீ ரங்கநாதனிடம் விருது பெற்ற
ஆசார்யனை வணங்குகிறோம்

வேதாந்த தேசிகபதம் யஸ்மை ஸ்ரீரங்க சாயிநா |
தத்தம் தஸ்மை நமஸ்குர்மோ வேங்கடேச விபச்சிதே || 8

திராவிட-ஸம்ஸ்க்ருத ஸூக்திகளையும் நயினாராசார்யரையும்
தோற்றுவித்த ஆசார்யனே எனக்குக் கதி

தக்ஷிணோத்தர தேசீய ஸூக்த்யா வரததேசிக: |
யஸ்மாதஜனி ஸோதர்ய: தஸ்மாந்நான்யா கதிர் மம || 9

ஸகல நற்குணங்களுக்கும் இருப்பிடமான ஸ்வாமி
தேசிகனின் அடியேன் நான்

ஞானம் து வினயோ பக்தி: ஸம்பத்தி: வீதராகதா |
ஆரோக்யம் யஸ்ய தஸ்யாஸ்மி தாஸோ வேதாந்த-
ஸத்குரோ: || 10

வேதாந்தாசார்யர் என்னும் அஸாதாரணமான திருநாமம்
பெற்றுள்ள குருவிடம் பரத்தை ஸமர்ப்பித்துவிட்டேன்

யஸ்மிந்நனன்ய ஸாமான்யா வேதாந்தாசார்யதா குரௌ |
யதா புருஷதா விஷ்ணௌ தஸ்மின் ந்யஸ்தபரோ
(அ)ஸ்ம்யஹம் || 1

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸாக்ஷாத் திருவேங்கடமுடையானே

ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரத்வாத் சாஸ்த்ர தீபப்ரதானத: |
ஸ்ரீவேங்கடாத்ரிநாதோऽஸௌ ஸாக்ஷாத் வேதாந்த தேசிக: ||

விச்வாமித்ர கோத்ரத்தில் உதித்த விஷ்ணு கண்டாவதாரர்
வியாக்யான சக்ரவர்த்தியாகவும் விளங்குகிறார்

ஆவிர்பூதி: யஸ்ய வம்சாதனர்காத்
வைச்வாமித்ராத் விஷ்ணு கண்டாம்சகஸ்ய |

ஶ்ரீமான் ஸோ(அ)யம் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ர:
வக்தா வ்யாக்யாஸார்வபௌமோ விபாதி ‖ 13

திருவேங்கடமுடையானது தீர்த்தவாரித் திருநாளன்று
உதித்தவர் விஷ்ணு கண்டாவதாரராகிய
கவிதார்க்கிக ஸிம்ஹம்

பாத்ரபத மாஸகத விஷ்ணு விமலர்க்ஷே
வேங்கடமஹீத்ரபதி தீர்த்த தினபூதே |
ப்ராதுரபவத் ஜகதி தைத்ய ரிபு கண்டா
ஹந்த! கவிதார்கிக ம்ருகேந்த்ர குருமூர்த்யா ‖ 14

எம்பெருமானைப் போன்ற கல்யாண குணங்கள்
நிறைந்தவராயும் தோஷமற்றவராயும் இருப்பதால்
இவர் திருவேங்கடமுடையானே

தமிமம் ஶ்ரீமத்வேங்கடநாதாசார்யம் வதந்தி கில ஸந்த: |
ஶ்ரீமத்வேங்கடநாதம் ஸதஸத் குணராசியோக-
ஹாநிப்யாம் ‖ 15

எம்பெருமானைப் போன்ற அவதார
பிரயோஜனத்தை உடையவர்

அவநாய ஸதாம் அஸத்குணப்ரபலாடோபநிபர்ஹணாய ச |
அபி வைஷ்ணவ தர்ம வ்ருத்தயே ஜனனம் ஶ்ரீநிகமாந்த
ஸத்குரோ: ‖ 16

ஶ்ரீமத் ராமாநுஜ ஸித்தாந்தத்தை நிர்த்தாரணம் செய்து
ஶ்ரீமந்நாராயணனின் பரதத்துவத்தை நிரூபணம் செய்தவர்

வேங்கடேச்வரவிபச்சிதி ஜாதே நிஸ்ஸபத்நமபவத் கில
பாஷ்யம் |
தத்வமப்ரதிஹதம் ச ததாஸீத் யேந மோக்ஷபதவீ
ஸுகலப்யா ‖ 17

**உத்தம குலத்தில் உத்தமர்களான பெற்றோர்களுக்குப் பிறந்து உத்தமர்களான ஆசார்யர்களை ஆச்ரயித்து உத்தமரான குமாரரையும் பெற்று ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராக விளங்கியவர்**

*புத்ரோ(அ)னந்தார்யஸூரே: புருஷஸமகுண: புண்டரீகாக்ஷ-*
*யஜ்வந:*
*பௌத்ர: தோதாரபிக்யா ச்ருதவரஜனனீ கர்ப்பவாராசி*
*சந்த்ர: |*
*விச்வாமித்ரான்வவாயோ வரதகுருபிதா வாதிஹம்ஸ-*
*ஸாம்புவாஹாத்*
*ஆசார்யாதாப்தசாஸ்த்ரோ வரதகுருமத; ஸர்வதந்த்ர-*
*ஸ்வதந்த்ர: ‖ 18*

**இருபது பிராயத்துக்குள் ஸகல கலைகளையும் கசடறக் கற்ற வேதாந்த தேசிகனுக்கு பலமுறை பிரணாமங்கள்**

*அனந்தஸூரிஸூநவே(அ)பிநந்த்யமானவைபவாத்*
*திகந்தவாதிஹம்ஸஜைத்ரகாளமேகதேசிகாத் |*
*உபாத்த ஸர்வ சாஸநாய ஹந்த! வர்ஷவிம்சதௌ*
*புந: புந: நமஸ்க்ரியாஸ்து வேங்கடேசஸூரயே ‖ 19*

**ஞான வைராக்ய பூஷணராய் விளங்கியவரும் அனேக ஸத்க்ரந்தங்களை இயற்றியவரும் பகவத்-பாகவத பக்தி மிகுந்தவரும் புலன்களை அடக்கியவருமான வேதாந்த குரு நமக்கு நன்மை பயப்பாராக**

*வேதாந்தாசார்யவர்யோ விதிதபஹுகுணோ*
*வீதராகாக்ரயாயீ*
*வித்வான் வித்யாநிஷத்யா விரசித விவிதாநேக திவ்ய*
*ப்ரபந்த: |*
*விஷ்ணௌ விஷ்ண்வாச்ரிதேஷு ப்ரகடிதவிநயப்ரேம*
*சேஷத்வவ்ருத்தி:*
*விக்யாத: ச்ரேயஸே ஸ்யாத் விஷயஜிதிஹ நோ*
*வேங்கடாசார்யவர்ய: ‖ 20*

**வடமொழிக் கவிதையில் பட்டருக்கும் தமிழ்க் கவிதையில் பரகால, பக்திஸாரர்களுக்கும் நிகரானவர்**

*ய: ஸம்ஸ்க்ருத கவிதாயாம் ப்ரௌடிம்ஞந்வேதி கூரநாத-
ஸூதம் |
த்ரவிடகவிதாமார்கே பரகாலம் வா(அ)த பக்திஸாரம்
வா || 21*

**இம்மைக்கும் மறுமைக்கும் பயன்படும்படி ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ள நூல்கள் கணக்கிலடங்கா**

*பரச்சதம் வாபி பரஸ்ஸஹஸ்ரம் ஸ்ரீவேங்கடாசார்யக்ருதா:
ப்ரபந்தா. |
தத்ராலமேக: கலு புக்திமுக்த்யோ: கார்த்ஸ்ன்யேன
கஸ்தான் கணயேத் ஸமஸ்தான் || 22*

**நன்னடத்தைக்கு இருப்பிடமானவரும், தெளிந்த ஞானமுடையவரும், பாபிகள் உய்வதற்கும் கருணையுடன் வழிகாட்டியவருமான அவரே நமக்குத் தஞ்சம்**

*யதீயசரிதம் ஸதாம் ஸூசரிதவ்யவஸ்தாபகம்
யதீயவசனம் பரம் ஸ்கலஸம்சயோன்மூலனம் |
யதீயகருணா கதி: ஸகலதர்ம சூந்யாத்மனாம்
ஸ ந: சரணமஸ்த்வஸௌ ஸகலதந்த்ரநிர்வாஹக: || 23*

**த்ரிகரண சுத்தி, வைராக்யம், பகவத் பாகவத பக்தி, பக்ஷபாதமின்மை போன்ற எல்லா நற்குணங்களுடன் வாழ்க்கை பூராவும் விளங்கியவரன்றோ ஸ்வாமி தேசிகன்**

*தாந்தி: சாந்தி: சுசித்வம் விஷயவிஜயிதா தீரதா நிஸ்ப்ரு-
ஹத்வம்
சேஷத்வம் ஸ்ரீசதத்தாஸஜனவிஷயகம் பாரதந்த்ர்யம் ச
தத்ர |
அக்ஷோப்யத்வம் படுத்வம் ம்ருதுஸமவசிதா நிர்பரத்-
வானஸூயே
யஸ்மின் ஆஜானஸித்தம் ஸ கலு விஜயதே வேங்கடா-
சார்யவர்ய: || 24*

**கருணை மிக்கவரும், பகவத் க்ருபைக்கு பாத்திரரும், பராங்குச பரகாலர்களின் திவ்ய ஸூக்திகளை சுவையுடன் ரசித்தவருமான கவிதார்க்கிக ஸிம்ஹத்தை வணங்குகிறேன்**

*கலயே ஸததம் கருணாஜலதிம் கருணாவிஷயம் கமலாதிபதே: |*
*கலிவைரிசடாரி வசோ ரஸிகம் கவிதார்கிககேஸரி-*
*ஸூரிகுரும் ||* 25

**திவ்வியப் பிரபந்தங்களின் ஸம்ப்ரதாயரீதியான அர்த்தங்களைக் கற்றறிந்து ஒழுகியவர் வேங்கடேச குரு**

*ஸரோபூத வேதாள ஸாரஸ்வதாநாம் சடத்விட்கலித்வம்ஸி முக்யோதிதானும் |*
*அவிச்சின்னஸத்ஸம்ப்ரதாயார்த்தவேதீ குருர்வேங்கடேசோ குரூக்திஷ்வதுல்ய: ||* 26

**சாஸ்த்ரஜ்ஞர்களையும், கோபம் முதலியவைகளை வென்றவர்களையும், தர்மாத்மாக்களும், வேதாந்த ஜ்ஞானமுள்ளவர்களையும் இவரை உதாஹரித்துப் பின்பற்றுபவர்களாகக் கூறலாம்**

*யுக்தா அலூக்ஷா அபி தர்மகாமா: ஸம்மர்சிஞே யுக்திஸமந்-விதா: ச |*
*ஸத்ப்ராம்ஹணா: வேதசிர: ப்ரஸித்தா: ஸ்ரீவேங்கடாசார்ய-முகா: ஹி நூநம் ||* 27

**வேதங்களில் வியாஸபகவானை ஒத்த ஜ்ஞானமுடையவரும், கல்பஸூத்ர ப்ரயோகங்களை நன்கறிந்தவருமான இவர் ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரராக விளங்குகிறார்**

*ஜடாவர்ண சர்ச்சாத்யனேக ப்ரகாரத்ரயீ லக்ஷணோச்சாரணே வ்யாஸகல்ப: |*
*ததா கல்பஸூத்ர ப்ரயோகாத்யபிஜ்ஞோ ஜயத்யந்வஹம் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர: ||* 28

**ஸகல சாஸ்த்ரங்களிலும் பாண்டித்யத்துடன்
விளங்குபவர் அனந்த ஸூரியின் திருக்குமாரர்**

*பரத்வாஜ சாண்டில்ய ஹாரீதமுக்ய
ஸ்ம்ருதிஸ்தோமஸூக்ஷ்மார்த்த நிர்ணீதிதக்ஷ: |
புராணுகமாதிஷ்வஸாதாரணஸ்ரீ:
ஸுதோ பாதி லோகேஷ்வனந்தார்ய ஸூரே: ||* 29

**இயல், இசை, நாடகம் முதலிய கலைகளிலும்
ஜோதிஷம், மீமாம்ஸை முதலிய
சாஸ்திரங்களிலும் வல்லவர்**

*ஜ்யோதிச் சந்தச்சப்த சாஸ்த்ரப்ரவீண:
காவ்ய ச்ரேணீ நாடகாலங்க்ருதிஜ்ஞ: |
மீமாம்ஸாயாம் ப்ரம்ஹ கர்மாத்மிகாயாம்
ஸ்ரஷ்டா ஸாக்ஷாத் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர: ||* 30

**ஆழ்வாராசார்யர்களுடைய அடிச்சுவட்டைப்
பின் பற்றித் தம்மை அண்டியவரை உய்வித்தவர்**

*ஸர்வோஜ்ஜீவனசிந்தயா கடகதாபாவேந தாணுத் க்ருதி-
ச்ரேஷ்டாணும் பஹுச: ததுத்தரணத:
த்ரய்யந்தஸம்ரக்ஷணுத் |
ஸ்ரீமச்ச்ரீ சடகோப முக்ய திவிஷந்நாதார்ய ராமானுஜா-
சார்யானப்யுபயாதி ஹந்த! நிகமாந்தாசார்ய-
சூடாமணி: ||* 31

**அரங்க நகர திவ்ய தம்பதிகளிடம் விருது பெற்றவர்**

*இஹ ரங்கபதி ப்ரஸாதலப்தோபயவேதாந்ததுரந்தரத்வ
கீர்த்தி: |
அபி தத்ஸஹதர்மிணீ க்ருபாத்தாகில தந்த்ர ப்ரபுதாக
ஏஷ ஸூரி: ||* 32

### பொறுமையில் எம்பெருமானுக்கும், ஜ்ஞானத்தில் ஆதிசேஷனுக்கும் புத்தியில் ப்ருஹஸ்பதிக்கும், விரோதிகளை ஜயிப்பதில் திருவாழியாழ்வானுக்கும் ஒப்பானவர்

*க்ஷமாயாம் ஹி யஸ்யோபமானம் முகுந்த: ச்ருதௌ தஸ்ய*
*தல்போ மதௌ தேவமந்த்ரீ |*
*ஜயே வைரிணாம் தைத்யஸம்ஹாரகாரீ ஸ ஜீயாத் சிரம்*
*ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர: ||* 33

### ஆசார்யனுக்கு வேண்டிய லக்ஷணமும் சிஷ்யனுக்குத் தேவையான குணங்களும் ஒருங்கே அமையப் பெற்றவர்

*ஆசார்யத்வோபயுக்தா: முநிகணகதிதா: தேசிகை: ஸ்வேந*
*சோக்தா:*
*ஸர்வே பத்ரா குணா: ஸ்யு: ஸமுதிதவிபவா:*
*ஸ்ர்வதந்த்ர ஸ்வதந்த்ரே |*
*சிஷ்யத்வே சோபயுக்தா அபி ச குணகணா: கூரநாதே*
*யதா ஸ்யு:*
*நான்யத்ராசார்யவர்க்கே கதிசன ஹி குணா: ப்ராயச:*
*தத்ர த்ருஷ்டா: ||* 34

### குற்றமற்றவையான தேசிக ஸ்ரீஸூக்திகள் எம்பெருமானுக்கு உகப்பானவை—ராமாநுஜ ஸித்தாந்தத்தை மேலும் மேலும் வளரச் செய்பவை

*யதிபதிஸம்ப்ரதாயபரிபோஷகஸ்ய ஸததம் நிகமாந்தகுரோ:*
*அதிபதிதாம்ருதா ஸரஸதாகுணேன ஸுமனஸ்ரஜோ*
*ம்ருதுதரா |*
*அதிகதலக்ஷணா விமலஸூக்திரார்த்திசமநீ விபக்ஷமதநீ*
*கலயது ந: சுபாநி பகவத்ததீய-*
*யதிராஜஹர்ஷஜனனீ ||* 35

## நிகரற்ற ஸ்ரீதேசிக ஸூக்திகள் சேதநரை மருள் நீக்கி உய்விக்க வந்தவை

*அபி ச பவாஹிதஷ்டபரிமூர்ச்சிதஸ்ய பவிந: ப்ரபோதனகரீ
சமதம தோஷபீதி பகவத்ததீயஜன பக்திமுக்திஜனனீ ।
விஷய பரத்வ கோப மதமோஹ லோப சடதாதி தோஷசமநீ
புவி ஸத்ருசீதராஸ்தி ந ஹி ஸூக்திரத்ய
நிகமாந்த தேசிககிர: ॥ 36*

## தெளியாத மறை நிலங்கள் தெளிவிக்க உதித்தவை ஸ்ரீதேசிக ஸூக்திகள்

*கர்மவிசிகித்ஸா வ்ருத்தவிசிகித்ஸா
தர்மவிசிகித்ஸா ஸர்வவிசிகித்ஸா ।
சாம்யதி ஹ நூநம் ஸர்வபுருஷாணாம்
வேங்கடவிபச்சித் வாக்விலஸிதேன ॥ 37*

## ராமாநுஜ தர்சனத்தின் தீபம் போன்ற ஸ்ரீ தேசிக ஸூக்திகள் நமக்கு மங்களத்தைத் தருவதாக

*யதுக்தயோ யதிபதிதந்த்ரதீபிகா:
ஸலக்ஷணா: ஸரஸதமா: ஸதாம் மதா: ।
ஸமத்ஸரைரபி ஸததம் பரோக்ஷத:
ப்ரசம்ஸிதா: பரிகலயேத் ஸ ந: ச்ரியம் ॥ 38*

## உபய வேதாந்த விற்பன்னரான ஸ்ரீதேசிகனுக்குப் பல்லாண்டு!

*வாணீ யஸ்ய த்ராமிட ஸாம்ஸ்க்ருதீ ச
ப்ராய: ப்ராசாமாசயானந்வவாதீத் ।
அர்வாசாமப்யாஸ வையாத்யமூலம்
ஜீயாத் ஸோயம் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர: ॥ 39*

## அஞ்ஞானத்தைப் போக்குபவை ஸ்ரீதேசிக ஸூக்திகள்

யதீயக்ருதிஷு க்ஷணம் பரிசிதி: ஸதாம் சாதுரீம்
 தநோதி பஹுவத்ஸரச்ரமமனுஸ்நுதாம் அந்யத: |
தமத்ய யதிபூபதி ப்ரதித ஸந்மதோத்தாரகம்
 பஜே கவிகதாரத த்விரதப்ருந்த கண்டீரவம் || 40

## யதிராஜ ஸப்ததியின் பெருமை

கவிவாதி கரிஸிம்ஹக்ருதிரத்ன திலகம்
 யதிராஜவர ஸப்ததிமிமாமநுதினம் |
ப்ரவதந்தி பரவாதி திமிரௌக மிஹிரா;
 த இமே ஹி யதிராஜகருணைகவிஷயா: || 41

## ஸ்ரீபாதுகா ஸஹஸ்ரத்தின் பெருமை

வேங்கடேசவிதுஷா ரசிதாநாம்
 ஜ்ஞாயதே ந கணநா(அ)பி க்ருதீநாம் |
தத்ர சாபி ந ஹி ரங்கபதிஸ்ரீபாதுகா-
 ஸ்துதிஸஹஸ்ரஸமா(அ)ந்யா || 42

## ராமாநுஜ தர்சனத்தின் சாரத்தை போதிப்பது பாதுகா ஸஹஸ்ரம்

வேங்கடேசகுருக்ரதிதம் யே
 பாதுகாஸ்துதிஸஹஸ்ரமஜஸ்ரம் |
ஸார்த்தபோதமனுஸந்தததே தே
 ஸம்யமீந்த்ரமதஸாரவித: ஸ்யு: || 43

## ஸங்கல்ப சூர்யோதயத்தின் பெருமை

அநந்யஸாதாரண சாதுரீ ச காவ்யாதிஷு ப்ரஹமவிதக்ர-
 ணீத்வம் |
ததாஷ்டபாஷாகவிதாபடுத்வம் ஸங்கல்பஸூர்யோதய-
 த்ருச்யமஸ்ய || 44

### சததூஷணி, தத்வ முக்தாகலாபம் பெருமை

தூஷண்யாதௌ தார்கிகாக்ரேஸரத்வம்
ஸ்பஷ்டம் ஸ்ரீமத்வேங்கடேசஸ்ய ஸூரே: |
அந்யா(அ)லப்யா சாதுரீ பத்யகும்பே
ஸர்வஜ்ஞத்வம் தத்வமுக்தாகலாபே || 45

### தற்காப்புக்குக் கேடயம் போன்ற ஸர்வார்த்த ஸித்தியும், எதிரியை வெல்ல உதவும் வாள் போன்ற சததூஷணியும்

ஸர்வார்த்தஸித்தி: சததூஷணீ ச
த்வே கேடசஸ்த்ரே கதகாக்ரகாணும் |
ஆத்யேன தத்ர க்ரியதே ஸ்வரக்ஷா
ப்ரத்யர்த்திபங்க: கலஹே(அ)ந்யதம: ஸ்யாத் || 46

### ஸ்ரீபகவத் ராமாநுஜ ஸித்தாந்த நிர்த்தாரண ஸார்வ பௌமரான ஸ்ரீ தேசிகன் ஜகத்குரு

அத ஏவ ஸர்வஜகதாம் ஸ குரு:
யதி சக்ரவர்த்தி மததிக்கஜ: |
கவிதார்கிகத்விரதபஞ்சமுகோ
ஹ்யத ஊர்ஜிதம் ஹ்யக்ருத பாஷ்யமிதம் || 47

### தேசிகன் திருக்குமாரரான நயினாராசார்யரின் பெருமை

ச்ருதிசீர்ஷதேசிக சிரோமணிநா
ஜனகேந யேந ஹி ஸுசிக்ஷிததீ: |
வரதோ குருச்ச யதிராஜமத-
ப்ரதிவாதிகோடி சதகோடிரபூத் || 48

### எம்பெருமான் திருவருளுக்கும் எம்பெருமானார் கருணைக்கும் இலக்காவதற்கு தேசிகனிடம் பக்தி வேண்டும்

நிச்ரேயஸம் யே(அ)பிலஷந்தி தஸ்ய
மூலம் க்ருபாம் சாபி ரமாஸகஸ்ய |
தயாம் யதீந்த்ரஸ்ய ஹி தைரவச்யம்
கார்யா ஹி பக்தி: கவிவாதி ஸிம்ஹே || 49

## ஸ்வாமி தேசிகனின் ஆத்மா போன்றவர் எம்பெருமானுர்

*ஸேவா விஷ்ணோ: வைஷ்ணவாராதநாந்தா*
*தத்வத்ஸேவா ஸ்வாமிந: ஸம்யமீநாம் |*
*வேதாந்தாசார்யாங்க்ரி பத்மார்ச்சநுந்தா*
*யஸ்மாதாத்மா வேங்கடேசஸ்ய ஸௌரே: ||* 50

## ஸகலவித ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்களுடன் விளங்கும் ஸ்வாமி தேசிகனின் திருவுருவம் என் மனத்தில் நிலைத்திருப்பதாக

*ஸசங்க சக்ரலாஞ்சன: ஸதூர்த்வபுண்ட்ர மண்டித:*
*ஸகண்ட லக்நஸத்துளஸ்யனர்க்க பத்மமாலிக: |*
*ஸிதாந்தரீய ஸௌத்தரீய யஜ்ஞஸௌத்ரசோபித:*
*மமாவிரஸ்து மானஸே குரு: ஸ: வேங்கடேச்வர: ||*

## ஸ்வாமி தேசிகனின் திருவடித்தாமரைகளே அடியேனுடைய குலதனம்

*நிகமாந்த தேசிக பதாம்புஜத்வயம்*
*நிரஸௌயவைஷ்ணவஜனப்ரியம் தனம் |*
*குலதைவதம் மம குத்ருஷ்டிமஸ்தக-*
*க்ஷிதிப்ருத்விபேதி குலிசாயுதாயிதம் ||* 52

## திவ்ய மங்கள விக்ரகமாக அடியேன் மனத்தில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீவேங்கடநாதனைத் துதிக்கின்றேன்

*மஹோத்பலாயித பாதயுகளம்*
*ரதிப்ரியேஷுதிப்ரதிரோதி ஸுஜங்கிகம் |*
*ககுத்ஸமான ஸுஜாநுகமஞ்சித-*
*ஸ்புரத்கட விலஸத்பரிதானகம் ||* 53

*ப்ரசஸ்த நாபிகமுஜ்வல வக்ஷஸம்*
*ப்ரஸந்ந ஸஸ்மித ஸந்முக பங்கஜம் |*
*மதீயஹ்ருத்கமலாஸனஸம்ஸ்திதம்*
*பஜாமி வேங்கடநாதவிபச்சிதம் ||* 54

**எல்லாவிதப் பெருமைகளும் வாய்ந்த ஸ்வாமி தேசிகனை வணங்குகின்றேன்**

*ப்ரபுத்ததாமரஸாபவிலோசனம்*
*ப்ரஸித்த சிஷ்யஜனை: பரிவாரிதம் |*
*ப்ரபத்தராகதமம் குருபாதயோ:*
*ப்ரபுத்தசேதஸம் அர்த்தஸமர்த்தனே ||* 55

*ஸரத்ந கம்பள பீடபரிக்ரஹம்*
*ஸமர்ந்தமுத்தித சம்சயநோதனே |*
*விரக்தஸஜ்ஜன ஸங்கசிரோமணிம்*
*பஜாமி வேங்கடநாத விபச்சிதம் ||* 56

**எம்பெருமானிடமும் எம்பெருமானாரிடமும் பக்தி நிறைந்த ஸ்வாமி தேசிகனை என் மனம் எப்போதும் துதிப்பதாக**

*கவிதார்கிக களப வ்ரஜ கபளீக்ருதி ஸிம்ஹம்*
*கமலாபதி கருணாரஸ பரிவர்த்தித போதம் |*
*யதிநாயக பதபங்கஜ யுகளீ பரதந்த்ரம்*
*பஜ மானஸ! புத வேங்கடபதி தேசிகமநிசம் ||* 57

**இதுவுமது**

*யதிந்ருபதி பதகமல ஸகலவித பந்தும்*
*கரிசிகரிபதி நகரஸௌசிர க்ருதவாஸம் |*
*பஜ ஹ்ருதய கவிகதஹரிமபி ச ரங்க-*
*க்ஷிதிரமண சரணயுக ஸததக்ருத ஸேவம் ||* 58

**தீமை செய்வோரிடமும் கருணை பாராட்டும் ஸ்வாமி ஸ்ரீ தேசிகனை எப்பொழுதும் என் ஹ்ருதய கமலங்களால் பூஜிக்கிறேன்**

*அதிம்ருதுலமனஸம் அதிவிபுல சுபநேத்ரம்*
*அதிசதுரம் அதிகுண யதிந்ருபதிபாஷ்யே |*
*உபகரணபரமநிசம் அபகரணசீலே(ஷு)*
*அபி கலய மம ஹ்ருதய கவிகதக ஸிம்ஹம் ||* 59

**கவிதார்க்கிக சிங்கமே! பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமை கொள்வாயாக!**

*கிஞ்ச மம மானஸமிதம் ச ஸமுதஞ்சிதமிஹாந்ய-*
*விஷயே(ஷு)*
*அஞ்சதி ந ஜாது கவிவாதிகரிபஞ்சமுக! தாவகபதம் |*
*வஞ்சனபரம் சடமகிஞ்சன ஜனப்ரிய! ஸபஞ்ச சரஜம்*
*சஞ்சலமிதம் புநரசஞ்சலதரம் குரு பவச்சரணயோ: || 60*

**நல்லோர் அனுஸந்தித்தால் ஸகலவித புருஷார்த்தங்களையும் அளிக்கவல்லது இந்த ஸப்ததி ரத்ந மாலிகை**

*ஸ்ரீவேங்கடேசஸ்ய குரோ: பதாப்ஜயோ:*
*ஸமர்பிதா ஸப்ததி ரத்னமாலிகா |*
*த்ருதா ஸுதீபி: ஹ்ருதயே விமத்ஸரை:*
*புஷ்ணாதி சோபாம் புருஷார்த்த நிர்ப்பராம் || 61*

**இதை அனுஸந்திப்பவர் எம்பெருமான்-எம்பெருமானாருடைய திருவருளைப் பெறுவர்**

*வேதாந்தாசார்ய ஸப்தத்யா குணவத்யா பரிஷ்க்ருதா: |*
*வேதாந்தவேத்ய ஸ்ரீபாஷ்யகார காருண்ய கோசரா: || 62*

**நிகமாந்த குருவுக்கும், அவருடைய சிஷ்யர்களுக்கும் இதை ஸமர்ப்பணம் செய்கிறேன்**

*ப்ரதிவாதிபயங்கரேண ஸா ஸுதியா ஸப்ததி ரத்நமாலிகா—*
*நிகமாந்தகுரௌ ஸமர்ப்பிதா ஹ்ருதயே தத்பஜதாம் ஸ்வயா*
*தியா || 63*

**கவிதார்க்கிக ஸிம்ஹத்துக்கு அஞ்ஜலி!**

*கவிதார்கிக ஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே |*
*ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்தகுரவே நம: || 64*

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான்*
*திருவடிகளே சரணம்.*

அனுபந்தம் 9

# ஆழ்வார்கள் அருளிச் செயலும் ஸகல கார்ய ஸித்தியும்

ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களின் பெருமையை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்ய த்ரய ஸாரத்தில் மிகச் சிறப்பாக விளக்கியுள்ளார். ''மேகங்கள் சமுத்திர ஜலத்தை வாங்கி ஸர்வோபஜீவ்யமான அமுதமாக (தண்ணீராக) உமிழுமாப்போல, வேதார்த்தங்களில் வேண்டும் ஸாரதமமான அம்சத்தை ஸர்வருக்கும் (ஸர்வ ஜனங்களுக்கும்) அதிகரிக்கலான பாஷையாலே ஸங்க்ரஹித்துக் காட்டி...'' என்று தொடங்கி, ஆழ்வார்கள் வேதம் தமிழ் செய்த மஹோபகாரத்தைத் தெளிவு படுத்தியிருக்கிறார்.

ஆழ்வார்கள் தம்முடைய அருளிச் செயல்களில் ஒவ்வொரு பதிகத்தின் முடிவிலும், அதை அநுஸந்திப்பதால் ஏற்படக்கூடிய பலனைக் கூறித் தலைக்கட்டியுள்ளார்கள். இதை ஆதாரமாகக் கொண்டு, இன்ன இன்ன காரியம் ஸித்திப்பதற்கு, இன்னல் தீர்வதற்கு இன்ன இன்ன பதிகத்தை அநுஸந்திக்க வேண்டும என்று மகான்கள் நிர்ணயித்துள்ளார்கள். அவை முழுவதையும் இந்நூலில் கொடுப்பது ஸாத்யமில்லையாதலால், அத்தகைய பதிகங்கள் ஒவ்வொன்றிலிருந்தும் ஒரு பாசுரத்தை மட்டும் பொறுக்கு மணியாக இங்கு கொடுத்துள்ளோம். ஆஸ்திகப் பெருமக்கள் இவைகளை அநுஸந்தித்துக் கண்கண்ட-கைகண்ட பலனை நிச்சயம் பெறலாம். அவகாசமுள்ளவர்கள் அந்த அந்தக் காரியம் ஸித்தியாவதற்கு குறிப்பிட்ட பதிகம் முழுவதையும் அநுஸந்தித்தல் உத்தமம். தேவைப்படும் உத்தேசத்திற்கான பாசுரத்தையோ, முடிந்தால் அப்பதிகத்திலுள்ள பத்துப் பாசுரங்களையுமோ தினமும் திட நம்பிக்கையுடன் இரு வேளையும் பாராயணம் செய்தால் நிச்சயம் காரியஸித்தி ஏற்படும். கூடவே, இக-பர சுகங்களுக்கான மார்க்கங்கள் தெளிவாகும். 'நம்பினோர் கெடுவதில்லை, இது நான்மறை தீர்ப்பு!' என்பதை நாம் என்றும் மறக்கலாகாது.

ஸ்ரீ:

# ஆழ்வார்கள் அருளிச் செயலும் ஸகல கார்ய ஸித்தியும்

## தீய நடத்தையுள்ள பிள்ளை திருந்த

*திரைநீர்ச் சந்திர மண்ட லம்போல்*
*செங்கண்மால் கேசவன், தன்*
*திருநீர் முகத்துத் துலங்கு சுட்டி*
*திகழ்ந்தெங்கும் புடைபெயர,*
*பெருநீர்த் திரையெழு கங்கை யிலும்*
*பெரியதோர் தீர்த்தபலம்*
*தருநீர், சிறுச்சண்ணம் துள்ளம் சோரத்*
*தளர்நடை நடவானோ.*

**பெரியாழ்வார் திருமொழி 1. 7. 10.**

## ஸத் புத்ரர்களைப் பெற

வட்டு நடுவே வளர்கின்ற, மாணிக்க
மொட்டு நுனியில் முளைக்கின்ற முத்தேபோல்,
சொட்டுச் சொட் டென்னத் துளிக்கத் துளிக்க, என்
குட்டன்வந் தென்னைப் புறம் புல்குவான்
கோவிந்த னென்னைப் புறம்புல்குவான்.

**—பெரியாழ்வார் திருமொழி 1. 9. 1.**

## பகவத் பக்தி ஏற்பட

*அரவணையாய்! ஆயரேறே!*
*அம்மமுண்ணத் துயிலெழாயே,*
*இரவுமுண்ணா துறங்கிநீபோய்*
*இன்றுமுச்சி கொண்டதாலோ,*
*வரவுங்காணேன் வயிறசைந்தாய்*
*வனமுலைகள் சோர்ந்துபாய,*
*திருவுடைய வாய்மடுத்துத்*
*திளைத்துதைத்துப் பருகிடாயே.*

**—பெரியாழ்வார் திருமொழி 2. 2. 1.**

**குறிப்பு:**—திருப்பாணாழ்வார் அருளிச் செய்துள்ள 'அமலனாதிபிரான்' பாசுரங்களில் ஏதாவதொன்றும், திருமழிசைப் பிரான அருளிச் செய்துள்ள 'திருச்சந்த விருத்தம்' 101-வது பாசுரமும், பூதத்தாழ்வார் அருளிச் செய்துள்ள 'இயற்பா' இரண்டாந் திருவந்தாதி முதற் பாசுரமும் இதே பலனைத் தர வல்லது இவைகளையும் சேர்த்து அநுஸந்திப்பது சாலச் சிறந்ததாகும்.

### ஸந்ததி பாக்யம் ஏற்பட

கொங்குங் குடந்தையும் கோட்டியூ ரும்பேரும்,
எங்கும் திரிந்து விளையாடு மென்மகன்,
சங்கம் பிடிக்கும் தடக்கைக்குத் தக்க நல்
அங்க முடையதோர் கோல்கொண்டுவா,
அரக்கு வழித்ததோர் கோல்கொண்டுவா.

*பெரியாழ்வார் திருமொழி 2. 6. ௨.*

### வீண் அபவாதம் நீங்க

குண்டலம் தாழக் குழல்தாழ நாண்தாழ,
எண்டிசை யோரு மிறைஞ்சித் தொழுதேத்த,
வண்டமர் பூங்குழ லார்துகில் கைக்கொண்டு,
விண்தோய் மரத்தானு லின்று முற்றும்,
வேண்டவும் தாரனு லின்று முற்றும்.

*—பெரியாழ்வார் திருமொழி 2. 10. ௨.*

### நாவன்மை-குரலினிமைகளைப் பெற

தேனுகன் பிலம்பன் காளிய னென்னும்
தீப்பப் பூடுக ளடங்க உழக்கி,
கான கம்படி யுலாவி யுலாவிக்
கருஞ்சிறுக் கன்குழ லூதின போது,
மேனகையொடு திலோத்தமை அரம்பை
உருப்பசி யரவர் வெள்கி மயங்கி,
வானகம் படியில் வாய்திறப் பின்றி
ஆடல் பாடலவை மாறினர் தாமே.

*—பெரியாழ்வார் திருமொழி 3. 6. ௪.*



ஸ்ரீ வயலாளி மணவாளன்

### எதிர்பாராமல் வந்த ஆபத்து நீங்க

காறை பூணும் கண்ணாடி
காணும்தன் கையில் வளைகுலுக்கும்,
கூறை யுடுக்கு மயர்க்கும் தன்
கொவ்வைச் செவ்வாய் திருத்தும்,
தேறித் தேறிநின் றாயிரம்பேர்த்
தேவன் திறம்பி தற்றும்,
மாறில் மாமணி வண்ணன்
மேலிவள் மாலுறு கின்றாளே.

—பெரியாழ்வார் திருமொழி 3.7 8.

**கங்கா ஸ்நான பலன் கிட்ட**

சலம்பொதி யுடம்பில் தழலுமிழ் பேழ்வாய்ச்
சந்திரன் வெங்கதி
மலர்ந்தெழுந் தணவி மணிவண்ண வுருவின்
மால் புரு டோத்தமன் வாழ்வு,
நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும்
நாரணன் பாதத்து ழாயும்,
கலந்திழி புனலால் புகர்படு கங்கைக்
கண்டமென் னும்கடி நகரே.

—பெரியாழ்வார் திருமொழி 4. 7. 2

**கன்னிப் பெண்களுக்குக் கல்யாணம் நிகழ**

மத்தளம் கொட்டவ ரிசங்கம் நின்றூத,
முத்துடைத் தாமநி ரைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பிம துசூதன் வந்து, என்னைக்
கைத்தலம் பற்றக்க னுக்கண்டேன் தோழீநான்.

—நாச்சியார் திருமொழி 6. 6.

**தொடர்ந்து வரும் துன்பங்கள் நீங்க**

அழிலும் தொழிலு முருக்காட்டான்
அஞ்சே லென்று னவனொருவன்,
தழுவி முழுசிப் புகுந் தென்னைச்
சுற்றிச சுழன்று போகானல்,
தழையின் பொழில்வாய் நிரைப்பின்னே
நெடுமா லூதி வருகின்ற,
குழலின் தொளைவாய் நீர்கொண்டு
குளிர முகத்துத் தடவீரே.

—நாச்சியார் திருமொழி 13. 5.



திருக்குடந்தை ஸ்ரீ ஆராவமுதன் திவ்ய தம்பதிகள்

நன்னடத்தை - நல்லொழுக்கங்களில்
நாட்டம் ஏற்பட

கொல்லணைவேல் வரிநெடுங்கண் கோசலைதன்
குலமதலாய்! குனிவில் லேந்தும்,
மல்லணைந்த வரைத்தோளா! வல்வினையேன்
மனமுருக்கும் வகையே கற்றாய்,
மெல்லணைமேல் முன்துயின்றாய் இன்றினிப்போய்
வியன்கான மரத்தின் நீழல்
கல்லணைமேல் கண்டுயிலக் கற்றனையோ
காகுத்தா! கரிய கோவே!

—பெருமாள் திருமொழி 9. 3

### செய்தொழிலில் நல்ல புகழும் லாபமும் கிடைக்க

சொல்லுவன் சொற்பொருள் தானவை யாய்ச்சுவை
ஊறொலி நாற்றமும் தோற்றமுமாய்,
நல்லரன் நான்முகன் நாரண னுக்கிடந்
தான்தடஞ் சூழ்ந்தழ காயகச்சி,
பல்லவன் வில்லவ னென்றுல கில்பல
ராய்ப்பல வேந்தர் வணங்குகழல்
பல்லவன், மல்லையர் கோன்பணிந் தபர
மேச்சுர விண்ணக ரமதுவே.

—பெரிய திருமொழி 2. 9. 1

### எந்நிலையிலும் எம்பெருமானின் உற்ற துணையைப் பெற

முந்து நூலும் முப்புரி நூலும் முன்னீந்த,
அந்த ணாளன் பிள்ளையை யஞ்ஞான் றளித்தானூர்,
பொந்தில் வாழும் பிள்ளைக் காகிப் புள்ளோடி,
நந்து வாரும் பைம்புனல் வாவி நறையூரே

—பெரிய திருமொழி 6. 5. 8

### வளமையும் மகிழ்ச்சியும் திகழும் நல்வாழ்க்கையைப் பெற

வில்லார் விழவில் வடமதுரை
விரும்பி விரும்பா மல்லடர்த்து,
கல்லார் திரடோள் கஞ்சனைக்
காய்ந்தான் பாய்ந்தான் காளியன் மேல்,
சொல்லார் சுருதி முறையோதிச்
சோமுச் செய்யும் தொழிலினோர்,
நல்லார் மறையோர் பலர்வாழும்
நறையூர் நின்ற நம்பியே.

—பெரிய திருமொழி 6. 7. 5

### அகால மரணம் நேராமல் இருக்க

"அருவிசோர் வேங்கடம் நீர்மலை' என்றுவாய்
வெருவினாள், மெய்யம் வினவி யிருக்கின்றாள்,

'பெருகுசீர்க் கண்ண புரம்' என்று பேசினுள்
உருகினுள், உள்மெலிந் தாள்இது வென்கொலோ!

—பெரிய திருமொழி 8. 2. 3.

**குறிப்பு:—** இத்துடன் நம்மாழ்வார் திருவாய்மொழி ஒன்பதாம பத்து—பத்தாம் திருவாய்மொழி ஐந்தாவது பாசுரத்தையும் அநுஸந்திக்கலாம்.

## வறுமை நிலே நீங்க

அரவுநீள் கொடியோன் அவையுளா சனத்தை
அஞ்சிடா தேயிட, அதற்குப்
பெரியமா மேனி யண்டமூ டுருவப்
பெருந்திசை யடங்கிட நிமிர்ந்தோன்,
வரையின்மா மணியும் மரதகத் திரளும்
வயிரமும் வெதிருதிர் முத்தும்,
திரைகொணர்ந் துந்தி வயல்தொறும் குவிக்கும்
திருக்கண்ணங் குடியுள்நின் றுனே.

—பெரிய திருமொழி 2. 1. 8

## மன நிம்மதி ஏற்பட

ஆடி யசைந்தாய் மடவா ரொடுநீ போய்க்
கூடிக் குரவை பிணைகோ மளப்பிள்ளாய்,
தேடித் திருமா மகள்மண் மகள்நிற்ப,
ஏடி! இதுவென் னிதுவென் னிதுவென்னே!

—பெரிய திருமொழி 10. 8. 9

## தேசமெங்கிலும் ஸுபிட்சம் நிலவ

குன்ற மெடுத்து மழைத டுத்துஇளே யாரொடும்,
மன்றில் குரவை பிணைந்த மாலென்னை மால்செய்தான்,
முன்றில் தனிநின்ற பெண்ணை மேல்கிடந் தீர்கின்ற.
அன்றிலின் கூட்டைப் பிரிக்க கிற்பவ ரார்கொலோ!

—பெரிய திருமொழி 11. 2. 1



திருமணிக்கூடம் ஸ்ரீ மணிக்கூட நாயகன்

### தீய வினைப் பயன் நீங்க

ஒண்மிதியில் புனலுருவி ஒருகால் நிற்ப
ஒருகாலுங் காமருசீர் அவுணன் உள்ளத்து,
எண்மதியுங் கடந்தண்ட மீது போகி
இருவிசும்பி னூடுபோ யெழுந்து, மேலைத்
தண்மதியும் கதிரவனும் தவிர ஓடித்
தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு,
மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை
மலர்புரையும் திருவடியே வணங்கி னேனே.

—திருநெடுந்தாண்டகம் 5.

### தீராத வியாதிகள் தீர

வைப்பாம் மருந்தாம் அடியரை, வல்வினைத்
துப்பாம் புலனைந்தும் துஞ்சக் கொடானவன்,
எப்பால் யவர்க்கும் நலத்தா லுயர்ந்துயர்ந்து,
அப்பா லவனெங்க ளாயர் கொழுந்தே.

—திருவாய்மொழி 1. 7.

### மாணவ—மாணவிகள் கல்வியில் தேர்ச்சியும், தேர்வுகளில் வெற்றியும் பெற

மறப்பும் ஞானமும் நானொன் றுணர்ந்திலன்,
மறக்கு மென்றுசெந் தாமரைக கண்ணொடு,
மறப்பற என்னுள்ளே மன்னினான் றன்னை,
மறப்ப னோவினி யானென் மணியையே?

—திருவாய்மொழி 1. 10. 10.

### பேய்—பிசாசு, பில்லி—சூனியம் முதலியவைகளின் உபத்திரவங்கள் தொலைய

காக்கு மியல்வினன் கண்ண பெருமான்,
சேர்க்கை செய்துதன் னுந்தி யுள்ளே,
வாய்த்த திசைமுக னிநதிரன் வானவர்,
ஆக்கி னான்தெய் வவுல குகளே.

—திருவாய்மொழி 2. 2. 9.

### ஸம்ஸார பாச-பந்தங்கள் நீங்க

கூவிக்கூவிக் கொடுவினைத் தூற்றுள் நின்று,
பாவியேன் பலகாலம் வழிதிகைத் தலமர்கின்றேன்,
மேவியன் றாநிரை காத்தவ னுலகமெல்லாம்,
தாவிய அம்மானை எங்கினித் தலைப்பெய்வனே?

—திருவாய்மொழி 3. 2. 9.



திருமாலிருஞ்சோலை ஸ்ரீ கள்ளழகர்

பெரும் புகழ் பெற

அண்ணல் மாயன் அணிகொள்செந் தாமரைக்
கண்ணன், செங்கனி வாய்க்கரு மாணிக்கம்,
தெண்ணி றைச்சுனை நீர்த்திரு வேங்கடத்து,
எண்ணில் தொல்புகழ் வானவ ரீசனே.

—திருவாய்மொழி 3. 3. 3.

### பாகவத கைங்கர்யம் கூடவும் பாகவதாபசாரம் நீங்கவும்

'உற்றார்க ளெனக்கில்லை யாரும்' என்னும்,
'உற்றார்க ளெனக்கிங்கெல் லாரும்' என்னும்,
'உற்றார்களைச் செய்வேனும் யானே' என்னும்,
உற்றார்களை அழிப்பேனும் யானே' என்னும்,
'உற்றார்களுக் குற்றேனும் யானே' என்னும்
உற்றாரிலி மாயன்வந் தேறக் கொல்லோ?
உற்றீர்கட் கென்சொல்லிச் சொல்லுகேன் யான்
உற்றென் னுடைப்பே தையுரைக் கின்றவே?

—திருவாய்மொழி 5. 6. 8

குறிப்பு:—இத்துடன் தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிச்செய்த திருப்பள்ளியெழுச்சி ப்ரபந்தத்தையும் அநுஸந்திப்பது உத்தமம்.

### தேஜஸ்வியாகத் திகழ

அரியே றே!என் அம்பொற் சுடரே!
செங்கட் கருமுகிலே,
எரியே! பவளக் குன்றே! நாற்றோள்
எந்தாய்! உனதருளே,
பிரியா அடிமை யென்னைக் கொண்டாய்
குடந்தைத் திருமாலே,
தரியே னினியுன் சரணந் தந்தென்
சன்மம் களையாயே.

—திருவாய்மொழி 5. 8. 7.

### எடுத்த காரியம் ஏற்றமாக வெற்றி பெற

அதுநன் றிதுதீதென் றையப் படாதே,
மதுநின்ற தண்டுழாய் மார்வன்,—பொதுநின்ற
பொன்னங் கழலே தொழுமின், முழுவினைகள்
முன்னங் கழலும் முடிந்து.

—இயற்பா, மூன்றாந்திருவந்தாதி 88

### சிந்தை தெளிவு பெற—சித்தப் பிரமை நீங்க

*வார்த்தை யறிபவர் மாயவற் காளன்றி யாவரோ,*
*போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொடு இறப்பிவை*
*பேர்த்து, பெருந்துன்பம் வேரற நீக்கித்தன் தாளின்கீழ்ச்*
*சேர்த்து, அவன் செய்யும் சேமத்தை யெண்ணித்*
*தெளிவுற்றே?*

—திருவாய்மொழி 7. 5. 10.

### தர்ம கார்யங்கள் இடர்களின்றி நிறைவேற

*அங்கண் மலர்த்தண் டுழாய்முடி அச்சுத னே! அருளாய்,*
*திங்களும் ஞாயிறு மாய்ச்செழும் பல்சுட ராய்இருளாய்,*
*பொங்கு பொழிமழை யாய்ப்புக ழாய்ப்பழி யாய்ப்பின்னும்நீ*
*வெங்கண்வெங் கூற்றமு மாமிவை யென்ன விசித்திரமே!*

திருவாய்மொழி 7. 8. 2.

குறிப்பு:—இத்துடன் பொய்கையாழ்வார் அருளிச் செய்துள்ள இயற்பா, முதல் திருவந்தாதி முதல் பாசுரத்தையும் சேர்த்து அநுஸந்திப்பது உத்தமம்.

### இன்பமயமான வாழ்வைப் பெற

*மாயக் கூத்தா! வாமனா!*
*வினையேன் கண்ணா! கண்கைகால்,*
*தூய செய்ய மலர்களாச்*
*சோதிச் செவ்வாய் முகிழதா,*
*சாயல் சாமத் திருமேனி*
*தண்பா சடையா, தாமரைநீள்*
*வாசத் தடம்போல் வருவானே!*
*ஒருநாள் காண வாராயே.*

—திருவாய்மொழி 8. 5. 1.

*வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனை,*
*திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி*
*அங்கப் பறைகொண்ட வாற்றை, அணிபுதுவைப்*
*பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதைசொன்ன*



கண்ணபிரானைச் சுற்றியிருந்து கோபியர் கும்மி யடித்து ஆடிப் பாடி மகிழ்தல்

சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே,
இங்கிப் பரிசுரைப்பா ரீரிரண்டு மால்வரைத்தோள்,
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்,
எங்கும் திருவருள்பெற் றின்புறுவ ரெம்பாவாய்.

—ஆண்டாள் திருப்பாவை 30

## குடும்பத்தில் ஒற்றுமை நிலவ

தனிமாப் புகழே யெஞ்ஞான்றும்
நிற்கும் படியாத் தான்தோன்றி,
முனிமாப் பிரம முதல்வித்தாய்
உலகம் மூன்றும் முளைப்பித்த.

தனிமாத் தெய்வத் தளிரடிக்கீழ்ப்
புகுதல் அன்றி அவனடியார்,
நனிமாக் கலவி யின்பமே
நாளும் வாய்க்க நங்கட்கே.

—திருவாய்மொழி 8. 10. 7

**ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்.**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஆபத்து வேளையில் தாமதமின்றி பகவத் ஸஹாயம் பெறுதல்

பகவானுடைய தசாவதாரங்களில் ந்ருஸிம்ஹாவதாரத்திற்குத் தனிச் சிறப்பு உண்டு. பரமகாருணிகனான ஸர்வேச்வரன் அவதரிக்கும்போதே, பக்தனுக்குத் தீங்கு விளைவிக்கத் தொடங்கிய கொடியவனை ஸம்ஹரித்தது இந்த ஒரு அவதாரத்திலேதான், ஆகையால், பக்தர்களின் இன்னல்—இடையூறுகளைக் களைந்தெறிந்து காக்க வேண்டிய நிலையில் தனக்குள்ள பாரிப்பையும் பரபரப்பையும் உலகுக்கு நன்கு வெளிப்படுத்திய அவதாரம் நரசிங்காவதாரம். எனவே ஆபத்தும் அவசரத் தேவையுமான வேளைகளில், 'இரணியனை நண்ணி, அவன் மார்வகலத் துகிர்மடுத்த நாதனை'த் துதித்தால் தாமதமின்றி எம்பெருமானுடைய ஸஹாயம் நமக்குக் கிடைப்பது திண்ணம்.

ஆகையால், ஆபத்துக்காலங்களிலும், சங்கடமான சந்தர்ப்பங்களிலும் தாமதமின்றி எம்பெருமானின் ஸஹாயத்தைப் பெற, ஸ்ரீந்ருஸிம்ஹன் விஷயமாக ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்யமான பாசுரங்களை (சிலவற்றையவாது) பல ஆவிருத்திகள் உள்ளமுருக வாய்விட்டு அநுஸந்தித்தால் நிச்சயம் ஆபத்பாந்தவனான சர்வேச்வரன் பரிவு கொண்டு உடனடியாக அபயமளிப்பான். ஆபத்துகளும் விலகும்.

## ஸ்ரீந்ருஸிம்ஹன் விஷயமாக ஆழ்வார்கள் அருளிச் செய்த பாசுரங்கள்

### பெரியாழ்வார்

எந்தை தந்தை தந்தைதம் மூத்தப்பன்
  ஏழ்படி கால்தொடங்கி,
வந்து வழிவழி ஆட்செய்கின் றோம்,திரு
  வோணத் திருவிழவில்
அந்தியம் போதி லரியுரு வாகி
  அரியை யழித்தவனை,
பந்தனை தீரப்பல் லாண்டுபல் லாயிரத்
  தாண்டென்று பாடுதுமே.

—திருப்பல்லாண்டு 6

அளந்திட்ட தூணை யவன்தட்ட, ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்க வுருவாய்,
உளந்தொட் டிரணிய னொண்மார் வகலம்,
பிளந்திட்ட கைகளால் சப்பாணி
  பேய்முலை யுண்டானே! சப்பாணி,

—பெரியாழ்வார் திருமொழி 1. 6. 9.

பூதமைந்தொடு வேள்வியைந்து
  புலன்களைந்து பொறிகளால்,
ஏதமொன்றுமி லாதவண்மையி
  னார்கள்வாழ்திருக் கோட்டியூர்,
நாதனைநர சிங்கனை நவின்
  றேத்துவார்க ளுழக்கிய,
பாததூளி படுதலாலிவ்
  வுலகம் பாக்கியம் செய்ததே.

—பெரியாழ்வார் திருமொழி 4. 4. 6.

தேவுடைய மீனமா யாமையாய்
  ஏனமா யரியாய்க் குறளாய்,
மூவுருவி லிராமனாய்க் கண்ணனாய்க்
  கற்கியாய் முடிப்பான் கோயில்,



*மேல் அஹோபிலம் குகையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ந்ருஸிம்ஹ மூர்த்திகள், சக்ரத்தாழ்வார் முதலானோர்*

சேவலொடு பெடையன்னம் செங்கமல
மலரேறி யூச லாடி,
பூவணைமேல் துதைந்தெழுசெம் பொடியாடி
விளையாடும் புனல ரங்கமே.

—பெரியாழ்வார் திருமொழி 4. 9. 9.

நம்ப னே! நவின் றேத்தவல் லார்கள்
நாத னேநர சிங்கம தானாய்,
உம்பர் கோனுல கேழு மளந்தாய்!
ஊழி யாயினாய்! ஆழிமுன் னேந்தி,
கம்ப மாகரி கோள்விடுத் தானே!
கார ணா! கட லைக்கடைந் தானே,
எம்பி ரான்! என்னை யாளுடைத் தேனே!
ஏழை யேனிட ரைக்களை யாயே.

—பெரியாழ்வார் திருமொழி 5. 1. 9.

## ஆண்டாள்

வான்கொண்டு கிளர்தெழுந்த
மாமுகில்காள், வேங்கடத்துத்
தேன்கொண்ட மலர்சிதறத்
திரண்டேறிப் பொழிவீர்காள்,
ஊன் கொண்ட வள்ளுகிரால்
இரணியனை யுடலிடந்தான்,
தான் கொண்ட சரிவளைகள்
தருமாகில் சாற்றுமினே.

— நாச்சியார் திருமொழி 8. 5.

## திருமழிசைப்பிரான்

கரண்டமாடு பொய்கையுள்க ரும்பனைப்பெ ரும்பழம்,
புரண்டுவீழ வாளைபாய்கு றுங்குடிநெ டுந்தகாய்,
திரண்டதோளி ரணியன்சி னங்கொளாக மொன்றையும்,
இரண்டுகூறு செய்துகந்த சிங்கமென்ப துன்னையே.

— திருச்சந்த விருத்தம் 62.

## திருமங்கையாழ்வார்

அங்கண் ஞால மஞ்ச அங்கோ ராளரியாய், அவுணன்
பொங்க ஆகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம்,
பைங்க ணானைக் கொம்புகொண்டு பத்திமையால், அடிக்கீழ்ச்
செங்க ணாளி யிட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றமே

—பெரிய திருமொழி 1. 7. 1.

பள்ளியி லோதி வந்ததன் சிறுவன்
வாயிலோ ராயிர நாமம்,
ஒள்ளிய வாகிப் போதவாங் கதனுக்
கொன்றுமோர் பொறுப்பில னாகி,
பிள்ளையைச் சீறி வெகுண்டுதூண் புடைப்பப்
பிறையெயிற் றனல்விழிப் பேழ்வாய்,
தெள்ளிய சிங்க மாகிய தேவைத்
திருவல்லிக் கேணிக்கண் டேனே.

— பெரிய திருமொழி 2. 3. 8.



திருநீர்மலையில் ஸேவை ஸாதிக்கும் ஸ்ரீ ந்ருஸிம்ஹர்

காண்டாவன மென்பதோர் காடமரர்க்
கரையனது கண்டவன் நிற்க, முனே
மூண்டாரழ லுண்ணமு னிந்ததுவும்
அதுவன்றியும் முன்னுல கம்பொறைதீர்த்
தாண்டன், அவு ணனவன் மார்வகலம்
உகிரால்வகி ராகமு னிந்து, அரியாய்
நீண்டான்குற ளாகிநி மிர்ந்தவனுக்
கிடம்மாமலை யாவது நீர்மலையே.

—பெரிய திருமொழி 2. 4. 2

திண்ணியதோ ரரியுருவாய்த் திசையனைத்தும் நடுங்கத்
தேவரொடு தானவர்கள் திசைப்ப, இர ணியனை
நண்ணியவன் மார்வகலத் துகிர்மடுத்த நாதன்
நாடோறும் மகிழ்ந்தினிது மருவியுறை கோயில்,
எண்ணில்மிகு பெருஞ்செல்வத் தெழில்விளக்கு மறையும்
ஏழிசையும்கேள்விகளு மியன்றபெருங் குணத்தோர்,
மண்ணில்மிகு மறையவர்கள் மலிவெய்து நாங்கூர்
வைகுந்த விண்ணகரம் வணங்குமட நெஞ்சே!

—பெரிய திருமொழி 3. 9. 2.

ஓடாத வாளரியி னுருவமது கொண்டுஅன்
றுலப்பில்மிகு பெருவரத்த இரணியனைப் பற்றி
வாடாத வள்ளுகிரால் பிளந்தவன்றன் மகனுக்
கருள்செய்தான் வாழுமிடம் மல்லிகைசெங் கழுநீர்,
சேடேறு மலர்ச்செருந்தி செழுங்கமுகம் பாளை
செண்பகங்கள் மணநாறும் வண்பொழிலி னூடே,
ஆடேறு வயலாலைப் புகைகமழு நாங்கூர்
அரிமேய விண்ணகரம் வணங்குமட நெஞ்சே!

—பெரிய திருமொழி 3. 10. 4.

### பொய்கையாழ்வார்

புரியொருகை பற்றியோர் பொன்னாழி யேந்தி,
அரியுருவும் ஆளுருவு மாகி,—எரியுருவ



ஸ்ரீரங்கம் ஸ்ரீமேட்டு அழகிய சிங்கர்

வண்ணத்தான் மார்பிடந்த மாலடியை அல்லால்,மற்
றெண்ணத்தா னாமோ இமை?

—இயற்பா, முதல் திருவந்தாதி 31

## பூதத்தாழ்வார்

வரம்கருதித் தன்னை வணங்காத வன்மை,
உரம்கருதி மூர்க்கத் தவனை,—நரம்கலந்த
சிங்கமாய்க் கீண்ட திருவன் அடியிணையே,
அங்கண்மா ஞாலத் தமுது.

—இயற்பா, இரண்டாந் திருவந்தாதி 83

### பேயாழ்வார்

அங்கற் கிடரின்றி அந்திப் பொழுதத்து,
மங்க இரணியன் தாகத்தை—பொங்கி
அரியுருவ மாய்ப்பிளந்த அம்மா னவனே
கரியுருவம் கொம்பொசித்தான் காய்ந்து.

—இயற்பா, மூன்றாந் திருவந்தாதி 65

### நம்மாழ்வார்

ஆடியாடி யகம்க ரைந்து, இசை
பாடிப்பாடிக் கண்ணீர்மல் கி,எங்கும்
நாடிநாடி நரசிங்கா வென்று
வாடி வாடுமிவ் வாணுதலே.

—திருவாய்மொழி 2. 4. 1.

உன்னைச் சிந்தை செய்து செய்துன் நெடுமா மொழியிசை
பாடியாடி, என்
முன்னைத் தீவினைகள் முழுவே ரரிந்தனன்யான்,
உன்னைச் சிந்தையினு லிகழ்ந்த இரணியன் அகல்மார்
வங் கீண்ட,என்
முன்னைக் கோளரியே! முடியாத தென்னெனக்கே?

—திருவாய்மொழி 2. 6. 6.

'எங்கும் உளன் கண்ணன்' என்றமக னைக்காய்ந்து,
'இங்கில்லை யால்'என் றிரணியன் தூண்புடைப்ப,
அங்கப் பொழுதே அவன்வீயத் தோன்றிய, என்
சிங்கப் பிரான்பெருமை யாராயும் சீர்மைத்தே?

— திருவாய்மொழி 2. 8. 9.

கிளரொளியால் குறைவில்லா அரியுருவாய்க் கிளர்ந்—
தெழுந்து,
கிளரொளிய இரணியன் தகல்மார்பம் கிழித்துகந்த,
வளரொளிய கனலாழி வலம்புரியன் மணிநீல,
வளரொளியான் கவராத வரிவளையால் குறைவிலமே.

—திருவாய்மொழி 4. 8. 7.



கீழ் அஹோபிலம் ஸ்ரீப்ரஹ்லாத வரதன்

ஆகம் சேர்நர சிங்கம தாகி, ஓர்
ஆகம் வள்ளுகி ரால்பிளந் தானுறை,
மாக வைகுந்தம் காண்பதற்கு, என்மனம்
ஏக மெண்ணும் இராப்பக லின்றியே.

—திருவாய்மொழி 9. 3. 7

திருவரங்கத்தமுதனார்

வளர்த்தவெங் கோபம டங்கலொன் றாய், அன்று வாளவுணன்
கிளர்ந்தபொன் னாகம் கிழித்தவன், கீர்த்திப் பயிரெழுந்து
விளைந்திடும் சிந்தை இராமா னுசனென்றன் மெய்வினை நோய்
களைந்துநன் ஞானம் அளித்தனன், கையிற் கனியென்னவே.

—'ப்ரபந்த காயத்ரி' என்னும்—இராமாநுச நூற்றந்தாதி 103

ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பரப்ரம்ஹணே நம:

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பரத்தில் பெருமை பெற
# *பகவான் திருவடி விஷயமான*
# திவ்யப் பிரபந்த பாசுரங்கள்

பரத்தில் சுகம் என்பது சேதநன் எனப்படும் ஜீவாத்மா சுத்தஸத்துவமான ஸ்ரீவைகுண்டத்தில் திருமாமணி மண்டபத்தில் சேஷதல்பத்தில் சயனித்துள்ள ச்ரியப்பதியான பகவானின் பக்கலே நிரந்தரமாக அடைவது—அதாவது, மோக்ஷமடைதல் என்பதாகும். இந்த மோக்ஷ பதவியை எளிதில் அளிக்கவல்லது ப்ரபத்தி என்னும் சரணாகதி. சரணாகதி என்னும் உபாயத்துக்கு ஆதாரமாக உள்ளவை பகவானின் திருவடிகள். பகவானின் திருவடிகள் விஷயமாக ஆழ்வார்கள் அருளிச் செய்துள்ள பாசுரங்கள் பலப்பல. அவற்றில் சிலவற்றையாவது, உருக்கத்துடன் தினமும் அநுஸந்தித்து வந்தால், இந்த ஆயுட்காலம் முடிந்தவுடன் மறுபிறப்பற்ற மோக்ஷானந்தம் கிட்டுவது எளிதாகும். இந்த நோக்கத்துடன் பகவானின் திருவடிகளின் பெருமையைப் போற்றும் சில திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் இங்கு அநுஸந்திக்கத் தக்கவாறு தரப்பட்டுள்ளன. இதைக் கண்ணுறும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இப்பகுதியைத் தினமும் அநுஸந்தானம் செய்து எம்பெருமானுடைய பேரருளைப் பெறவேண்டும்.

## பெரியாழ்வார்

சீதக் கடலுள் ளமுதன்ன தேவகி,
கோதைக் குழலா ளசோதைக்குப் போத்தந்த,
பேதைக் குழவி பிடித்துச் சுவைத்துண்ணும்,
பாதக் கமலங்கள் காணீரே,
பவளவா யீர்வந்து காணீரே

—பெரியாழ்வார் திருமொழி 1. 2. 1.



ஸ்ரீ வைகுண்ட நாதன்
(கல்கத்தாவில் மங்கினீராம் ஸேட் குடும்பத்தினர்களால் அமைக்கப்பட்டுள்ள திருக்கோயிலில் ஸேவை ஸாதிப்பவர்)

மரவடியைத் தம்பிக்கு வான்பணையம்
வைத்துப்போய் வானோர் வாழ,
செருவுடைய திசைக்கருமம் திருத்திவந்
துலகாண்ட திருமால் கோயில்,
திருவடிதன் திருவுருவும் திருமங்கை
மலர்க்கண்ணும் காட்டி நின்று,
உருவுடைய மலர் நீலம் காற்றாட்ட
ஓசலிக்கு மொளிய ரங்கமே.

—பெரியாழ்வார் திருமொழி 4. 9. 1.

### ஆண்டாள்

அன்றிவ் வுலக மளந்தா யடிபோற்றி,
சென்றங்குத் தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி,
பொன்றச் சகட முதைத்தாய் புகழ்போற்றி,
கன்று குணிலா வெறிந்தாய் கழல்போற்றி,
குன்று குடையா வெடுத்தாய் குணம்போற்றி,
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி,
என்றென்றுன் சேவகமே யேத்திப் பறை கொள்வான்,
இன்றுயாம் வந்தோ மிரங்கேலோ ரெம்பாவாய்.

—திருப்பாவை 24

### குலசேகரப் பெருமாள்

எம்மாண்பின் அயன்நான்கு நாவி னாலும்
எடுத்தேத்தி ஈரிரண்டு முகமுங் கொண்டு,
எம்மாடு மெழிற்கண்க ளெட்டி னோடும்
தொழுதேத்தி யினிதிறைஞ்ச நின்ற, செம்பொன்
அம்மான்றன் மலர்க்கமலக் கொப்பூழ் தோன்ற
அணியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்,
அம்மான்ற னடியிணைக்கீ ழலர்க ளிட்டங்
கடியவரோ டென்றுகொலோ அணுகும் நாளே!

—பெருமாள் திருமொழி 3

### திருமழிசைப்பிரான்

சண்டமண்ட லத்தினூடு சென்றுவீடு பெற்றுமேல்
கண்டுவீடி லாதகாத லின்பம்நாளு மெய்துவீர்,
புண்டரீக பாதபுண்ய கீர்த்திநுஞ்செ விமடுத்து,
உண்டு, நும்மு றுவினைத்து யருள்நீங்கி யுய்ம்மினோ.

—திருச்சந்த விருத்தம் 67

### தொண்டரடிப் பொடியாழ்வார்

ஊரிலேன் காணி யில்லை
உறவுமற் றொருவ ரில்லை,
பாரில்நின் பாத மூலம்
பற்றிலேன் பரம மூர்த்தி,

காரொளி வண்ண னே!ஓ
கண்ணனே! கதறு கின்றேன்,
ஆருளர் களைக ணம்மா!
அரங்கமா நகரு ளானே!

—திருமாலை 29



திருவண் புருஷோத்தமம் (திருநாங்கூர்) ஸ்ரீ புருஷோத்தமன்

## திருப்பாணாழ்வார்

அமல னாதிபிரா னடியார்க் கென்னை யாட்படுத்த
விமலன், விண்ணவர் கோன்விரை யார்பொழில்
வேங்கடவன்,

நிமலன் நின்மலன் நீதி வானவன்
நீள்மதி ளரங்கத் தம்மான், திருக்
கமல பாதம்வந் தென்கண் ணினுள்ளன வொக்கின்றதே.

அமலனாதிபிரான் 1

## திருமங்கையாழ்வார்

ஒருகுறளா யிருநிலம்மூ வடிமண் வேண்டி
உலகனைத்து மீரடியா லொடுக்கி, ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர், தக்க கீர்த்தி
அருமறையின் திரள்நான்கும் வேள்வி யைந்தும்
அங்கங்கள் அவையாறு மிசைக ளேழும்,
தெருவில்மலி விழாவளமும் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மி னீரே.

பெரிய திருமொழி ३.4.1.

## பூதத்தாழ்வார்

அடிமூன்றி லிவ்வுலகம் அன்றளந்தாய் போலும்
அடிமூன் றிரந்தவனி கொண்டாய்,—படிநின்ற
நீரோத மேனி நெடுமாலே, நின்னடியை
ஆரோத வல்லார் அறிந்து?

இயற்பா, இரண்டாந் திருவந்தாதி 5

## நம்மாழ்வார்

உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்,
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன்,
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்,
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே!

திருவாய்மொழி 1.1.1.

கண்ணன் கழலிணை,—நண்ணும் மனமுடையீர்,
எண்ணும் திருநாமம்,—திண்ணம் நாரணமே.

திருவாய்மொழி 10 5.1.



திருவஹீந்திரபுரம் ஸ்ரீதேவநாதன் ஸந்நிதியில்
எழுந்தருளியுள்ள ஸ்ரீ கோதண்டராமன்

உற்றே னுகந்து பணிசெய் துனபாதம்
பெற்றேன், ஈதேயின் னம்வேண் டுவதெந்தாய்,
கற்றார் மறைவாணர் கள்வாழ் திருப்பேராற்கு,
அற்றார் அடியார் தமக்கல்லல் நில்லாவே.

—திருவாய்மொழி 10.8.10

பிடித்தேன் பிறவி கெடுத்தேன் பிணிசாரேன்,
மடித்தேன் மனைவாழ்க்கை யுள்நிற்பதோர் மாயையை,
கொடிக்கோ புரமாடங்கள் சூழ்திருப் பேரான்,
அடிச்சேர்வ தெனக்கெளி தாயின வாறே.

—திருவாய்மொழி 10.8.3

**ஆழ்வார்கள் திருவடிகளே சரணம்.**

ஸ்ரீ:

ஸ்ரீமதே ஶடகோபாய நம:

# திருவாய்மொழியில்

# திருவடியைக் காட்டும் தனிப் பதிகம்

*நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க,
எண்ணாராத் துயர்விளைக்கும் இவையென்ன உலகியற்கை?,
கண்ணாளா! கடல்கடைந்தாய்! உனகழற்கே வரும்பரிசு,
தண்ணாவா தடியேனைப் பணிகண்டாய் சாமாறே. 1

சாமாறும் கெடுமாறும் தமருற்றார் தலைத்தலைப்பெய்து,
ஏமாறிக் கிடந்தலற்றும் இவையென்ன உலகியற்கை?
ஆமாறொன் றறியேன்நான் அரவணையாய்! அம்மானே,
கூமாறே விரைகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே. 2

கொண்டாட்டும் குலம்புனைவும் தமருற்றார் விழுநிதியும்,
வண்டார்பூங் குழலாளும் மனையொழிய வுயிர்மாய்தல்,
கண்டாற்றேன் உலகியற்கை கடல்வண்ணா! அடியேனைப்,
பண்டேபோல் கருதாதுன் அடிக்கேகூய்ப் பணிகொள்ளே. 3

கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாக,
கொள்ளென்று தமம்மூடும் இவையென்ன உலகியற்கை?'
வள்ளலே! மணிவண்ணா! உனகழற்கே வரும்பரிசு,
வள்ளல்செய் தடியேனை உனதருளால் வாங்காயே. 4

வாங்குநீர் மலருலகில் நிற்பனவும் திரிவனவும்,
ஆங்குயிர்கள் பிறப்பிறப்புப் பிணிமூப்பால் தகர்ப்புண்ணும்?
ஈங்கிதன்மேல் வெந்நரகம் இவையென்ன உலகியற்கை?
வாங்கெனைநீ மணிவண்ணா! அடியேனை மறுக்கேலே. 5

மறுக்கிவல் வலைப்படுத்திக் குமைத்திட்டுக் கொன்றுண்பர்,
அறப்பொருளை யறிந்தோரார் இவையென்ன உலகியற்கை?
வெறித்துளவ முடியானே! வினையேனை யுனக்கடிமை
அறக்கொண்டாய், இனியென்னாரமுதே! கூய் அருளாயே. 6

ஆயே!இவ் வுலகத்து நிற்பனவும் திரிவனவும்,
நீயேமற் றொருபொருளும் இன்றிநீ நின்றமையால்,
நோயேமூப் பிறப்பிறப்புப் பிணியேயென் றிவையொழியக்,
கூயேகொள் அடியேனைக் கொடுவுலகம் காட்டேலே. 7

காட்டிநீ கரந்துமிழும் நிலநீர்தீ விசும்புகால்,
ஈட்டிநீ வைத்தமைத்த இமையோர்வாழ் தனிமுட்டைக்,
கோட்டையினில் கழித்தெனையுன் கொழுஞ்சோதியுயரத்து,
கூட்டரிய திருவடிக்க ளெஞ்ஞான்று கூட்டுதியே? 8

கூட்டுதிநின் குரைகழல்கள்இமையோரும்தொழாவகைசெய்து
ஆட்டுதிநீ யரவணையாய்! அடியேனும் அஃதறிவன்,
வேட்கையெல்லாம் விடுத்தெனையுன் திருவடியே சுமந்துழல,
கூட்டரிய திருவடிக்கள் கூட்டினைநான் கண்டேனே. 9

கண்டுகேட் டுற்றுமோந் துண்டுழலும் ஐங்கருவி
கண்டவின்பம், தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்,
ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்,
கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேனுன் திருவடியே.
10

*திருவடியை நாரணனைக் கேசவனைப் பரஞ்சுடரை,
திருவடிசேர் வதுகருதிச் செழுங்குருகூர்ச் சடகோபன்,
திருவடிமே லுரைத்ததமிழ் ஆயிரத்து ளிப்பத்தும்,
திருவடியே அடைவிக்கும் திருவடிசேர்ந் தொன்றுமினே. 11

திருவாய்மொழி 4. 9.

நம்மாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

அனுபந்தம் 8

# வழித்துணைப் பெருமாள்

''தாள தாமரைத் தடமணி வயற்றிரு மோகூர்,
நாளும் மேவிநன் கமர்ந்துநின் றசுரரைத் தகர்க்கும்,
தோளும் நான்குடைச் சுரிகுழல் கமலக்கண் கனிவாய்,
காள மேகத்தை யன்றிமற் றொன்றிலம் கதியே.''

திருவாய்மொழி 10. 1. 1.

என்று வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபனால் மங்களாசாஸநம் செய்யப்பெற்ற திருமோகூர் என்னும் திவ்ய க்ஷேத்திரம், 108 வைஷ்ணவ க்ஷேத்திரங்களில் சிறப்பானதும், பாண்டிய நாட்டுத் திருப்பதிகள் 18-ல் முக்கிய மானதுமாகும். பூலோக வைகுண்டம் என்று சொல்லப் படும் ஸ்ரீரங்கம் உள்ளிட்ட இப்பூமண்டலத்தில் உள்ள வைஷ்ணவர்கள் யாவரும் இப்பூலோக வாழ்வினை முடித்து, பரம பதம் ஏகும்போது வழித்துணைப் பெருமாளாய் உடன் வருவது இத் திவ்ய தேச எம்பெருமான்தான் என்பது வைஷ்ண வர்கள் சித்தாந்தம். பெரிய ஜீயர் என்று சொல்லப் படும் ஸ்ரீமணவாள மாமுனிகளும் ''தாளடைந்தோர் தங் கட்கு தானே வழித்துணையாம், காளமேகத்தைக் கதியாக்கி,'' என்று தனது திருவாய்மொழி நூற்றந்தாதியில் (91) அருளிச் செய்துள்ளார்.

வைஷ்ணவ க்ஷேத்திரங்கள் எல்லாவற்றிலும் வைகுண்ட ஏகாதசி அன்று துவங்கி 10 நாட்கள் சிறப்பாக நடக்கும் திரு வத்யயன உத்ஸவம் பத்தாம் திருநாளில் இவ்வூர் எம்பெரு மானின்மீது நம்மாழ்வார் பாடியுள்ள பதினொரு பாசுரங் களைப் பாடித்தான் நம்மாழ்வார் பரமபதத்திற்கு எழுந் தருளும் சாற்றுமுறை உத்ஸவத்தை நடத்தி வைப்பார்கள் இத்திருப்பதியை நம்மாழ்வார் மட்டுமின்றித் திருமங்கை யாழ் வாரும் தனது சிறிய திருமடலில் இவ்வூரையும் வஞ்சகக்



திருச்சிராப்பள்ளி-தூத்துக்குடி ரயில் பாதையில் உள்ள மதுரை ஜங்ஷனிலிருந்து மேலூர் போகும் பஸ் மார்க்கத்தில் 6-வது மைலில் இருக்கும் ஒத்தைக் கடையிலிருந்து $1\frac{1}{4}$ மைல் தூரத்தில் உள்ள வழித்துணைப் பெருமாள் என்னும்

**ஸ்ரீ காளமேகப் பெருமாள்**

கள்வன் மாமாயனென கள்ளழகர் உறையும் அழகர் கோயில் என்னும் திருமாலிருஞ்சோலை மலையையும் சேர்த்தே ''சீராரும் மாலிருஞ் சோலைத் திருமோகூர்'' என்று சிறப்பித்து பாடியுள்ளார். இதுவன்றி ஸ்ரீரங்கத்திலே வாழ்ந்த 'திவ்விய கவி' ஸ்ரீபிள்ளைப்பெருமாள் அய்யங்கார்,

''வாயால் மலர் கோதி வாவிதொறும் மேயுமோ?
மேயாமல் அப்பால் விரையுமோ?—மாயன்
திருமோகூர் வாயின்று சேருமோ? நாளை
வருமோ? கூர்வாயன்னம், வாழ்ந்து.''

—அஷ்டப் பிரபந்தம் (நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி 46)

என்று இவ்வூர் எம்பெருமானுக்குப் பாமாலை சூட்டியுள்ளார்.

* * *

இவ்வளவு சீரும் சிறப்புமிக்க இச்சன்னிதி பொருளாதார வளமற்றிருப்பதால், இங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீக்ஷீராப்தி நாதனுக்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, ஸ்தல மக்களின் முயற்சியால் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் சிறப்பாய் நடைபெற்றது. அதைப் போலவே சென்ற ஆனி மாதம் 23-ந் தேதி 6-7-68 அன்று ஸ்தல வாசிகளின் முயற்சியாலும் மகனீயர்களின் பொருள் உதவியாலும் ஏக ஸஹஸ்ர கலசத் திருமஞ்சனம் லோக க்ஷேமார்த்தமாக நடைபெற்றது. 108 திருப்பதிகளில் பாஞ்சராத்திர ஆகமப்படி சமீப காலத்தில் நடைபெற்ற ஏக ஸஹஸ்ர கலசத் திருமஞ்சனம் இதுவே என்பர்.

[திருமோகூர் மதுரைக்கு 7-வது மைலில் உள்ளது. பஸ் வசதி உண்டு. காளமேகப் பெருமாள்; கிழக்கு நின்ற திருக்கோலம்; திருமோகூர் வல்லி; மேகவல்லி; கேதகி விமானம்; க்ஷீராப்தி புஷ்கரணி; அஜ-ருத்ர-இந்திராதிகளுக்குப் பிரத்தியக்ஷம்.]

'தினமணி சுடர்' 7-7-1968 இதழில் வெளிவந்த மேற்படி கட்டுரையை ஸ்ரீமான் கோ. சேஷாத்திரி புல்லரிக்கும் வகையில் புனைந்துள்ளார். தினமணி நிறுவனத்திற்கும், இந்த ஸ்வாமிக்கும் எங்கள் மனமார்ந்த நன்றிகள்.

—'' லிப்கோ '' பதிப்பகத்தார்.

நம்மாழ்வார்-திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

## அனுபந்தம் 9

### ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# உடையவரே உறுதுணை

ஸ்ரீவைஷ்ணவனாகப் பிறந்து, பிறரும் போற்றத்தக்க வகையில் பெருமையை நாம் பெற்றிருப்பதற்குக் காரணம், பெரும்பூதூர் வந்த வள்ளல் ஸர்வ ஜனங்களும் உய்ய கருணைக் கடலாகத் திகழ்ந்த சிறப்பினால்தான். ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸாதித்துள்ளபடி—

> " திருமாலடியிணையே திண்சரணகக் கொண்டு
> திருமாலடியிணையே சேர்வார்—ஒருமால்
> அருளால் அருளாத வானோர்கள் வாழ்ச்சி
> அருளால் நமக்களித்தாராய்ந்து."
>
> —அமிருதரஞ்சனி 37

வானோர்களின் வாழ்ச்சியை நமக்கு அளித்தமையால், நம் பரமாசார்யரான ஸ்ரீ ராமானுஜர் எம்பெருமானார் என்றே கொண்டாடப்படுகிறார். ஸகல ஆத்ம குணங்களும், ஞான வைராக்யாதி சீலங்களும் உடைய நம் உடையவரே நமக்கெல்லாம் உறுதுணையாகத் திகழ்வார். நாம் அநுதினமும் அவர்தம் பொன்னடியே போற்றி, அந்த ஆசார்ய ஸார்வ பௌமரை வந்தித்து வந்தால், நம்முடைய சங்கடங்கள் குறையும், அஞ்ஞான இருள் விலகும், தீய பழக்க வழக்கங்கள் தொலையும், இந்தத் தேசத்தைப் பீடித்துள்ள துர்ப்பாக்கிய நிலை குலையும். எம்பெருமானாரைப் பிரத்யக்ஷ தைவமாகவே போற்றி, பேரருள் பெற்ற மஹா பாக்யசாலி திருவரங்கத்த முதனார். அவர் திருவாய் மலர்ந்தருளிய இராமநுச நூற்றந்தாதி 'பிரபந்த காயத்திரி' என்றே போற்றப் பெறும் ஒப்பற்ற பேற்றினைப் பெற்றது. இந்தப் பிரபந்த காயத்திரியை ஒவ்வொரு வைஷ்ணவக் குடும்பமும்—ஆண்-பெண் அடங்கலாக—மனப்பாடம் செய்து, தினமும் அநுஸந்தித்து வர வேண்டும். அப்போதுதான் பொருளல்லாத நம்மைப் பொருளாக்கிய எம்பெருமானாரிடம் நாம் சிறிதளவாவது

நன்றியுணர்வு கொண்டிருக்கிறோம் என்பதைத் தெரிவித்துக் கொள்ள முடியும். உத்தியோகம், தொழில், அலைச்சல் என்று அவகாசம் போதாமல் அலையும் லௌகிகர்கள் தினமும் கீழ்க்கண்ட பாசுரங்களையாவது, அல்லது இவைபோல் வேறு சில பாசுரங்களையாவது, மனமுருகி அநுஸந்தித்து வருவார்களானால் நலன்களையே பெறுவார்கள்—இது ஸத்யம்!

பல்கலையோரும் பல்கி வாழ்வர்!

பூமன்னு மாது பொருந்திய மார்பன், புகழ்மலிந்த
பாமன்னு மாறன் அடிபணிந் துய்ந்தவன், பல்கலையோர்
தாம்மன்ன வந்த இராம னுசன்சர ணாரவிந்தம்
நாம்மன்னி வாழ,நெஞ் சே! சொல்லு வோமவன் நாமங்களே.

—'பிரபந்த காயத்திரி' 1

நம்மாழ்வார் பேரருள் பெறுவர்!

எய்தற் கரிய மறைகளை, ஆயிரம் இன்தமிழால்,
செய்தற் குலகில் வரும்சட கோபனைச், சிந்தையுள்ளே
பெய்தற் கிசையும் பெரியவர் சீரை உயிர்களெல்லாம்
உய்தற் குதவும், இராமா னுசனெம் உறுதுணையே.

—'பிரபந்த காயத்திரி' 18

எல்லா நலன்களும் வந்து சேரும்!

பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும், நல்ல
திருந்திய ஞானமும் செல்வமும் சேரும், செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வன்மையி னால்வந் தெடுத்தளித்த
அருந்தவன், எங்கள் இராமா னுசனை அடைபவர்க்கே.

—'பிரபந்த காயத்திரி' 32

பஞ்சாயுதங்களும் ஒருசேர அவதரித்த நம் உறுதுணை!

அடையார் கமலத் தலர்மகள் கேள்வன்,கை யாழியென்னும்
படையோடு நாந்தக மும்படர் தண்டும், ஒண் சார்ங்கவில்லும்
புடையார் புரிசங் கமுமிந்தப் பூதலம் காப்பதற் கென்று,
இடையே இராமா னுசமுனி யாயின இந்நிலத்தே.

—'பிரபந்த காயத்திரி' 33

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்!

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

அனுபந்தம் 10

# பிள்ளையந்தாதியும் அடைக்கலப்பத்தும்

ஸ்ரீநயினாராசார்யர் தம் திருத் தகப்பனாரும் ஆசார்யரு மான ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் விஷயமாக அருளிச் செய்துள்ள பிள்ளையந்தாதியையும், ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன் கரிகிரியில் கோயில் கொண்டுள்ள பேரருளாளன் விஷயமாக அருளிச் செய்துள்ள அடைக்கலப் பத்தையும் அனுஸந்திப்பதனால் ஏற்படக்கூடிய நன்மைகள் சொல்லி லடங்கா. சிக்கலான பிரச்னைக்குத் தீர்வு காணவும், வழக்கு களில் வெற்றி பெறவும், பணக் கஷ்டமும் மனக் கஷ்டமும் நீங்கவும், நம் பெரியோர்கள் இவ்விரண்டையும், அனுஸந் தித்துப் பலன் கண்டது அனுபவம் கூறும் உண்மை.

எனவே, ஆஸ்திகர்கள் தினந்தோறும் எழுந்து நீராட்டம் செய்து, திருமண் காப்பு அணிந்து, ஏனைய நித்யகர்மானுஷ் டானங்களையும் முடித்துக்கொண்டு, குடும்பத்திலுள்ள யாவரும், சேர்ந்து கோஷ்டியாக அனுஸந்தித்தல் நலம். இப்படிச் செய்வது ஸாத்யமில்லாவிட்டால் குடும்பத்தில் யாரேனும் ஒருவர் மட்டும் அனுஸந்தித்தாலும் போதும். அதுவும் ஸாத்தியமில்லாத பக்ஷத்தில் அவசியம் நேரும் போது உருக்கமாக அனுஸந்தித்தால் நிச்சயமாகப் பலன் கிடைக்கும். இதற்குச் சில நிமிடங்களே போதும்.

வித்தகன் வேதியன் வேதாந்த தேசிக னெங்கள் தூப்புல்
மெய்த்தவ னுத்தமன் வேங்கட நாதன் வியன் கலைகள்
மொய்த்திடு நாவின் முழக்கொடு வாதியர் மூலமறக்
கைத்தவ னென்றுரைத் தேன்கண்டி லேனென் கடுவினையே.

—பிள்ளையந்தாதி 6

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஸ்ரீ ஸர்வலோக ஶரண்யாய நம:

அனுபந்தம் 11

# ஆலய தர்மம்

திவ்ய தேசங்களும் திருத்தலங்களும் சர்வேச்வரன் குடிகொள்ளும் திருக்கோயில்களாலே புனிதமாகி, பக்தர்களைப் புனிதப்படுத்தி வருகின்றன. இவைகளின் மஹிமைகளை ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனாலும் வர்ணிக்க இயலாது.

இந்தக் கலிகாலத்தில் தாழ்ந்த எண்ணங்களும் ஆசைகளும் மலிந்திருக்கும் மனித வாழ்க்கையில், திருக்கோயில்கள் தான் தர்மம், பக்தி, பண்பு, நெறி ஆகியவைகளை ஓரளவாவது புகட்டி, நல்வழிப்படுத்தி மனிதர்களுக்கு மனச்சாந்தி, மனோதைர்யம், மனப்பக்குவம் ஆகியவைகளை வளர்த்து வர உதவ வேண்டும். 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று', 'கோயில் இல்லா ஊரில் குடியிராதே' போன்ற மூதுரைகள் நமக்கு 'ஆலய வழிபாடும் ஆலய தர்மமும்தான் நாம் மேன்மையடையச் சுலபமான சாதனங்கள்' எனும் பேருண்மையைப் பறை சாற்றுகின்றன. இதை மறவாமல், தவறாமல் கடைப்பிடித்து வந்தால், இன்று நம் சமுதாயத்தைப் பீடித்திருக்கும் பல பீடைகளும் ஒழிந்து போகும்; சுபிட்சம் வளரும்; சௌக்யம் பெருகும்; நன்மைகள் நிறையும்!

இதில் ஆலய நிர்வாகிகளுக்கும் தொண்டர்களுக்கும் பொது ஜனங்களுக்கும் மிகுந்த பொறுப்புகள் உள்ளன.

1. ஆலயங்களைத் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டும்.

2. கோயிலுக்கு வருகிற பக்தர்களிடம் அன்புடன் நடந்து கொள்ள வேண்டும். இதில் ஏழை-பணக்காரர் என்கிற பாகுபாடு காட்டக் கூடாது.

3. அர்ச்சகர்கள் ஒவ்வொரு பூஜை வேளையிலும் "எல்லா மக்களும் சுபிட்சமாக, சௌக்யமாக, நெறி தவறாமல் புகழத்தக்கவாறு வாழ்ந்து வர அநுக்ரஹிக்க வேண்டும்" என்று பிரார்த்திக்கொண்டு, பகவானுக்கு விசேஷ அர்ச்சனை செய்துவர வேண்டும்.

4. பக்தர்கள் கோயிலை அசுத்தம் செய்யக்கூடாது. அர்ச்சகப் பெரியோர்களிடமும், மற்ற ஆலய சிப்பந்திகளிடமும் பரிவும் மரியாதையும் ஆதரவும் காட்டி நடந்து கொள்ளவேண்டும். பக்தி சிந்தனையோடு ஸந்நிதியில் ஸேவிக்க வரவேண்டும். மனத்தூய்மையை வளர்க்கவே ஆலயம் அமைந்திருக்கிறது என்பதை உணர வேண்டும்.

இவ்வாறு எல்லோரும் ஆலய தர்மத்தைக் கடைப்பிடித்தால் நம் தேசத்தில் துன்பங்களும் தீமைகளும் குறைந்து, நன்மைகளும் வளமைகளும் பல்கிப் பெருகும்.

ஸர்வே ஜநா: ஸுகிநோ பவந்து!

ஸ்ரீ:

## அனுபந்தம் 12

ஸ்ரீ ஶடகோபாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:

# எங்கள் அபிலாஷை

''தேசமெலாமுகந்திடவே பெரும்பூதூரில்
சித்திரையிலாதிரைநாள் வந்துதோன்றிக்
காசினிமேல் வாதியரைவென்று அரங்கர்-
கதியாக வாழ்ந்தருளுமெதிராசா, முன்-
பூசுரர்கோன் திருவரங்கத்தமுதனார் உன்-
பொன்னடிமேலந்தாதியாகப் போற்றிப்
பேசிய நற்கலித்துறை நூற்றெட்டுப்பாட்டும்
பிழையறவே யெனக்கருள்செய் பேணி நீயே''

''பூமகள்கோன் தென்னரங்கர் பூங்கழற்குப் பாதுகமாய்த்
தாம்மகிழும் செல்வச் சடகோபர்—தேமலர்த்தாட்கு
உய்ந்தினிய பாதுகமாம் எந்தைஇராமாநுசனை
வாய்ந்தெனது நெஞ்சமே! வாழ்.''

நம்மாழ்வார் துதி—லிப்கோ ப்ரத்யேக ப்ரார்த்தனை

''உருவிற் சிறிய மலரேனும்
ஓங்கும் மணத்திற் பெரிதென்று
மருவித் துதிதோள் பொலிவித்த
வகுளா பரணச் சடகோபா!
குருவிற் பெரியோய்! நின்னடியைக்
குறுகிப் பணிந்தோம் 'சிறுமலர்'ப்பேர்
தருமிப் பதிப்பு நிலையத்தைத்
தாங்கிச் சிறக்க அருளுதியே!''

ஸ்ரீரங்கநாதர் திவ்யமணி பாதுகைகளாகத் திகழும் நம்மாழ்வாரின் அநுக்ரஹத்தைத் நாடி, நம்மாழ்வாரின் திருவடிகளுக்குப் பாதுகமாய் விளங்கிய நம் பரமாசார்யர் ஸ்ரீபகவத் ராமாநுஜரின் திருவடித் தொண்டாக, ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயத்திற்கு எவ்வித விகல்பமும் இல்லாமல் இயன்றவரைச் சிறிதளவாவது ஸ்வரூப ஞானமும் ஸ்வஸம்ப்ரதாய போதமும் ஏற்படவேண்டும், (குறிப்பாக இன்றைய நம்முடைய இளந்தலைமுறைக்கு) என்கிற ஒரே அபிலாஷையில், நாங்கள் லாபநோக்கை முக்கியமாகக் கருதாமல், கஷ்ட நஷ்டங்களைத் தாங்கியும், இந்த எளிய நற்பணிகளைச் செய்து வருகிறோம்.

ஸ்ரீவைஷ்ணவ குல திலகராக விளங்கும் எந்த மஹநீயரிடத்திலும் எங்களுடைய எத்தகைய சிறிய பணியின் மூலமாகவும் அபசாரப்பட நாங்கள் கனவிலும் கருதியதில்லை; கருதப்போவதுமில்லை. எவ்விதமான பேதபுத்தியும் இல்லாமல், ஸ்ரீவைஷ்ணவ சமுதாயம் ஒருமித்து, இணைந்து, வளர்ந்து, மேன்மை பெறவேண்டும் என்பதே எங்கள் குறிக்கோள். இதற்காகவே இத்தகைய ஸம்ப்ரதாய ஸத்விஷய புஸ்தகங்களைச் சிரமப்பட்டு லாப நோக்கமின்றியே வெளியிட்டு வருகிறோம்.

குணமே போற்றும் குணசீலர்கள் எங்களை அநுக்ரஹித்து ஊக்குவிக்கவேண்டுமென்று திருவடி தொழுது, பிரார்த்தித்துக்கொள்கிறோம்.

—''லிப்கோ'' பதிப்பகத்தார்.

ஸ்ரீ:

அனுபந்தம் 13

# எல்லா ஜனங்களுடனும் ஒற்றுமையாக வாழ்வோம்

ஸம் கச்சத்வம் ஸம் வதத்வம் ஸம் வோ மநாம்ஸி ஜாநதாம் |
தேவா பாகம் யதா பூர்வே ஸம்ஜாநாநா உபாஸதே
ஸமாநோ மந்த்ர: ஸமிதி: ஸமாநீ
ஸமாநம் மந: ஸஹ சித்தம் ஏஷாம் |
ஸமாநம் மந்த்ரம் அபிமந்த்ரயே வ:
ஸமாநேந வோ ஹவிஷா ஜுஹோமி ||
ஸமாநீ வ ஆகூதி: ஸமாநா ஹ்ருதயாநி வ: |
ஸமாநம் அஸ்து வோ மநோ யதா வ: ஸுஸஹாஸதி ||

—ரிக்வேதம்

ஒன்ருய்க் கூடிக் கலந்து பேசுவோம். ஏகோபித்த மனத்துடன் கூடி வாழ்வோம். அந்த அந்த தேவதைகளுக்கு ஏற்பட்ட பூஜாபாகத்தை அவரவர்கள் ஏகோபித்த மனத்துடன் ஏற்று அனுபவிப்பது போல், நம் நோக்கம் கூட்டம் சித்தம் சிந்தனைகள் யாவும் ஒன்றுபட்டவையாக இருக்கட்டும். எல்லோரும் பொதுக் காரியங்களில் ஒற்றுமையாக ஈடுபடுவோமாக.

ஐக்கிய மனோபாவத்துடன் எந்த விதமான வைஷம்யமுமின்றி நாம் நம் வழிபாடுகளில் ஈடுபடுவோமாஞல், நமது வாழ்க்கை ஆனந்தமயமாக அமையுமென்பது திண்ணம்.

அவரவர் தமதம தறிவறி வகைவகை,
அவரவ ரிறையவ ரெனவடி யடைவர்கள்,
அவரவ ரிறையவர் குறைவில ரிறையவர்,
அவரவர் விதிவழி யடையநின் றனரே.

—திருவாய்மொழி 1. 1. 5.

ஸர்வே ஜநா: ஸுகிநோ பவந்து!

ஸ்ரீ:

ஸ்ரீ ஸ்ரீலக்ஷ்மீ ஹயவதந லக்ஷ்மீ நாராயணாப்யாம் நம:

அனுபந்தம் 14

# கலிகாலக் கவர்ச்சிகள்:

கலிகாலத்தின் கொடுமைகளைக் கண்டு வருந்தியும், அவைகளுக்கு இரையாகியும், அவைகளால் பாதிக்கப்பட்டும் அல்லல்படும் தலைமுறையில் நாம் வாழ்ந்து வருகிறோம். குறிப்பாக, நம் இளந்தலைமுறையினர்தான் அதிகம் சீர் குலைந்து வருகிறார்கள். இதைவிட மோசமான கலியின் கொடுமை வேறு இருக்க முடியாது. திருமங்கையாழ்வார் அருளிச் செய்தவாறு,

'' சேமமே:வேண்டித் தீவினை பெருக்கித்
தெரிவைமார் உருவமே மருவி,
ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்
ஒழிந்தன கழிந்த அந்நாள்கள்;...''

—பெரிய திருமொழி 1. 1. 3.

—என்றே கழிவிரக்கம் கொள்ளும் நிலைமையில்தான் பெரும் பாலும் இன்றைய வயோதிகரும் வாலிபரும் இருக்கிறார்கள். இந்த அவல நிலையை அவ்வப்போது நினைவு படுத்தி, நம்மை நல்வழிப் படுத்தவே, ஆழ்வார்கள், ஆசார்யர்கள், தெய்வப் புலவர்கள் முதலானோர் தோன்றி, அருள் வாக்குகளை அருளிச் சென்றிருக்கிறார்கள்.

கலிகாலக் கொடுமைகளுக்கெல்லாம் காரணம், கலிகாலக் கவர்ச்சிகளான அடங்காத செல்வப்பசியும் தரங்கெட்ட மோகக் கவர்ச்சிகளும்தான். இக்காலத்தில் வளர்ந்துள்ள வாழ்க்கைத் துன்பங்களுக்கெல்லாம் இவையே ஊற்றுக் கால்கள். தெய்வப் புலவர் திருவள்ளுவர் உலகியல் செல் வங்கள் நிலையற்றவை என்பதைத் தெளிவாக்கியிருப்பதை அடிக்கடி யாவரும் நினைவு படுத்திக் கொள்ள வேண்டும்:—

கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று.

(பெரிய செல்வம் வந்து சேர்தல், கூத்தாடுமிடத்தில் கூட்டம் சேர்வதைப் போன்றது; அது நீங்கிப் போதலும் கூத்து முடிந்ததும் கூட்டம் கலைவதைப் போன்றது.)

—திருக்குறள்: 332 (அறம், 34 2)

இந்தப் போதனையை நினைவில் கொண்டு, கலிகாலக் கவர்ச்சிகளால் பாதிக்கப்படாமல் நாம் (குறிப்பாக நம் வாலிபர்கள்) வாழவேண்டும். நம் புராதனமான பண்பாட்டையும் தார்மிக நெறிமுறைகளையும், நமக்கு வழி வழியாக வந்துள்ள ஆத்ம சக்தியையும் புறக்கணிக்காமல், கைவிடாமல் இருந்தால் கலிகாலக் கவர்ச்சிகள் நம்மைச் சீர்குலைக்கவே முடியாது. இதற்கு ஆரம்பப் பாடம் பகவத் பக்தி, ஆசார அனுஷ்டானம்—இந்த இரண்டும். மற்றக் குணங்களும் சீலங்களும் தொடர்ந்து வந்து சேரும்.

சில கலிகாலக் கவர்ச்சிகள் :—

## 1. சினிமாக்கள்

இன்று எல்லாச் சமூகங்களுமே, குறிப்பாகப் பிராம்மண சமூகம் தன் பெருமை - மேன்மைகளை இழந்து, நெறி கெட்ட வாழ்வை மேற்கொண்டு திசை தெரியாமல் பரிதவிப்பதற்கெல்லாம் முதல் காரணம் இன்றைய சினிமாக்கள்தான். இயல், இசை, நாடகம் என்று பழங்காலத்தில் கலைகளை வளர்த்து, அவை மூலமாக மனித வாழ்க்கையைச் செம்மைப்படுத்தவும் வளமைப்படுத்தவுமே முயன்றிருக்கிறார்கள். இன்று அந்தச் சீரிய குறிக்கோள் போய்விட்டது. கீழான காம உணர்ச்சியை வளர்ப்பதும், நெறிகெட்டு வாழ்வதில் சுகம் இருப்பதாக ஏமாற்றுவதும், பாபச்செயல்கள் புரிவது தீரம் என்று வஞ்சிப்பதுமே பெரும்பாலான திரைப்படங்களின் நோக்கமாகிவிட்டது. வெளிநாட்டுப் படங்களின் ஆபாஸக் காட்சிகளும், அவைகளைக் காப்பியடிக்கும் உள்

நாட்டுத் திரைப்படங்களும் மனித சமூகத்தைச் சீர்குலைத்து வருகின்றன. இவைகளைப் பொழுது போக்கவோ, போதனை பெறவோ, வேறு கவர்ச்சி கொண்டோ காணச் செல்லும் ஆண்களும் பெண்களும் தயவு செய்து, தங்கள் நிலையையும், தம் முன்னோர்கள் சேர்த்து வைத்துப் போன பெருமைகளை யும் எண்ணிப் பார்க்க வேண்டும். நல்ல கருத்தும் போதனை யும் உள்ள தரமான திரைப்படங்களை மட்டுமே பார்ப்பது என்று உறுதி கொள்ள வேண்டும்; அல்லது சினிமாவில் உள்ள ஆபாஸ—அலங்கோலக் காட்சிகளால் சிறிதும் பாதிக் காதவாறு தம்மைப் பண்படுத்திக் கொள்ள வேண்டும். இந்தப் பிரக்ஞை ஏற்பட்டால் போகப் போக சினிமா பார்க்கும் ஆர்வமே நீங்கிவிடும். இதுதான் உத்தமமான நல்வாழ்வுக்கான வழி. தீமைகளுக்கு இடையிலேயேயும் தூய்மையாய் வாழும் திடசித்தத்தை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

இன்று நடமாடும் தைவமாகத் திகழ்ந்து, பாரதத்தின் புராதனமான கலை, கல்வி, கலாசாரம், நற்குணம் ஆகிய வைகளை மறுபடியும் தழைக்கச் செய்யப் பாடுபடும் ஆசார்யச் சிரேஷ்டர்கள் அடிக்கடி சினிமாவின் தீய விளைவுகளை எடுத்துக் கூறி எச்சரித்து வருகிறார்கள். பாரத மக்களின் நீதி-நெறி உணர்ச்சிகளும், தார்மிக சிந்தனைகளும் குறைந்து வருவதற்கும், குறிப்பாக நம் இளைஞர் சமுதாயம் சீர்குலைந்து வருவதற்கும் இக்காலத்துச் சாபக்கேடுகளான சினிமாக்களே காரணம் என்று உள்ளமுருகி அறிவுறுத்துகிறார்கள்.

## 2. சிகரெட் பிடித்தல்

கலிகாலக் கவர்ச்சியில் இந்தக் கொடுமையும் ஒன்று. இதனால் நம் வாலிபர்களின் உடல்—உள்ளம் இரண்டுமே வலுவழிந்து, தூய்மையிழந்து நலிவதைக் கண்டு பரிதவிக் கும் துர்ப்பாக்கியம் பலருக்கு ஏற்பட்டிருக்கிறது. இந்த அதம—அபஸ்மார வழக்கத்தை உடனடியாக விட்டுத் தொலைத்தால், இவர்களும் நலமாக வாழ முடியும்; இவர்

களுடைய சந்ததிகளையும் நடைப்பிணங்களாக்காமல், தேஜஸ்விகளாகவும் மேதாவிகளாகவும் உருவாக்க முடியும், எம்பெருமான்தான் இவர்களுக்கு நல்ல புத்தியைக் கொடுத்து, நல்வழிப் படுத்த வேண்டும்.

## 3. ஆடம்பரச் செலவுகள்

கலிகாலக் கவர்ச்சிகள் காரணமாகவே பலர் ஆடம்பரச் செலவுகளை 'சமூக அந்தஸ்து' என்கிற போலிகௌரவத்திற்காகச் சங்கடபபட்டுக கொண்டும் செய்து வருகிறார்கள். இது மிக ஆபத்தானவழி. இது வாழ்க்கையை நரகமாக்கி விடும்; சந்ததிகளை உதவாசகரையாககி மிகவும் தாழ்ந்த நிலைக்குக் கொண்டு தள்ளிவிடும் ஆகையால், நம் சமூகத்தார் குறிப்பாக நடுத்தரக் குடும்பத்தார்கள் ஆடம்பரச் செலவுகளை ஒதுக்கிவிட வேண்டும்.

கலிகாலக் கவர்ச்சிகள் நம் வாழ்க்கையைச் சீர்குலைக்கும் கொடுமைகள் என்பதை உணரவேண்டும். இந்த உணர்வு நிலைத்திருக்க, இதன் மூலம் நல்வழிப் பட்டு மேன்மையை நோககி முன்னேற, அருள்மொழி வள்ளல் நம்மாழ்வாரின் இந்தப் பாசுரங்களைத் தினமும் அநுஸந்தித்து வரவேண்டும்:—

தானே யுகமெலாம்,—தானே படைத்திடந்து,
தானே புண்டுமிழ்ந்து,—தானே யாள்வானே.

—திருவாய்மொழி 10. 5. 3,

நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்,
சீரார் சுடாக ளிரண்டாய்ச் சிவனாய் அயனாய்,
கூரார் ஆழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால்
வாராய், ஒருநாள் மண்ணும விண்ணும் மகிழவே.

—திருவாய்மொழி 6. 9. 1.

நாட்டில் பிறந்தவர் நாரணற் காளன்றி யாவரோ,
நாட்டில் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா,
நாட்டை நலியும் அரக்கனை நாடித் தடிந்திட்டு,
நாட்டை யளித்துய்யச் செய்து நடந்தமை கேட்டுமே?

—திருவாய்மொழி 7, 5. 2.

அருளா தொழிவாய் அருள்செய்து, அடியேனைப்
பொருளாக்கி யுன்பொன் னடிக்கீழ்ப் புகவைப் பாய்,
மருளே யின்றி உன்னை என்னெஞ்சத் திருத்தும்,
தெருளே தருதென் திருநாவாய் என்தேவே!

—திருவாய்மொழி 9. 8. 8.

ஸ்ரீ:

## அனுபந்தம் 15

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# ஸ்ரீவைஷ்ணவப் பண்பு

**ப**கவத் பக்தி, பாகவத பக்தி—இந்த இரு ஸ்வரூபச் சிறப்புகளால் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு என்றும் ஏற்றம் உண்டு. பகவானிடம் பக்தி பூண்டிருப்பது ஆஸ்திக சமுதாயத்திற்குப் பொதுப் பண்பு பகவானிடம் பக்தி கொண்டு ஸத்புருஷர்களாகத் திகழும் பாகவதர்களிடம் மதிப்பும், பணிவும் கொண்டு பழகுவதே பாகவத பக்தி, இதில் மேலும் பரந்த உள்ளத்துடன், தெய்வபக்தி கொண்ட யாவரிடத்திலும் பணிவும், பரிவும் காட்டி ஸௌஜன்யமாகப் பழகுவதுதான் இந்தக் காலத்திற்கு மிகவும் இன்றியமையாத **ஸ்ரீவைஷ்ணவப் பண்பு.**

'திருநாரணன் சரண் திண்சரணாகத் துணிந்தடைவோர்' களான வைணவப் பெருமக்களிடமோ மேலும் இணக்கமும், பணிவும், மரியாதையும் கொண்டு பழகுவது சாலவும் சிறந்த **ஸ்ரீவைஷ்ணவப் பண்பு.** இந்தப் பண்பு நம் சமுதாயத்தில் வளர வேண்டும்; அப்போதுதான் 'கூடியிருந்து குளிர்ந்து' மேன்மையுடன் வாழ முடியும். இந்தப் பண்பை நம் ஆசாரியர்களும் ஆழ்வார்களும் வலியுறுத்தியிருக்கிறார்கள்.

'தொல்லநுள் மாறன் துணையடிக்கீழ் வாழ்வை யுகக்கும் இராமாநுசமுனி வண்மை போற்றும் சீர்மையன்' வித்தகன், வேதியன் வேதாந்த தேசிகன், பாகவத அபசாரத்தின் கொடிய தன்மையைக் காட்டிய திருவாக்கு:

''திமிம் கில திமிங்கிலோ கிலதி தத்கிலஸ் தம் ததா
தமப்யத ச தத்கிலஸ் ததிஹ பச்ய கர்மக்ரமே |
ஸமஸ்தவ்ருஜிநோ ததிக்ரஸநடப் பகும்போத்பவம்
நிவ்ருத்திமபி தர்மமத்தி அநகத்வ விந்நிக்ரஹ: || ''

—ஸங்கல்ப ஸூர்யோதயம்

(ப்ரபத்தியினால் ஏற்படும் நன்மைகளை யெல்லாம் மிகப் பெரிய திமிங்கிலம் சிறிய திமிங்கிலங்களை விழுங்கி விடுவதைப் போல், விழுங்கிவிடக்கூடியது பாகவதாபசாரம் என்னும் கொடிய பாபம்.)

'புனிதன் திருவரங்கத் தமுதாகிய புண்ணியன்' திருவரங்கத்தமுதனார் வேண்டும் எம்பெருமானார் தொண்டர்க்குத் தொண்டு புரியும் பேறு:

'இன்புற்ற சீலத் திராமானுச, என்றும் எவ்விடத்தும்
என்புற்ற நோயுடல் தோறும் பிறந்திறந்து, எண்ணரிய
துன்புற்று வீயினும் சொல்லுவ தொன்றுண்டுன்
தொண்டர்கட்கே
அன்புற் றிருக்கும் படி, என்னை யாக்கியங்
காட்படுத்தே. ||

—இராமானுச நூற்றந்தாதி 108

முடிவேந்தர் சிகாமணி, பொன்புரையும் வேற் குலசேகர ஆழ்வாரும் முக்தி தரும் முகுந்த மாலையில் பகவத் பக்தர்களின் தொண்டர் தம் தொண்டர்க்கும் தொண்டர்க்கும் தொண்டாற்ற விரும்புவதையே வேண்டுவது:

"மஜ்ஜந்மந: பலமிதம் மதுகைடபாரே!
மத்ப்ரார்த்தநீய மதநுக்ரஹ ஏஷ ஏவ |
த்வத் ப்ருத்ய ப்ருத்ய பரிசாரக ப்ருத்ய ப்ருத்ய
ப்ருத்யஸ்ய ப்ருத்ய இதி மாம் ஸ்மர லோகநாத! ||

— முகுந்த மாலா 27

—(ஹே லோகநாதா! அடியேனைத் தேவரீருடைய தொண்டர்கரும் தொண்டர்க்கும் தொண்டர்க்கும் தொண்டர்க்கும் தொண்டர்க்கும் தொண்டர்க்கும் தொண்டனாகவே எண்ணி அநுக்ரஹிக்க வேண்டுகிறேன். என் பிரார்த்தனை இதுதான்; நான் வேண்டும் அநுக்ரஹமும் இதுவே, நான் பிறவி பெற்றதன் பயனும் இதுதான்.)

மன்னிய சீர் தொண்டரடிப் பொடியாழ்வார், பாகவதாபசாரம் பட்டு பெருமையிழக்கும் அறிவிலிகளின் தாழ்ச்சியை வெகுண்டு காட்டுவது:

"அமரவோ ரங்க மாறும் வேதமோர் நான்குமோதி,
தமர்களில் தலைவ ராய சாதியந் தணர்க ளேலும்,
நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோ ரளவில், ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும் அரங்கமா நகரு ளானே!"

—திருமாலை 43

'அருமறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு, துன்பமற்ற மதுரகவி தோன்றக் காட்டும் தொல்வழியே நல்வழிகள் துணிவார்கட்கே என்று வேதாந்த குரு வந்தித்த நம்மாழ்வார்

தம்மைத் திருமால் அடியார்களுக்கும் அடியார்களுக்கும் அடிமை கொண்டவராகப் பெருமைப்பட்டுக் கொள்வது:

*''குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்து, எத்தனை*
*நலந்தா னிலாதசண் டாளசண் டாளர்க ளாகிலும்,*
*வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணற் காளென்றுள்*
*கலந்தார், அடியார் தம்மடி யாரெம் மடிகளே''*

—திருவாய்மொழி 3.7.9.

*அடியார்ந்த வையமுண் டாலிலை யன்னவ சஞ்செய்யும்*
*படியாது மில்குழ விப்படி யெந்தைபி ரான்றனக்கு,*
*அடியார் அடியார் தம்அடி யார்அடி யார்தமக்*
*கடியார் அடியார் தம்,அடி யாரடி யோங்களே.''*

—திருவாய்மொழி 3.7.10

*''தெரிதல் நினைதல் எண்ணல் ஆகாத் திருமாலுக்கு,*
*உரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்*
*தெரியச் சொன்ன ஓரா யிரத்து ளிப்பத்தும்,*
*உரிய தொண்ட ராக்கும் உலகம் உண்டாற்கே.''*

—திருவாய்மொழி 6.9.11.

ஆய்ந்த பெருஞ் சீரார் சடகோபன் ஸகலமும் ஸ்ரீமந் நாராயணனே என்று பரத்துவப் பிரகடனம் செய்தருளியது:

*''உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும்வெற் றிலையுமெல்லாம்*
*கண்ணன், எமபெருமா னென்றென் றேகண்கள் நீர்மல்கி,*
*மண்ணினுள் அவன்சீர் வளம்மிக் கவனூர் வினவி,*
*திண்ண மென்னிள மான்புகு மூர்திருக் கோளூரே''*

—திருவாய்மொழி 6.7.1.

நம்மாழ்வாரர் திருவடிகளே சரணம்

குலசேகராழ்வார் திருவடிகளே சரணம்

தொண்டரடிப் பொடியாழ்வார் திருவடிகளே சரணம்

எம்பெருமானார் திருவடிகளே சரணம்

திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்

**சீரார் தூப்புல் திருவேங்கட முடையான் திருவடிகளே சரணம்**

---

ஸ்ரீ:

<u>அனுபந்தம் 16</u>



ஸ்ரீமதே ராமானுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# *சாத்துமுறை*

ஸர்வதேஶதஶாகாலேஷ்வவ்யாஹதபராக்ரமா ।
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாமபிவர்த்ததாம் ॥
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா ப்ரதிவாஸரமுஜ்ஜ்வலா ।
திகந்தவ்யாபிநீ பூயாத் ஸா ஹி லோகஹிதைஷிணீ ॥
ஸ்ரீமந் ஸ்ரீரங்கஶ்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய ।
ஸ்ரீமந் ஸ்ரீரங்கஶ்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய ॥
நமோ ராமாநுஜார்யாய வேதாந்தார்த்தப்ரதாயிநே ।
ஆத்ரேயபத்மநாபார்யஸுதாய குணஶாலிநே ॥
ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம் ।
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேஶிகம் ॥

வாழி யிராமா னுசப்பிள்ளான் மாதகவால்
வாழு மணிநிக மாந்தகுரு—வாழியவன்
மாறன் மறையுமிரா மானுசன் பாடியமும்
தேறும் படியுரைக்குஞ் சீர்.

வஞ்சப் பரசமயம் மாற்றவந்தோன் வாழியே
மன்னுபுகழ்ப் பூதூரான் மனமுகப்போன் வாழியே
கஞ்சத் திருமங்கை யுகக்கவந்தோன் வாழியே
கலியனுரை குடிகொண்ட கருத்துடையோன் வாழியே

செஞ்சொல் தமிழ்மறைகள் தெளிந்துரைப்போன் வாழியே
திருமலைமால் திருமணியாய்ச் சிறக்கவந்தோன் வாழியே
தஞ்சப் பரகதியைத் தந்தருள்வோன் வாழியே
தண்டமிழ்த்தூப் புல்திருவேங் கடவன்றன் வாழியே.

நானிலமுந் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ
மாநகரின் மாறன் மறைவாழ—ஞானியர்கள்
சென்னியணி சேர்தூப்புல் வேதாந்த தேசிகனே
இன்னுமொரு நூற்றாண் டிரும்.

வாழியணி தூப்புல் வருநிகமாந் தாசிரியன்
வாழியவன் பாதார விந்தமலர்—வாழியவன்
கோதிலாத் தாண்மலரைக் கொண்டாடிக் கொண்டிருக்கும்
தீதிலா நல்லோர் திரள்.



## திருநாட் பாட்டு

வாதா சனவர ரிவரென வருமா பாடியம் வகைபெறுநாள்
வகுளா பரணப் பெருமாள் தமிழின் வாசி யறிந்திடுநாள்
பேதா பேதம் பிரம மெனுவகை பிரமந் தெளிவுறுநாள்
பேச்சொன் றுக்குச் சததூ டணியைப் பேசிய தேசிகனாள்
தீதா கியபல மாயக் கலியைச் சிக்கென வென்றிடுநாள்
திக்கெட் டும்புகழ் சீபா டியத்தைத் தெளிய வுரைத்திடுநாள்
ஓதா தோதும் வேதாந் தாரிய னுதயம் செய்திடுநாள்
உத்தம மான புரட்டா சித்திரு வோண மெனுந்நாளே.

செங்கமலத்தய னன்னவரென்று புகழ்ந்து மகிழ்ந்திடுநாள்
சீர்கொளிராமாநுசவெனு மந்திரம் பதிகளில் - வாழ்ந்திடு நாள்,
செங்கயல் வாளைகள் சேர்வயல் சூழ்ந்த வரங்கர் சிறந்திடு - நாள்,
சிந்துர வெற்பிடைச் சென்று திகழ்ந்து சிரீபதி - வாழ்ந்திடுநாள்,
தெங்கொடு மாங்கனி தேன்சுனை வேங்கடத்தீசர் - பிறந்திடுநாள்,
சீர்மதி யாகம மௌலிதந் தேசிகர் பிறந்து - வளர்ந்திடுநாள்,
பங்கய மாமலர் மங்கை குணங்களைத் தெளிய - வெளியிடுநாள்,
பார்திகழ் பாத்திரபதத் திருவோணமெனுந் - திருநன்னாளே.

𑌶𑍍𑌰𑍀𑌃

𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃

𑌶𑍍𑌰𑍀𑌨𑍈𑌨𑌾𑌰𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌰𑌚𑌿𑌤𑌂

𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑌙𑍍𑌗𑌲𑌾𑌶𑌾𑌸𑌨𑌮𑍍

𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌃 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌕𑍇𑌸𑌰𑍀 ।
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑍋 𑌮𑍇 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌸𑌦𑌾 𑌹𑍃𑌦𑌿 ॥
𑌶𑍍𑌰𑍀𑌮𑌲𑍍𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌜𑌯𑌧𑍍𑌵𑌜𑌮𑍍 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌕𑍁𑌲𑍋𑌦𑍍𑌭𑍂𑌤𑌂 𑌵𑌰𑌦𑌾𑌰𑍍𑌯𑌮𑌹𑌂 𑌭𑌜𑍇 ॥

---

𑌸𑌰𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌯 𑌸𑌿𑌂𑌹𑌾𑌯 𑌕𑌵𑌿𑌵𑌾𑌦𑌿𑌨𑌾𑌮𑍍 ।
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑌾𑌯 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌾𑌯 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥
𑌨𑌭𑌸𑍍𑌯𑌮𑌾𑌸𑌿 𑌶𑍍𑌰𑍋𑌣𑌾𑌯𑌾𑌮𑌵𑌤𑍀𑌰𑍍𑌣𑌾𑌯 𑌸𑍂𑌰𑌯𑍇 ।
𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌨𑍍𑌵𑌯𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑍁 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌾𑌯 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥
𑌪𑌿𑌤𑌾 𑌯𑌸𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌤𑌸𑍂𑌰𑌿𑌃 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑌯𑌜𑍍𑌵𑌨𑌃 ।
𑌪𑍌𑌤𑍍𑌰𑍋 𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌸𑍍𑌤𑍋𑌤𑌾𑌰𑌾𑌮𑍍𑌬𑌾𑌯𑌾𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌙𑍍𑌗𑌲𑌮𑍍 ॥

वेङ्कटेशावतारोऽयं तद्घण्टांशोऽथवा भवेत् ।
यतीन्द्रांशोऽथवेत्येवं वितर्क्यायास्तु मङ्गलम् ॥

श्रीभाष्यकारः पन्थानमात्मना दर्शितं पुनः ।
उद्धर्तुमागतो नूनमित्युक्तायास्तु मङ्गलम् ॥

यो बाल्ये वरदार्यस्य प्राचार्यस्य परां दयाम् ।
अवाप्य वृद्धिं गमितस्तस्मै योग्याय मङ्गलम् ॥

रामानुजार्यादात्रेयान्मातुलात्सकलाः कलाः ।
अवाप विंशत्यब्दे यस्तस्मै प्राज्ञाय मङ्गलम् ॥

श्रुतप्रकाशिका भूमौ येनादौ परिरक्षिता ।
प्रवर्तिता च पात्रेषु तस्मै श्रेष्ठाय मङ्गलम् ॥

सांख्य[illegible] कृतिभिर्जनान् ।
यस्संजीवयामास तस्मै सेव्याय मङ्गलम् ॥

यः ख्यातिमान[illegible] वैष्णवे जने ।
[illegible] प्राप्तस्तस्मै भव्याय मङ्गलम् ॥

यस्मादेव मया सर्वं शास्त्रमग्राहि नान्यतः ।
तस्मै वेङ्कटनाथाय मम नाथाय मङ्गलम् ॥

पित्रे ब्रह्मोपदेष्ट्रे मे गुरवे दैवताय च ।
प्राप्याय प्रापकायास्तु वेङ्कटेशाय मङ्गलम् ॥

यः कृतं वरदार्येण वेदान्ताचार्यमङ्गलम् ।
आशास्तेऽनुदिनं सोऽपि भवेन्मङ्गलभाजनम् ॥

---

कवितार्किकसिंहाय कल्याणगुणशालिने ।
श्रीमते वेङ्कटेशाय वेदान्तगुरवे नमः ॥

वादिद्विपशिरोभङ्गपञ्चाननपराक्रमः ।
श्रीमद्वेङ्कटनाथार्यश्चिरं विजयतां भुवि ॥

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः

---

ஸ்ரீ:

# ஆஸ்திகர்களின் அனுக்ரஹம்

## (Blessings of the Godly and the Good)

[ பொதுவாக ஸத்க்ரந்தங்களை வெளியிடுவதன் மூலம் பக்தி ப்ரசாரம் செய்யும் எம்முயற்சியையும், குறிப்பாக ஆசார்யர்களின் திருநக்ஷத்ரங்களை முன்னிட்டு யாம் செய்யும் இது போன்ற சிறு கைங்கர்யங்களையும் பல ஆஸ்திகப் பெரியோர்களும் அன்பர்களும் பாராட்டி அனுக்ரஹித்துள்ளனர். அத்தகைய அனுக்ரஹங்களிலிருந்து சில வரிகளை மட்டும் இங்கே கொடுத்துள்ளோம்.

—லிப்கோ பதிப்பகத்தார் ]

1. ஒப்பிலியப்பன் ஸந்நிதி, வித்வான் சிரோமணி வித்யா விசாரத ஸ்ரீ உபய வே. **வங்கீபுரம் நவநீதம் ஸ்ரீராம தேசிகாசார்ய ஸ்வாமி :**

"LIFCO packets பலர் பெற்று பக்தியுடன் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள் ..........உங்கள் கைங்கர்யத்தைப் புகழ்ந்து சென்றார்கள். LIFCO யோகக்ஷேமத்தைப்பற்றி எப்பொழுதும் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் கைங்கர்யம் மேன்மேலும் வளர்க."

2. **Sri P. K. Aravamudhan,** Asst. Engineer, P.W.D., 44, Anaikatti Street, Kancheepuram-3 :

"His Holiness Srimad Andavan has perused the Vishnu Sahasranamam copy presented to him by LIFCO. கீழ்க்கண்டவாறு ஸாதித்தாயிற்று. "........ புத்தகத்தின் பொருளைப் பற்றிய விஷயங்கள் எந்த மூலை முடுக்கிலிருந்தாலும் பொறுக்கி எடுத்துச் சேர்த்து விடுவார்கள். அந்தந்த ஸ்தோத்ரத்தை எந்த எந்த ஆசார்யர்கள்

எப்படி எப்படி அநுஸந்தானம் பண்ணச்சொன்னர்களோ அந்தந்த முறைகளையும் விவரித்து, எந்தப் பலனை அடைய எப்படி பாராயணம் செய்யவேண்டும் என்னும் விஷயங்களையும், அப்பொருளைப் பற்றின விஷயங்கள் எல்லாவற்றையும் ஒன்றுவிடாமல் அந்த புத்தகத்திலேயே லிப்கோ பதிப்பகத்தார் சேர்த்து விடுவார்கள். அவர்களுடைய புத்தகத்துக்கு நிகர் அவர்களுடைய புத்தகமே.''

3. ஸ்ரீ உபய வே. **துவார் முடும்பை, கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி, B.A., L.T.,** 20, உஸ்மான் ரோடு, தி. நகர், மதருஸ்-17 :

"நிதிவசதி மெலிந்திருப்பினும், மடாதிபதிகள், தனவான்கள், பொதுஸ்தாபனங்கள் மட்டுமே செய்யத் துணியக்கூடிய பணியினில் உங்கள் லிப்கோ ஸ்தாபனம் இறங்கித் தொண்டாற்றுகிறது. இவ்விறைப் பணியில் நீங்களும் உமது ஸ்தாபனத்தோரும் மேன்மேலும் சலியாமல் உழைக்கும் திறன் அருளவேண்டும் என்று இறைவனை இறைஞ்சுகிறேன். **எங்கும் நிறை இறைவன், மடாதிபதிகள், தனிகர்கள், பொதுப்பணி ஸ்தாபனங்களின் நிர்வாகிகள் ஆகியோரை உமது தொண்டுக்கு உற்ற உதவி செய்ய ஊக்கித் திருவருள் புரிவாராக!**"

4. தமிழ்க்கவி பூஷணம், உபன்யாஸ கேஸரி, முருகன் அருள் பெற்ற முனிவர் ப்ரஹ்மஸ்ரீ **கி. வா. ஜகந்நாத அய்யர்**, ஆசிரியர், "கலைமகள்", சென்னை-4 :

"...... நெற்றிக்கு அணி செய்யும் குறிகளை, இட்டுக் கொள்வதை வற்புறுத்தும் தங்கள் கொள்கையை நான் ஆதரிக்கிறேன்......"

5. **The Hindu,** Madras-2 (9-2-1958):

"...The LIFCO should be commended for the sense of service which alone should have prompted them to publish these handy introductions to the Tamil Classics."

6. **Sri A. L. Mudaliar,** M.D.L.L.D., D.SC., D.C.L.,
Vice-Chancellor, Kensington,
Kilpauk, Madras-10:

"...I am glad you are doing this great work. I wish your enterprise every success...".

7. **Sri Rama Mandir,** Calcutta:

"...Many of our friends greatly welcomed the gift donated by The Little Flower Co., Madras and expressed their appreciation of the valuable work..."

8. **The Executive Officer,**
**Sri Athinathar Alwar Devasthanam,**
Alwarthirunagari, Tirunelvelly Dt.:

"...Your gracious gift was greatly appreciated by one and all...In fact, your packet was the one talk of this sacred town on that sacred day..."

9. **A retired Government Official**
of Srivilliputhur:

"I really appreciate the work done by you in the cause of uplifting the degenerated Hindus in these days of Atheism and Agnoticism."

10. ப்ரஹ்மஸ்ரீ மஞ்சக்குடி கை. ராஜகோபால சாஸ்திரிகள் :

"ஆச்சரியம், பாக்யத்திற்கு இருப்பிடமானவர்களே! என்ன சொல்லப்போகிறேன்! பார்க்க வேண்டியதைப் பார்த்தேன். அதியற்புதமான கிரந்தமாலை. இங்குதான் உள்ளது. இத்தகைய கிரந்தரத்னங்கள் வேறெங்கு பார்த்தோம்? லிப்கோ என்று பெயருள்ள காரியாலயத்தில் நன்றாகப் பார்த்தீர்களா? மஹோபகாரம் செய்யப்பட்டது ஆஸ்திக உலகுக்கு......ஆசந்த்ரார்க்கம் இதே முறையில் மஹோபகாரம் செய்ய வேண்டுமென்றும் ...... ஸ்ரீ ஸீதா ராமன் க்ருபையால் லிப்கோ ஸ்தாபநத்திற்கு ஸர்வ மங்களங்களும் உண்டாகவேண்டுமென்றும் பிரார்த்திக்கிறோம் ....."

11. **Sri K. S. V. S. Manian,** New Delhi-1 :

"I am jealous of the LIFCO founder for collecting all punyas (புண்யங்கள்) by these valuable publications."

12. **Sri S. Sampath,** Calcatta-29 :

"...I read your book 'Purattasi Tiruvona Tirunal'. But for your gem book I would have continued to be in ignorance of many great things and ideas."

13. **Brahmasri K. Venkatrama Iyer,** B.A., G.D.A., F.C.A., T. Nagar, Madras-17 :

"...The LIFCO books are unique, for no other Publishers, as far as I know, combine spiritual services through their publications."

14. **Sri K. Rathnam,** Madras-24 :

"...May Lord Sri Rama bless the LIFCO to progress from strength to strength !"

15. **Sri Ubhaya Ve. K. S. Thathachariar,** General Manager and Power of Attorney Agent to H. H. Sri Alagia Singar of Sri Ahobila Mutt, Srirangam :

"The distribution of Srichoornam and Tirumann by LIFCO on this auspicious day...is indeed a unique and reformatory service to enfold our present day Sri Vaishnava youngsters in the sidhantic tradition of Sri Ramanujacharya, enshrined, nurtured and portrayed by this great Acharya Sri Vedantha Mahadesika."

16. Prof. **N. R. Tiruvenkatacharya, B.A.,** Scientific Astrologer, Madras-2 :

"I do rejoice over your fervent spiritual attitude and enthusiastic religious activities."

17. Sahityalankara, Tiruppani—Thilakam, Pandit, Siromani, Sri Ubhaya Ve. **A. S. Ranganatha-charya Swami,** Thanjavur-1 :

"......லிப்கோ கம்பெனியார் சிறந்த ஆழ்ந்த சிந்தனை யுடன் அவ்வப்போது வெளியிட்டுவரும் பல அரிய நூல் களுக்கு, உலகம் பெரிதும் கடைப்பாடுடையதாகும்...... எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தது போல், "வாழியணி

திகமார்கதகுரு" என்ற சிறுநூலை வெளியிட்டு ஸ்ரீவைஷ்ணவ தாஸர்களுக்குக் கிடைக்குமாறு செய்த மஹோபகாரத்திற்கு என்ன கைம்மாறு செய்ய இருக்கிறது......"

18. **Sri Ubhaya Ve. V. Annaswamy Ayyangar,** President, The Asthika Sabha, Tanjore :

"...We pray that yourself and co-workers and your firm LIFCO should grow from strength to strength to spread these saintly kainkaryams all over the country..."

18. ஸ்ரீ P. சுவாமிநாதன், தருமபுரம் :

லிப்கோ தெய்வீகப் புத்தகக் கண்காட்சியைப் பார்க்கும் பாக்கியம் பெற்றேன். இக்கண்காட்சிப் பணி மத ஸ்தாபனங்கள் செய்யவேண்டியவை. இதனை **லிப்கோ** புத்தக நிலையத்தார் செய்வது மிக மிக உயர்ந்த செயல்.

20. **Sri A. S. V. Varadachari,** Madras-4 :

"...It is really appreciable of your immense service towards our great Acharyas and our valuable tradition in this modern and hard days in bringing out the book, "பெரியாழ்வார் பேரருள்"......It indeed shows your eagerness in propagting many hidden truths which are endowed to us by our great Acharyas..."

---

ஸ்ரீ :

# லிப்கோவின் தைவிகப் பணி

வேதம் தமிழ் செய்த மாறன் நம்மாழ்வாரின் அருட் செல்வத்தையும், பல மஹான்களின் நல்லாசிகளையும் மூலதனமாகக் கொண்டு சிறு மலர் நிறுவனம் (லிட்டில் ப்ளவர் கம்பெனி) ஆரம்பிக்கப்பட்டது. 'சிறு மலர்' நம்மாழ்வாரின் அருள் மலரான வகுளத்தையும் (மகிழம் பூ), நம்மாழ்வாரின் 'அருள் பிரபந்த'மான (நம்மாழ்வாரின் தமிழ் வேதத்திற்கு அங்கமாகத் திருமங்கை மன்னன் அருளிய) சிறிய திருமடலையும் குறிப்பதோடு, மற்ற மதத் தாருக்கும் புனிதமான அருள் வளர்க்கும் சின்னமாகவும் அமைந்திருப்பதால், 'சிறு மலர்' எங்கள் புத்தக வெளியீட்டு நிறுவனத்தின் சிறப்புப் பெயராக அமைந்தது மஹான்களின் அருளாசியால்தான்.

இந்த அருட்செல்வம்தான் நாங்கள் கல்வித்துறை,தார் மிகத்துறை வெளியீடுகளில் சிறப்பாகப் பணி புரிந்து, புகழ்பெற உறுதுணையாக உதவி வருகிறது. இந்த அருட் செல்வம் எங்களுக்கு எப்படிக் கிடைத்தது? பல மஹான் கள் எங்களை அருள் கூர்ந்து ஆசீர்வதித்தது ஊக்குவிக்க, எங்கள் நிறுவனத்திலே அவ்வப்போது பொன்னடி சார்த் தியிருக்கிறார்கள். அந்த மஹனீயர்களின் பாத தூளிகள் பட்டுப் புனித மடைந்ததன் பிரதிபலிப்பாக, 'கல்வி யறிவோடு பக்தி-நெறிகளையும் பரப்புவதே சாலவும் சிறந்த திருத்தொண்டு' என்பதைத் தொழில் தர்மமாகவும் வாழ்க்கை இலட்சியமாகவும் கொண்டிருக்கிறோம். பொருட்செல்வத்தை வளர்க்க இத்திருத்தொண்டு ஊக்க

மளிக்காமல் இருந்த போதிலும், பல்லாயிரக்கணக்கான அன்பர்களின் போற்றுதலும் பாராட்டுதலுமே எங்களை மேலும் மேலும் இந்த சிரமஸாத்யமான பணியில் ஈடுபடுத்தி வருகின்றன. "இப்படிப் பல நல்ல பக்தி-நெறி நூல்களை நஷ்டத்தையும் பொருட் படுத்தாமல் தொடர்ந்து வெளியிட்டு அருட்செல்வத்தை நிறைய சேமித்துக் கொண்டிருக்கும் லிப்கோ நிறுவனத்தாரை நினைத்தால் எங்களுக்குப் பொறுமையாக இருக்கிறது!" என்று ஓர் அன்பர், புதுதில்லியிலிருந்து (3-7-1968) விஜயம் செய்தவர் எழுதியிருக்கிறார். இப்படிப் பலபல ஆசிகள்!

பக்தியும் பண்பாடும் அறமும் அறிவும் சிறந்து வளர்ந்திருக்கும் பாரதபூமியில், நம் இளந் தலைமுறைகள் அந்த அருட் செல்வங்களைப் பெற்று மேன்மையடைய வேண்டும், இதன் மூலம் ஸர்வஜன க்ஷேமங்களும் வளர வேண்டும் என்னும் நம்பிக்கையுடன் பரம சிரத்தையோடு இத்தைவிகப் பணிக்கு எங்களை நாங்கள் அர்பணித்துக் கொண்டிருக்கிறோம்.

ஆன்றோர்களையும் அன்பர்களையும் எங்களை ஊக்குவித்து வளர்த்தருள வேண்டுகிறோம்.

—லிப்கோ பதிப்பகத்தார்

Pages அ—1 to அ—120 printed by The Bharatham Press, Madras-17 Phone No: 443726; Pages அ-121 to அ-128 Printed at Hindi Prachar Press, Madras-17 Phone No: 441824; Paper supplied by The General Papers Ltd., 16, Armenian St,, Madras-1 Phone No. 25166; Binding done by The S. M. Book Binding Works, Madras-14 Phone No. 72979.